பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம்

ஷமாயிலு முஹம்மதின் (ஸல்)

# கண்மணி நபிகள் நாதரை காண்போம் வாரீர்



அண்ணல் நபி (ஸல்) அவர்களின்

அழகுத் தோற்றம் அருமை குணங்கள்

# அகத்தின் அழகு முகத்தில்

உலகில் உயர்வான நற்காரியங்களைச் செய்து முடிக்க இறைவனால் தோற்றுவிக்கப்பட்ட (நபிமார்கள்) இறைதூதர்களை நாம் கண்ணுறுகின்றோம். அவர்கள் உருவஅமைப்பு தோற்றம் போன்ற அங்க லட்சணங்கள் குறைவற்ற நிறைவான பேரழகு பொருந்திய மனித அம்சங்கள் அனைத்தும் அப்படியே முழு உருவெடுத்தாற் போன்று தென்படுகின்றனர்.

நாநில மக்களை நலமாக திருத்தி செப்பனிட்டு நவ நாகரீகப் பாதையில் நடைபோட்டுச்செல்ல வழி வகுத்த உத்தம தீர்க்கதரிசியர்களில் இறுதி ஏந்தல் எம்பெருமானார் முஹம்மது (ஸல்) அவர்களின் உருவத்தோற்றம் இவ்வகையில் . ஒரு ஈடற்ற எடுத்துக்காட்டாகவே அமைந்திருந்தது.

ஒரு மனிதருடைய உடலமைப்பில் பொருத்தமான அங்கங்கள் அமைந்து வடிவழகரமாக காட்சி தருவது, அவரது தெளிந்த உள்ளத்தை சீரிய நற்குணத்தை மேலான உணர்வு களைப் பிரதிபலித்துக்காட்டும் ஓர் ஒப்பற்ற கண்ணாடி போன்ற தாகும்.

இத்துறையில் வதன அலங்காரம், பேரழகு முகம், அவர்களது உள்ளக்கிடக்கையை அவர்களுல் அமைந்துள்ள வரலாற்றுப் பின்னணியை வெளிஉலகுக்கு எடுத்துக்காட்டும் ஒரு சிறந்த வரை—படமான படப்பிடிப்பு போன்றதாகும்.

உலகில் தோன்றிய உத்தமர்களுக்கெல்லாம் உச்சபீடத் தில் அமர்ந்து கண்ணிறைந்த ஒரு காட்சியாகக் கொண்ட அந்த அண்ணல் நபியவர்களின் அழகுமுகத்தை நமது ஊனக்கண்களால் கண்டுகளிக்கும் நற்பேறு நமக்கு கிடைக்கா விட்டாலும், அந்த அருமைவதனத்தின் அந்தஸ்தை, அவர்களின் ஒப்பற்ற செயல்திறமையை, உலகிற்குகந்த நல்லுபதேசம், நற் செய்தி, நன்மாராயம் இவைகளைக்கொண்டே ஓரளவு ஊகித்துக் கொள்ளமுடியும்.

இன்று அண்ணல் நபியவர்களின் அசல் உருவப்படம் நம்முன்னில் இல்லை. மேலும் அந்த அற்புத உருவத்தை படமாக வரைய, சிலையாக வடிக்க ஆரம்பகாலத்திலேயே அண்ணல் நபியவர்கள் தடைபடுத்தி நிறுத்திவிட்டனர்.

அன்று அவ்வாறு தடைபடுத்தாது இருந்தால் இன்று அவர்களின் அந்த உன்னத உருவத்தினை என்னபாடுபடுத்தி எத்தனை அற்புதங்களை அதனில் பிணைத்து, எத்தனை மௌட்டீக சடங்குகளை, விழாக்களை அதற்கு நிறுவி, இறுதியில் அதனையே வழிப்பாடு செய்யும் அளவுக்கு உலகம்





பொருளடக்கம்

வந்திருக்குமல்லவா? அவ்வித அனாச்சாரச் செயல் என்றும் ஏற்படாதிருக்கவே முற்கூட்டி இறைவன் அதனை தற்காத்து விட்டான்.

ஆனால் அன்று அண்ணலோடு அளவளாவிப்பழகி வாழ்ந்த அன்புத்தோழர்கள், அவர்களின் அங்க அமைப்பின் வடிவத்தை ஒவ்வொன்றாக விளக்கும் போது அதனை முன்னில் வைத்து பின்னணித்திரையை நமது மனக்கண்களால் நோட்டமிட்டால் உண்மையில் நன் நபியவர்களை நாம் நேரில் கண்டு சந்திக்கும் ஒரு அற்புதக்காட்சி போன்றே தென்படும்.

“இறையச்சம், பக்தி இவைகள் நல்லடியார்களின் வதனங்களுக்கு பேரொளி தந்து கொண்டிருக்கும்” என அந்த அண்ணல் நபியவர்கள் எடுத்துரைத்ததைப் போன்று, அவர்களின் அழகு வதனத்தை நோட்டமிட்டாலே அவர்களின் உள்ளக்கிடக்கையில் அமைந்த இறையச்சம் பக்திப் பரவசம் வெளிப்படையாக புலனாகும்.

திருத்தோழர்கள் அண்ணல் நபியவர்களின் பேரழகை எவ்வாறு கண்டு களித்து வர்ணனை செய்கின்றனர் என்பதைப் பாருங்கள்:—

1. நான் திருநபியர்களின் அழகு வதனத்தைப்பார்த்த மாத்திரத்திலேயே இத்திருவுருவம் உண்மை நபி என்பதைத் தவிர ஒரு பொய்யான மனிதருடைய உருவமாக இருக்க முடியாது என முடிவுகட்டிவிட்டேன்.

2. நான் எனது புதல்வனை கையில் பிடித்துக் கொண்டு முதன்முதலில் அண்ணலவர்களைச் சந்திக்கச் சென்றேன். அவ்வமயம் அங்கு கூடியிருந்த மனிதர்கள் இவர்கள் தாம் திரு நபியவர்கள் என எனக்கு அறிமுகப்படுத்தினார். அவர்களை நான் பார்த்தமாத்திரத்திலேயே மெய்யாக இவர்கள் உண்மை நபியாகவே இருப்பார்கள் என உணர்ந்து கொண்டேன்.

3. திரு மதீனா நகருக்கு சில மைல் தூரத்தில் ஒட்டகச் சந்தை ஒன்று கூடிற்று. பற்பலவணிகர்கள் ஒட்டகங்களை வாங்கவும் கொடுக்கவுமாக இருந்தனர். கூட்டத்தில் பல பெண்களும் கலந்துள்ளனர். அவ்வமயம் திரு நபி(ஸல்) அவர்கள் ஏதோ ஒரு வேலையின் நிமித்தம் வெளியில் சென்றவர்கள் அவ்வொட்டகச் சந்தையைப் பார்க்க நேர்ந்தது.

வணிகத்திற்காக வந்த ஒட்டகங்களில் அழகிய ஒட்டகம் ஒன்றைப்பார்க்கின்றனர். கண்ணைக் கவர்ந்த அந்த அழகு ஒட்டகம் மீது மா நபியவர்கள் மனது பதிந்து விடுகின்றது.





பொருளடக்கம்

அதனை விலை பேசி வாங்க நாடுகின்றார்கள். ஆனால் பணம் கையுடன் கொண்டு வரவில்லை.

மனதில் பதிந்துவிட்ட அந்த ஒட்டகத்தை வாங்காது சென்று விட்டால் வணிகர்கள் சந்தை முடிந்தால் தங்கள் சொந்த ஊருக்குப் பயணம் செய்துவிடுவர். இந்நிலையில் அவ்வொட்டகத்தை உடனடியாக வாங்க வேண்டும் என்ற நிர்பந்தம்.

உடனே அண்ணலவர்கள் அந்த ஒட்டகத்தின் விலையைக் கேட்டனர். வணிகர் கூறிய விலையை ஏற்று, பணம் வீடு சென்று அனுப்புவதாக வாக்குறுதி கொடுத்துவிட்டு, ஒட்டகத்தைக்கையில் பிடித்துக் கொண்டு மதீனாவை நோக்கிப் புறப்பட்டு விடுகின்றனர்.

திரு நபியவர்கள் வாங்கிச்சென்ற சில மணி நேரத்தில் அந்த வணிகர்கள் மத்தியில் ஒரே குழப்பம். என்ன முன்பின் தெரியாத ஒருவரிடம் ஒட்டகத்தை விலை பேசி அனுப்பி விட்டோமே! இதற்கிடையில் சாட்சிகள் எவருமில்லையே! பணத்தை கொடுத்து அனுப்பிவிடுவாரோ அல்லது அபகரித்து ஏமாற்றி விடுவாரோ! இவ்வாறு ஒரே போராட்டம்.* இச்சர்ச்சை நடந்து கொண்டிருந்த இடத்தில் கலந்திருந்த பெண்களில் ஒரு அம்மையார் கூறுகிறார்: "**எமது வணிகச் சகோதரர்களே!** அந்த ஒட்டகத்தை வாங்கிச் சென்ற மனிதர் பற்றி கலக்கம் எதுவும் கொள்ள வேண்டாம், ஒரு மனிதருடைய தோற்றத்தைப் பாரத்தாலே அவரது உள்ளக் கிடக்கையை புரிந்து படமாக்கிக் கொள்ளலாம். அவரது முகத்தைப் பார்த்தால் முழுமதி போன்று ஒளிவீசிக் கொண்டிருக்கின்றது.

அவரது பேச்சில் வாய்மையும், தூய்மையும் துளிர்த்து விளையாடுகின்றன. அவர் வீடு சென்றதும் பணத்தை அனுப்பாவிட்டால் அப்பணப் பொறுப்பை யானே ஏற்று எனது பணத்திலிருந்து கட்டி விடுகின்றேன் நீங்கள் எதற்கும் அஞ்ச வேண்டாம்" எனக் கூறி முடித்தார்.

பேச்சுக்கள் நிகழ்ந்து முடிந்த சில மணி நேரத்திற்குள் தூரத்திலிருந்து ஒரு மனிதர் ஒரு கையில் பணமூட்டையும், தோளில் கனத்த சுமையையும் சுமந்து வருவது தென்படுகிறது.

தூரத்திலிருந்து வந்து கொண்டிருக்கும் அந்நபரைக் காணக்காண இவர்கள் சஞ்சலம் சிறிது சிறிதாக கலைந்து சிந்தையில் தெளிவு பெறுகின்றனர். நம்பிக்கையின் பேரொளி ரேகை அவர்கள் வதனங்களில் பிரதிபலிக்கத் தொடங்கு

---

* 1. அறிவுப்பு: அப்துல்லாஹிப்னுசலாம் (ரலி)
2. அறிவிப்பு: அபூ ரம்ஃதா தைமீ (ரலி)




பொருளடக்கம்

கின்றது. பணப்பையுடனும் கனத்த சுமையுடனும் வந்து சேர்ந்த அந்த நபர் கூறுகின்றார்.

“வணிகத் தோழர்களே! சற்று நேரத்திற்கு முன்னர் உங்களிடம் ஒரு ஒட்டகத்தை விலை பேசி வாங்கிச் சென்ற அப்பெரியவர் அதன் பணத்தைக் கொடுத்து அத்துடன் உபரியாக இந்த பேரீத்தம் பழச்சுமையையும் அன்பளிப்பாக அனுப்பி உங்களுக்கு கொடுத்து வர கட்டளையிட்டுள்ளார்கள். இதனை ஏற்று மகிழ்வீர்களாக” என கூறி முடித்தார்.

இதனை முழுக்க கேட்டும் பார்த்துக் கொண்டிருந்த அந்த அம்மையார் கூறுகின்றார். “பார்த்தீர்களா! யான் கூறியது முற்றிலும் சரியாகி விட்டதல்லவா? அவரது திரு முகத்தைப் பார்த்த மாத்திரத்திலேயே உணர்ந்து கொண்டேன். இவர் ஒரு நம்பிக்கையின் திருஉருவம் என்று, இச்சம்பவத்தை அந்த ஒட்டகச்சந்தையில் கலந்திருந்த “தாரிகுப்னு அப்துல்லாஹ்” என்பவரே அறிவிக்கின்றார்.*

* நூல் : முஹ்ஸினே இன்சானிய்யத் பக்கம் 89
சீர துன்னபிய்யி மவாஹிபுல்லதுன்னியா



பொருளடக்கம்

# அண்ணல் நபிகளின் அழகுத் தோற்றம்

## திருவதனம்

1. பேரொளியைக் கொட்டிக்கொண்டிருக்கும் இத்திருவதனம் போன்று நாங்கள் வேறு எந்த வதனத்தையும் கண்டதில்லை.

2. ஞாயிறின் சுடரொளி போன்று ஒளிப்பிழம்புகள் தோன்றிக் கொண்டே இருக்கும் அந்த திருமுகத்தைப் போன்ற எந்த முகத்தையும் நான் கண்டதில்லை.

3. நீங்கள் திருநபியவர்களின் அழகுமுகத்தைப் பார்த்தீர்களாயின் கதிரவன் தோன்றிவிட்டதோ! என்றே கருதுவீர்கள்.

4. திரு நபியவர்களை திடீரென எவரும் பார்த்து விட்டால் அச்சம் மேலிட்டு அதிர்ச்சியடைந்தே விடுவர்.*

1. அன்று விண் வெளியில் வெண்மதி முழுநிறைவு பெற்று ஒளிவீசிக் கொண்டிருந்தது. அண்ணல் நபியவர்கள்அன்று இரவு அழகிய சிவப்புநிற ஆடை ஒன்றை உடலில் அணிந்து ஒப்பனை செய்யப்பட்டது போன்று உட்கார்ந்திருந்தனர். அந்த செந்நிற ஆடைக்கும் சிவந்த மேனிக்கும் அது சிறப்பான பேரழகைத் தந்து கொண்டிருந்தது. வெண்ணொளி தரும் தண்மதியை மேலே ஏறிட்டுப்பார்த்து விட்டு அண்ணல் நபியவர்களைக் கண்ணோக்கிப் பார்த்தேன். வெண் மதியையும் அண்ணல் நபியவர்களையும் ஒன்றாக ஒப்பிட்டு மேலும் கீழுமாக பல தடவை கண்ணோக்கி விட்டு இறுதியில் ஏந்தல் நபியவர்களின் பேரழகு தான் தண் மதியைக் காண தலைசிறந்தது என்ற முடிவுக்கு வந்துவிட்டேன்.

2. மகிழ்ச்சி மேலிட்டு மன நிறைவோடு திகழும் நேரத்தில் திரு நபியவர்களின் திரு வதனத்தைப் பார்த்தால் சந்திரனுடைய ஒரு துண்டம் பிரிந்து வந்து பேரொளி தருவதைப் போன்று காட்சி தரும். அப்பேரொளியைப் பார்த்ததும் அவர்களின் மகிழ்ச்சியை கணக்கிட்டு கொள்வோம்.

---

* 1. அறிவிப்பு: அபூ கிர்ஸா (ரலி)
  2. அறிவிப்பு: அபுஹீரைரா (ரலி)
  3. அறிவிப்பு: ரபீஃ: பின்து: மு அவ்வது(ரலி)
  4. அறிவிப்பு: ஹஜ்ரத் அலி(ரலி)

3. என்ன முழுமதியே நமக்கு முன்னால் உலாவ வந்து விட்டதோ!
4. முழுமதியின் முழுவட்டம் போன்றது.
5. ஒரே அளவான வட்ட வடிவமல்லாது சற்று நீண்ட வட்ட முகமாகத் தென்படும்.
6. விசாலமான நெற்றி, அடர்ந்த உரோமம் கொண்ட வில்லைப்போன்று வளைந்த மெல்லிய புருவங்கள், இரு புருவங்களுக்கிடையில் இரண்டும் பொருந்தாத சிறிது இடைவெளி, அதன் நடுவில் ஒரு நரம்பு அண்ணலவர்களுக்கு கோபம் மேலிட்ட தருணம் அது சற்று புடைத்து தெரியும்.*

## நிறம்

1. தூயவெண்மை கொண்ட சுண்ணாம்பின் நிறம் போன்றல்லாமல் வெண்மைமேலிட்ட கோதுமை நிறம்.
2. சிவப்பு கலந்த வெண்மை நிறம்.
3. பளபளக்கும் வெண்மை நிறம்.
4. உருக்கிய வெள்ளியை முலாம் பூசியது போன்ற வெண்நிறம்.
5. அழகுக் கண்கள், விசாலமான இமைகள் கொண்ட கண்கள், கருநிறமுடைய விழிகள்
6. கருநிறமணிகள் கொண்ட கண்கள். கீழ்நோக்கிய பார்வை. நாணம் மேலிட்டால் கடைக்கண்களால் கூட கண்ணோக்காத கண்கள்.
7. விசாலமான விழிகள், கருநிறமணிகள் கொண்ட கண்கள், கண்களின் வெண்நிற பாகங்களில் சிவந்த சிறிய நரம்புகள் ஓடியிருக்கும், நாணத்தால் கீழ் நோக்கிய கண்கள்.**

---

* 1. அறிவிப்பு: ஹஜ்ரத்ஜாபிருப்னு ஸம்ரா (ரலி)
2. அறிவிப்பு: கஃபுப்னு மாலிக் (ரலி)
3. அறிவிப்பு: ஹிந்துப்னு அபீஹாலா (ரலி)
4. அறிவிப்பு: பராயிப்னு ஆஜிப் (ரலி)
5. அறிவிப்பு: ஹஜ்ரத் அலி (ரலி)
6. அறிவிப்பு: கஃபுப்னு மாலிக் (ரலி)

** 1. அறிவிப்பு: ஹஜ்ரத் அனஸ் (ரலி)
2. அறிவிப்பு: ஹஜ்ரத் அனஸ் (ரலி)
3. அறிவிப்பு: அபுத்துஃபைல் (ரலி)
4. அறிவிப்பு: ஹஜ்ரத் அலி (ரலி)
5. அறிவிப்பு: ஹஜ்ரத் அலி (ரலி)
6. அறிவிப்பு: ஹிந்துப்னு அபீஹாலா(ரலி)

## மூக்கு

1. பளபளக்கும் உயரமான மூக்கு
2. மிகுந்த சதைப்பிடிபில்லாத ஒப்புரவான கன்னங்கள் கீழ்கன்னங்களின் சிறிது தசைப்பிடிப்பு தென்படும்

## வாய்

3. அளவான விசாலம் கொண்ட வாய்.

## பற்கள்

4. முத்துப்போன்ற பளபளப்பான பற்கள் முன் பற்களில் சிறிது இடைவெளி தென்படும்.
5. பேசும் போது பற்களில் ஒளி வீசும்

## உரோமம்

6. அடர்ந்த உரோமங்கள்

## கழுத்து

7. பருமனற்ற நீண்ட பிரகாசமுடைய அழகிய கழுத்து*

## தலை

8. பொருத்தமான பருமன் கொண்ட தலை

## தலைமுடி

9. அளவோடு சுருண்ட முடிகள்
10. முழுக்க விரைப்பற்ற முழுக்க சுருட்டையுமற்ற சிறிதளவு சுருண்ட நெளிவு முடிகள்.
11. தலைமுடி அடர்ந்து சில தருணம் காதுகளில் சிறு சோணை வரை வளர்ந்து படிந்திருக்கும் சில தருணம் தோள் புஜம் வரை வளர்ந்து படிந்திருக்கும்.
12. தலையின் நடுமையம் மாங்கு விழுந்திருக்கும்.

---

7. அறிவிப்பு: நூல் ஷமாயில் திர்மிதி

* 1. அறிவிப்பு: ஹிந்துப்னு அபீஹாலா(ரலி)
2. அறிவிப்பு: ஜாபிருப்னு ஸம்ரா(ரலி)
3. அறிவிப்பு: ஹிந்துப்னு அபீஹாலா(ரலி)
4. அறிவிப்பு: நூல் ஷமாயில்,திர்மிதீ, ஹஜ்ரத் இப்னு அப்பாஸ் (ரலி)
5. அறிவிப்பு: ஹஜ்ரத் அனஸ் (ரலி)
6. அறிவிப்பு: ஹிந்துப்னு அபீ ஹாலா(ரலி)
7. அறிவிப்பு: ஹிந்துப்னு அபீ ஹாலா(ரலி)

13. உடலில் உரோமம் அடர்ந்தில்லாது நெஞ்சிலிருந்து தொப்புள் வரை மெல்லிய கோடுபோன்று உரோமம் அமைந்திருக்கும்.

14. தோள், புஜம், நெஞ்சின் மேல்பாகம் இவைகளில் சிறிதளவு உரோமம் தோன்றியிருக்கும்.*

## உடல் அமைப்பு

1. பொருத்தமான அளவான பருமன், எலும்பு மூட்டுகள் பருமனானவை.

2. அதிக பருமனற்ற உடல்.

3. அளவுக்கு அதிகம் வளர்ந்தும் அதிகப்படி கட்டையாகவும் இல்லாது நடுத்தர உயரம்.

4. கூட்டத்தில் நின்றால் மற்றோரைக் காண சற்று உயரமாக தென்படுவர். ஆனால் அளவுக்கு அதிகம் உயரம் அல்ல.

5. வயிறு வெளியில் தள்ளி பருமனாகத் தென்படாது.

6. உலகச் செல்வங்களில் பெருமிதம் பெற்று வளமாக பருத்து செழுமையாக தென்படும் மனிதர்களைக்காண, வாழ்நாள் முழுவதும் வறுமையில் சிக்குண்டு கிடக்கும் இவர்கள் பேருருவம் என்றும் செழிப்பு மிளிர்ந்து பெரும் வலிமை பெற்றதாகவே தென்படும்.

7. பெருமானார்(ஸல்) அவர்களைக் காண பலம் வாய்ந்த உடல்வலிமை பெற்ற எந்த மனிதரையும் யான் கண்டதில்லை.**

---

* 8. அறிவிப்பு: ஹின்துப்னு அபீஹாலா (ரலி)
9. அறிவிப்பு: ஹஜ்ரத் அபீ ஹீரைரா (ரலி)
10. அறிவிப்பு: ஹஜ்ரத் கதாதா (ரலி)
11. அறிவிப்பு: பரா இப்னு ஆஜீஃப் (ரலி)
12. அறிவிப்பு: ஹிந்துப்னு அபீ ஹாலா (ரலி)
13. அறிவிப்பு: ஹஜ்ரத்அலி(ரலி) ஹிந்துப்னு அபீஹாலா(ரலி)
14. அறிவிப்பு: ஹிந்துப்னு அபீ ஹாலா (ரலி)

** 1. அறிவிப்பு: ஹிந்துப்னு அபீஹாலா(ரலி)
2. அறிவிப்பு: ஹஜ்ரத் அலி(ரலி)
3. அறிவிப்பு: ஹஜ்ரத் அனஸ்(ரலி)
4. அறிவிப்பு: பரா இப்னு ஆஜிஃப்(ரலி)
5. அறிவிப்பு: உம்மு முஃபது(ரலி)
6. அறிவிப்பு: நூல் அல்மவா
7. அறிவிப்பு: இப்னு உமர்(ரலி)

## நெஞ்சும் தோள் புஜங்களும்

1. விசாலமான மார்பு கொண்டவர்கள், மேல் மார்பும் கீழ் வயிறும் ஒரே சமமாகத் தென்படும்.

## விசாலமான மார்பு

2. தோள்புஜத்தில் முண்டாக்கள் பருமன்கொண்டதாக தென்படும் தோளில் நடு, மைய பாகங்கள் தசைபிடிப்பு கொண்டதாக இருக்கும்.

## கொடங்கைகள் முன்னங்கைகள்

3. கொடங்கைகள் நீண்டதாக, உள்ளங்கைகள் விசாலம் கொண்டவைகளாக கை விரல்கள் பொருத்தமான நீளம் உடையவைகளாக இருக்கும்.மிருதுவான பட்டாடைகளைக் காண மிக்க மென்மையானவைகளாக உள்ளங்கைகள் இருக்கும்.

## பாதங்கள்

4. கெண்டைக்கால்கள் அதிகம் தடித்து இல்லாமல் அளவோடு உள்ள பருமனாக இருக்கும்.

5. உள்ளங்கைகளும் பாதங்களும் தசைப்பிடிப்புள்ளவைகளாக, உள்ளங்கால்கள் சிறிது பள்ளம் படிந்தவைகளாக, மேல் பாதங்கள் பளபளப்பாக அமைந்து, தண்ணீர்பட்டால் தெரித்து ஓடுவதாக தென்படும்.*

முன்பாதங்களின் கீழ்பாகங்கள் அதிக தசை பிடிப்பற்றவைகளாக அமைந்திருக்கும். அண்ணல் நபியவர்களை கண்ணால் கண்டுகளித்த அந்த அன்புத்தோழர்கள் ஒவ்வொருவரும் ஒவ்வொரு கோணத்தில் அவர்களின் தங்க மேனியின் அங்க அடையாளங்களை விளக்குவதில் பங்கமில்லாது கூடுதல் குறைவில்லாது அப்படியே எடுத்துரைப்பதைப் பார்த்தீர்கள்.

மேற்கூறப்பட்ட அனைத்தையும் ஒருசேர ஒட்டு மொத்தமாக அப்படியே அச்சுப்பதித்தாற் போன்ற ஒரு படப் பிடிப்பை உத்தம அம்மையார் உம்மு மஃபதுவின் வாய் மொழியிலிருந்து கேளுங்கள்.

நபி மணியவர்கள் மனித குலத்தைப் புனிதப்படுத்த எடுத்துக்கொண்ட திருப்பயணம் ஹிஜ்ரத்தின் முதற்கட்டம்.

---

* 1. அறிவிப்பு: ஹிந்துப்னு அபீஹாலா(ரலி)
2. அறிவிப்பு: ஹஜ்ரத் அலி(ரலி)
3. அறிவிப்பு: ஹிந்துப்னு அபீ ஹாலா(ரலி)
4. அறிவிப்பு: ஜாமிருப்னு ஸம்ரா(ரலி)
5. அறிவிப்பு: ஹிந்துப்னு அபீஹாலா(ரலி)
6. அறிவிப்பு: ஜாபிருப்னு ஸம்ரா(ரலி)





பொருளடக்கம்

தௌர் குகையை விட்டு தாண்டிச் செல்லும் முதல் நாள் குஜாஆ கூட்டத்தைச் சார்ந்த ஒரு மூதாட்டியின் கூடாரத்தின் அருகில் செல்கின்றனர். திரு நபியவர்களும் திருத்தோழர் சித்தீக் அவர்களும் தண்ணீர் தாகத்தால் இருவர்களின் நாவுகள் நீர்பசையற்று காய்ந்து வரண்டு விட்டன. உண்மை நபியவர்கள் அந்த உம்மு மஃபதின் கூடாரத்தின் அருகில் சென்று "எமது அன்பு நிறைந்த அன்புத்தாயே! தாகம் எம்மை மேலிட்டு தாங்க முடியாத வறட்சி நிலை. எனவே பருகுவதற்கு ஏதாவது பானம் தாருங்கள்"

உடல் நலிந்து ஒரு துளி பால் கூட இல்லாது வற்றிப்போன இந்த ஆடு ஒன்று தான் இருக்கின்றது. அது தவிர வேறு ஒன்றும் இல்லை என்பது அம்மையாரின் பதில்.

திரு நபியவர்கள் அந்த ஒட்டிய உடலுடன் உலர்ந்த மடுவுடன் கட்டிக்கிடக்கும் ஆட்டின் பக்கம் சென்று அதன் மடுவில் தங்கள் திருக்கரத்தை வைத்தனர். கரம்பட்ட மாத்திரத்தில் மடு சுரக்கத் தொடங்கி திடீரென பால் வழியத் தொடங்கிற்று. மடுவைத் துடைத்து சுத்தம் செய்து பாலை ஒரு பாத்திரத்தில் கறந்தார்கள். நபியவர்கள் கறந்த பாலை தானும் பருகி தோழர் சித்திக் அவர்களுக்கும் கொடுத்துவிட்டு எஞ்சிய பாலை அம்மையார் வசம் ஒப்படைத்து விட்டு பயணத்தை மேற் கொண்டனர் பயணிகள் இருவரும்.

வீட்டை விட்டு வெளியில் சென்றிருந்த அந்த அம்மை யாரின் கணவர் சிறிது நேரத்தில் வீடு வந்து சேர்ந்தார் வீட்டில் நுழைந்த கணவர் பாத்திரத்தில் பாலைக் கண்டதும் பால் இருப்பதின் காரணம் யாது என வினவுகின்றார். நடந்ததை அம்மையார் விளக்கமுடன் எடுத்துக் கூறுகின்றார். விபரம் தெரிந்த உடன் கணவர் மனைவி உம்மு மஃபதைப் பார்த்து மக்காவில் தோன்றியதாக கேள்விப்படும் அந்த குரைஷி இளைஞர் போன்றல்லவா இவர் தெரிகின்றார். அவர் எப்படி இருந்தார் என்பதைக் கூற முடியுமா? ஆம் கூறமுடியும் கேட்பீராக. எனக் கூறி விட்டு விளக்குகின்றார். அம்மையார் அண்ணலாரைப்பற்றி அறிமுகம் ஏதும் இல்லாது, முன்பின் தெரியாது மன முரண்பாடான பிடிவாதப்பேச்சு ஏதும் இல்லாத இந்த மூதாட்டியின் வாயிலிருந்து வரும் அழகு மிளிர்ந்த அரபு சொற்களை நேரில் வைத்து நோக்கினால் மிக்க அற்புத அருஞ்சுவையாகத் தெரியும். இதோ மொழி பெயர்ப்பை சந்தியுங்கள்.

கவர்ச்சி மிகுந்த தூய்மையான திருமுகம், அழகுமிக்க உடல் அமைப்பு, ஒப்புரவான வயிறு, கண்ணின்மணிகள் நல்ல கருமை கொண்ட விசால விழிகள், கீழ் நோக்கிய பார்வை, விசாலமான நெற்றி, நீண்டு அடர்ந்த தலை உரோமம், நீண்டு

வளைந்த மெல்லிய புருவங்கள், நல்ல கருமை கொண்ட நெளிவுமுடிகள், உரத்த குரல், மனதைக் கவர்ந்த மௌனம், மேலிட்ட குரல் அமைப்பு, அடக்கமான தோற்றம், தூரத்தில் கண்ணோக்கினால் மனத்தைமயங்கச் செய்யும் அன்பு அழகு தோற்றம், அடுத்து நெருங்கினால் இன்பமுடன் பழகும் அன்பு வடிவம், அழகிய நீண்ட கழுத்து, முத்துக் கோர்த்தது போன்ற தெளிவான வார்த்தைகள்.

கூடுதல் குறைவற்ற அளவான சொற்கள், கண்டவுடன் அலட்சியத்தை தோற்று விக்கும் கட்டையான உயரமுமில்லை, அருவருக்கும் அதிகப்படியான வளர்ச்சியுமில்லை. நயமான நடுத்தர உயரம். முன்னும் பின்னும் கண்போன்று பாதுகாக்கும் உண்மைத் தோழர் கட்டளை கிடைத்ததும் அசட்டை செய்யாது செயல் செய்து முடிக்கும் செயல் வீரத்தோழர் ஸித்தீக் (ரலி). பயனற்ற கீழ்த்தரமான எவ்வித விவாதமும் குறுக்கீடும் செய்யாத உள்ளன்பு கொண்ட உத்தம இரு தோழர்கள். (ரஸூல் (ஸல்) அவர்களும், ஸித்தீக் அவர்களும்).

## ஆடை

ஒரு மனிதருடைய குணம், மனம், பக்தி, பண்பாடு, செயல்முறைஉள்ளக்கிடக்கை இவைகளை தெள்ளென திரட்டிக்காட்டுவதில் அவனது ஆடைஅலங்காரமும் ஒன்றாகும் ஒருவருடைய ஆடை அமைப்பின் அகல நீளம் நெட்டை குட்டை நிறவேற்றுமை, தூய்மை, அசுத்தம், சுத்தம் இவை களைக் கண்டு கணக்கிட்டே அவர் எப்படி உள்ளவர் என்பதை ஒருவாறு தீர்மானித்து எடை போட்டு விடலாம். திரு நபியவர் களின் திருத்தோழர்கள் அண்ணலவர்களின் அழகு ஆடை களை ஒவ்வொன்றாக எடுத்து விளக்கும்போது, "ஆதமுடைய மக்களே! (மனிதகுலத்தவர்களே!) உங்கள் மானத்தை மறைக்க உங்களை அழகு படுத்த உங்களுக்கு ஆடையை நிர்ணயித் தோம். (மேலும்) இறை பக்தி எனும் ஆடையே உங்களுக்கு மேலான ஆடையாகும்."*

உங்களை வெப்பத்திலிருந்து பாதுகாக்க கூடிய சட்டை களையும், (போர்காலத்தில்) போரின் அபாய தாக்குதலிருந்தும் பாதுகாக்க உருக்கு சட்டைகளையும் உங்களுக்கு அமைத்தான்.**

என்ற திருக்குர்ஆன் வசனங்களுக்கு ஒரு சிறந்த செயல் வடிவமாக திரு நபியவர்கள் விளங்கினார்கள் என்பது தெளிவாகின்றது. பொதுவாக திரு நபியவர்களின் ஆடை

---

* திருக்குர் ஆன் அஃராப் : 26
** (திருக்குர்ஆன்) அன்னஹ்லு : 81




பொருளடக்கம்

அமைப்பை கண்ணோக்கும் போது பற்பல கருத்துக்கள் உலாவிக் கொண்டிருப்பதைக் காணலாம்.

முழுமையாக மானத்தை மறைப்பதற்கேற்றதாக இருத்தல், தூய்மையாகவும் அழகுள்ளதாகவும் இருத்தல், குணப்பண் பாட்டை வெளிப்படுத்துதல், இறையச்ச பக்தியை தோற்றுவித்தல் ஆடம்பரத்தை வெறுத்தல், தட்பவெப்பத்திற்கு ஏற்றதாக இருத்தல்.

**திரு நபியவர்கள் கூறுகின்றனர்:—**

**"நான் அல்லாஹ்வின் அடிமையானவன், அடிமை அணிவது போன்ற ஆடையை நான் அணிகினறேன்," என திரு நபியவர்கள் கூறியது போன்று பெரும்பாலும் பணிவுப் பண்பை எடுத்துக்காட்டும் ஆடைகளையே அணிவார்கள். ஆடம்பரம் கவர்ச்சியை அவர்கள் அருவருப்பாக கொண்டதால் கண்கவரும் அசல்பட்டாடைகளை அவர்கள் அணிவதை முழுக்கவும் விலகி நடந்தார்கள். மற்றும் ஆண்மனிதர்கள் அதனை அணிவதை முழுமையாகவே விலக்கினார்கள்.**

ஒரு சமயம், முழுவதும் அசல்பட்டால் ஆன கபா (நீண்ட ஜிப்பா) ஒன்று அண்ணலவர்களுக்கு அன்பளிப்பாக வந்தது வந்தவுடன் அதனை அணிந்தவர்கள் அணிந்த மாத்திரத்தில் ஒரே மனக்குழப்பமும் வெறுப்பும் ஏற்பட்டு உடனே அதனை கழற்றி எறிந்து விட்டார்கள்.

தலைப்பாகை, மேல் சட்டை, போன்றவைகளில் நீண்ட வைகளாக அணிவது அக்கால மக்களின் மனப்பான்மையில் தற்பெருமையை தோற்றுவிப்பதாக இருந்ததால் அளவுக்கு எஞ்சிய நீண்ட மேலாடையை, தலைப்பாகையை முழுக்கவும் அருவருத்தார்கள். பிற சமுதாயத்தவரின் நடை உடை பாவனை கலாச்சாரம் தமது சமுதாயத்தில் ஊடாடி சமுதாய பண்பாட்டை தன்மானத்தை கௌரவத்தை அநாகரீக வழியில் ஆழ்த்தி விடாதிருக்க மிக்க எச்சரிக்கையாக அதனை அணைபோட்டுத் தடுத்தார்கள். அண்ணலவர்கள் வாழ்ந்த அந்த அரேபிய நாட்டின் தட்ப வெட்ப நிலைக்கு ஏற்றவாறு அவர்களின் நாகரீகத்திற்கு பொருந்தியவாறு கலாச்சாரத்திற்கு இசைந்தவாறு அவர்கள் எவ்வாறு நடை உடைகளில் காட்சி தந்தார்கள் என்பதை கீழ்வரும் விபரங்கள் கண்ணாடி போன்று துள்ளித மாகக் காட்டுகின்றன.

## <u>மேலாடை (கமீஸ்)</u>

திரு நபியவர்களின் மேலாடையில் கமீஸ் சட்டையே பெரிதும் விரும்புவார்கள். கமீஸின் முன்கைகள் அதிகப்படி விசாலம் கொண்டதாகவுமில்லாது மிகவும் இறுக்கம் கொண்ட தாகவும் மில்லாது நடுத்தர விசாலம் கொண்டதாக இருக்கும்.

கைச்சட்டையின் நீளம் மணிக்கட்டு வரையும், சிலதருணம் கைகள் நுனி விரல்கள் வரை இருக்கும்.

கமீஸ் சட்டையின் இறக்கம் பெரும்பாலும் நீண்டதாக இருந்தாலும் பயணம் போர் முதலிய காலங்களில் இறக்கம் குறைந்தே இருக்கும். நெஞ்சுப்பட்டி வெப்பகாலங்களில் திறந்திருக்கும். அது திறந்த நிலையில் தொழவும் செய்வார்கள். சட்டையை உடலில் போடும் போது முதன்முதலில் வலக் கரத்தை போடுவார்கள் பின்பு இடக்கரத்தை. நற்காரியங்களுக்கு முதன்முதலில் வலக்கரத்தைப் பயன்படுத்துவார்கள். அவ்வாறு பயன்படுத்த தோழர்களுக்கும் கட்டளையிடுவார்கள். எனவே வலது பக்கக் கரத்தை நற்காரியங்களுக்கு முதன்முதலில் பயன்படுத்துவது சமுதாயப்பண்பில் ஒன்றாகவே கலந்துவிடும் அளவுக்கு பழக்கப்படுத்தினார்கள்.

## கீழாடை (கைலி, வேஷ்டி)

திரு நபியவர்கள் வாழ்நாட்கள் முழுமையும் கீழாடைக்கு வேஷ்டியையே பயன்படுத்தினார்கள். உடுத்தும்முறை மேல்பாகம் தொப்புளின் கீழ்சற்று இறங்கியிருக்கும். பாதங்களின் கிரண்டை மொளிகளுக்கு சற்றுமேல் உயர்ந்திருக்கும். வேஷ்டியின் முன் பாகம் பின் பாகத்தை காண சற்று நீண்டிருக்கும்.

## (சிர்வால்) கால்சட்டை

கால்சட்டையை தோழர் பெருமக்கள் அணிந்துள்ளனர். பெருமானார்கள் அதனைப் பிரியமுடன் பார்த்து வாங்கியுள்ளார்கள். அணிந்துள்ளார்களா? அல்லது அணியவில்லையா என்ற கருத்து வேற்றுமை நிலவுகிறது. ஆனால் வாங்கி வைத்திருந்தார்கள். அவர்கள் விட்டுச் சென்ற (அனந்தர—வாரிசு) பொருட்களில் அதுவும் ஒன்றாகும்.*

திருநபியவர்கள் கால்சட்டையை விலைக்கு வாங்கி வைத்துள்ள விபரம் ஒரு கவர்ச்சிகரமான நிகழ்ச்சியாகும். திருத்தோழர் அபூஹுரைரா அவர்களை அழைத்துக் கொண்டு ஒருதருணம் கடைத்தெருவுக்குச் செல்கின்றார்கள் அண்ணலவர்கள். துணிக்கடையின் பக்கம் சென்று கொண்டிருக்கும் போது கால்சட்டை ஒன்று வாங்க நினைத்து துணிக்கடை வணிகரிடம் அதனை விலைபேசி நான்கு திர்ஹத்திற்கு வாங்குவதாக முடிவு கட்டினார்கள். அவ்வமயம் பஜாரில் பொருள்கள் அனைத்தையும் எடை போட்டு நிறுவை செய்து தரும் நிறுவைக்காரார் ஒருவர் நியமனம் செய்யப்பட்டிருந்தார். எனவே அந்த கால்சட்டையையும் நிறைபோட அனுப்பப்பட்டது. நிறை

* அறிவிப்பு: நூல் மிஷ்காத்




பொருளடக்கம்

உண்டு. நபியே தம் தோழர்களை முத்தமிட்டனர்
இதை புத்தகத்தில் பார்க்க பக்கம்:146



போட்டுக் கொண்டிருக்கும் அவரைப் பார்த்து அண்ணலவர்கள் சொன்னார்கள்: எடைபோடும் நிறுவைக்காரரே நீர் எப்பொழுதும் எந்தப்பொருளை எடைபோட்டாலும் எடைகோலில் பொருள் உள்ளதட்டு சற்று இழுக்கும் நிலையில் எடை போட்டுக் கொடுக்கவும். இதனைக் கேட்ட அவருக்கு இவ்வார்த்தை பெரும் ஆச்சரியத்தைக் கொடுத்தது. இவ்வாறு கூறும் வார்த்தையை யான் வேறு எவரிடமும் கேட்ட தில்லையே! என்று. அதற்கு ஹஜ்ரத் அபூஹுரைரா அவர்கள் என்ன இவர்கள் யார் என்பது புரியவில்லையா இவர்கள் தாம் நமது திரு நபியவர்கள் என்றார்கள். நன் நபியவர்கள் என தெரிந்ததும் உடனே அவர் பேரன்பு மேலிட்டு திரு நபியர்களின் இரு கரங்களை முத்தமிட வந்தார். உடனே அதனைத் தடுத்துச சென்றார்கள் கரங்களை முத்தமிடுவது பிறநாட்டவர்களின் பழக்கமாகும் இது இஸ்லாத் தில் இல்லையே!

எனவே கால் சட்டையை நிறுவை செய்து வாங்கிச் சென்றதும் தோழர் அபூ ஹுரைராவுக்கு பல வினாக்கள் எழுந்தன. என்றும் கால்சட்டை அணிவது பெருமானார் வழக்க மில்லையே. அதே தருணம் கால்சட்டை அணியும் முறை பாரஸீகர்களான பிறநாட்டவர்களின் நாகரீகமாயிற்றே. பிற நாட்டவர்களின் கலாச்சாரத்தையும் நல்லதாக இருந்தால் நடை முறைக்கு எடுத்துக் கொள்ளலாம் என்பதற்காகவோ என்னவோ இதனை வாங்கியுள்ளனர், போலும். இவ்வாறு பற்பல எண்ணங்கள்.

எனவே ஹஜ்ரத் அபூ ஹுரைரா அவர்கள் அண்ணலி டம் ஆச்சரியமாக கேட்கின்றார்கள் "தாங்கள் இதனை அணி வீர்களா?" பதில் தருகின்றனர் "ஆம்! இதனை அணிவேன். ஊரிலும் அணிவேன் பயணத்தின் போதும் அணிவேன். பகலி லும் அணிவேன் இரவிலும் அணிவேன் மானத்தை என்றும் நன்றாக மறைக்க வேண்டும் என்பது இறைவனுடைய கட்டளை எனவே மானத்தை மறைப்பதற்கு இதற்கு மேலான ஒரு பொருள் உள்ளதா?"*

## தலைப்பாகை

அண்ணலவர்களுக்கு அதிவிருப்பமான உடைகளில் ஒன்று தலைப்பாகை. அதிகப்பருமனாக இல்லாது மிக்க சிறிதாக வும் இல்லாது நடுத்தர அளவுள்ளதாக இருக்கும். தலைப் பாகை அதிகம் குஞ்சம் விடப்பட்டு முதுகின் பின்பக்கம் இரு தோள்கள் மத்தியில் தொங்க விடப்பட்டிருக்கும். வெளியில் செல்லும் போது சூரிய வெப்பம் முகத்தில்பட்டு தாக்காதிருக்க

* நூல் : அல்மவாஹிபு 336 — 7/1

குஞ்சத்தை விரித்து தலையில் போட்டு இழுத்து விட்டுக் கொள்வார்கள். தட்ப வெப்ப நிலையை அனுசரித்து அதே குஞ்சத்தை நாடிப்பக்கம் இழுத்து கழுத்து முழுமையும் சுற்றிக் கொள்வார்கள். தலைப்பாகை இல்லாத தருவாயில் மேல்துண்டு போன்ற ஒரு துண்டை மடித்து தலையில் சுற்றிக் கொள்வார்கள். தலைவலி உள்ள தருவாயில் அவ்வாறு செய்யாதிருப்பார்கள் என்ற கருத்தும் நிலவுகின்றது. தலைப்பாகையில் எண்ணைச்சிக்கு அழுக்கு பிடிக்காதிருக்க கனாஃ எனும் துண்டு போன்ற ஒன்றை தலைப்பாகையின் உள்ளில் வைத்துக் கொள்வார்கள். அது அழுக்கு படிந்து எண்ணைச்சிக்கு ஏற்பட்ட போது உடனே அதனைச் சுத்தம் செய்து என்றும் தூய்மையாக வைத்துக் கொள்வார்கள். அத்துடன் தலைப்பாகையின் கீழ் துணியால் ஆன தொப்பியை உள்ளில் வைத்தே தலைப்பாகையை கட்டியிருப்பார்கள். அன்றைய அரபிய முஷ்ரிகீன்கள், (இறை இணை வைத்து வணங்குவோர்,) தலையில் தலைப்பாகையை அணியும் போது தலையில் தொப்பியில்லாது வெறும் தலைப்பாகையையே அணிவது வழக்கம். எனவே அவர்கள் பழக்கத்திற்கு மாறாக தலையில் தொப்பி அணிந்து தலைப்பாகையை கட்டுவதை இஸ்லாமிய கலாச்சாரத்தில் பட்ட ஒன்றாக ஆக்கினார்கள். தலைப்பாகை துணியின் நிறம் வெண்மஞ்சள் நிறம் கொண்டதாக அல்லது பிஸ்கட் கலர், ஒட்டகை நிறம் அல்லது மண் நிறம் போன்று இருக்கும். மக்காவை வெற்றி கொண்டு மக்கா நகருக்குள் நுழையும் போது கருநிற தலைப்பாகையுடன் சென்றார்கள்.

## தொப்பி

தலைப்பாகை இல்லாத போது தலையில் வெண்நிற தொப்பி அணிந்திருப்பார்கள். இல்லத்தில் இருக்கும்போது தலையோடு படிந்த வட்ட வடிவ தொப்பியை அணிந்திருப்பார்கள். பயணத்தின்போது கரை உள்ள உயரமான தொப்பியை அணிந்து செல்வார்கள். கெட்டியான தடிப்பான பின்னல் தொப்பியும் அணிவது பழக்கம்.

## துப்பட்டி (போர்வை)

உடலில் போர்த்திக் கொள்ளும் போர்வை நீளம் (4) நாலு கெஜமும், அகலம் (21/4) இரண்டே கால் கெஜம் கொண்டதாக இருக்கும். சில தருணம் அதனைப் போர்த்தியிருப்பர். சிலதருணம் ஒரு முந்தியை வலதுகம்கூட்டின் உள்பக்கம் இழுத்து நீட்டி, மறுமுந்தியை இடதுபக்க தோளின் மீது போட்டிருப்பர். உட்கார்ந்திருக்கும் சிலதருணம் அந்த போர்வையால் கரண்டைக் கால்களை சுற்றி மூடி மறைத்திருப்பர்.





பொருளடக்கம்

தேவைப்படாத தருணங்களில் அதனையே பலபல மடிப்புகளாக மடித்து தலையணைக்குப் பதிலாக பயன்படுத்திக் கொள்வர். சிறப்புக்குரிய மனிதர்கள் தங்களைச் சந்தித்து பேட்டி காண வரும் போது தாங்கள் போர்த்தியுள்ள அந்த போர்வையை கழற்றி விரித்து அதில் அமரச் செய்வார்கள்.

எமன் நாட்டில் நெசவு செய்யப்பட்ட சிவப்புநிறகோடுகள் அல்லது பச்சைநிறகோடுகள் அமையப் பெற்ற ஹபரா, எனும் போர்வையை பெரிதும் விரும்பி அணிந்து கொள்வார்கள்.

ஒரு தருணம் உரோமங்களால் நெசவு செய்யப்பட்ட கம்பளத்துப்பட்டி ஒன்றை போர்த்திக் கொண்டிருந்தார்கள். கம்பள உஷ்ணத்தால் வியர்த்து கொட்ட தொடங்கிற்று. பின்னர் வியர்வை வீசும் எனக் கருதி அதனை பயன்படுத்தாது ஒதுக்கி விட்டார்கள். புத்தாடையை பெரும்பாலும் ஜுமுஆ நாளில் அணிவார்கள். அணியும்போது இறைபுகழ் கூறியபடி அணிவார் கள். தேவைக்கு அதிகமான ஆடைகளை வைத்துக் கொள்ள மாட்டார்கள். கிழிந்த ஆடைகளை ஒட்டுப் போட்டும், தைத்தும், செப்பனிட்டு வைத்தும் கொள்வார்கள். வீட்டில் வெளியில் கூட்டங்களில் தொழுகையில் மற்றும் மக்கள் கூடுமிடங்களில் தூய்மையாக சுகாதாரமாக செயல்பட அழுக்கு பேன் இவைகள் ஆடைகளில் படியாது பார்த்து பரிசுத்தத்தை மேற்கொள்ள அடிக்கடி பயிற்சியளித்துக் கொண்டிருப்பார்கள்.

ஏழ்மை நிலை பெற்று எளிய வாழ்க்கையை கடைபிடித்து நடக்கும் இவர்கள் உலகை வெறுத்து துறவறம் பூண்டவர்கள் போன்று முற்றிலும் சுகபோக வாழ்வை தூரத்தள்ளி விட்டவா களாக இல்லாமல், மக்கள் துறவறத்தில் மூழ்கவிடாது அதற்கு ஒரு தடுப்புச் சுவற்றையும் நிர்ணயித்ததால், சிறந்த வாழ்வு ஆடம்பரமற்ற அழகு இவைகளில் ஓரளவு பங்கு பெற்றே வாழ்ந்து காட்டினார்கள் என்பதை அடுத்துக் காணும் நற்போத னையின் மூலம் நன்கு புரிந்து கொள்ளமுடியும்.

அல்லாஹ் தனது, அடியார்களுக்கு வழங்கிய வாழ்க்கை விசாலத்தின் அறிகுறிகளை தனது அடியார்கள் வெளிபடுத்திக் காட்டுவதை அவன் பிரியப்படுகிறான் என்ற இக்கருத்தினை அண்ணலவர்கள் முன்னில் நிறுத்தி அழகு ஆடைகளையும் அணிந்து நடந்து காட்டியுள்ளார்கள். எனவே ஒரே அடியாக ஆடம்பரத்தில் முழுக்கவும் மூழ்கி விடுவதை ஒரு பக்கம் விலக்கியுள்ளனர். அதே நேரத்தில் முற்றும் துறந்த சன்னி யாசத்தையும் ஒருபக்கம் தடுத்துள்ளனர். வரம்பு மீறிய ஏற்றத்திற்கும் தாழ்வுக்கும் இடைப்பட்ட நடுத்தர வாழ்வை தனது உம்மத்தவர்கள் ஒழுகி நடக்க ஆவல் பட்டதால் இவ்வாறு முன் மாதிரியாக காட்சி தந்தார்கள். எனவே அணிந்த

ஆடைகளில் முன்கை இறுக்கமான ரோம நாட்டு ஜிப்பாவை அணிந்திருந்ததாகவும், சிவப்பு கோடுகள் கொண்ட ஆடையை அணிந்திருந்ததாகவும், நெஞ்சுப்பட்டியில் பட்டு நூற்கரை கொண்ட தைலஸானீ எனும் ஜிப்பாவை அணிந்திருந்ததாகவும், புகாரி முஸ்லிம் அல்மவாஹிபு போன்ற ஹதீது வரலாற்று நூற்கள் விளக்குகின்றன. "இறைவனால் அனுமதித்து வழங்கப்பட்ட ஆகுமான (அழகுப்) பொருள்களை நீங்கள் ஏன் விலகி நடக்கின்றீர்கள்" என்ற திருகுர்ஆன் கட்டளைக்கு ஒரு சிறந்த விளக்கமாக எடுத்துக்காட்டாக, ஒரு தருணம் சிறந்த பல ஒட்டகங்களுக்கு பதிலாக நிறைந்த அழகுடைய ஆடையை வாங்கி அதனை அணிந்திருந்தார்கள். அணிந்து கொண்டு தொழவும் செய்தார்கள்.*

## ஆடை நிறம்

பெரும்பாலும் அண்ணலவர்கள் வெண்ணாடையையே விரும்புவார்கள் "அல்லாஹ்வின் முன்னில் செல்லுமிடங்கள் பள்ளிகள், மண்ணறைகள், இவ்விரு இடங்களுக்குச் செல்ல மேலான ஆடைகள் வெண்ணிற ஆடைகளாகும்" என கூறினார்கள்.

"தூய்மைக்கும் கவர்ச்சிக்கும் ஏற்ற ஆடை வெண்ணிற ஆடைகளே ஆகும். ஆதலால் நீங்கள் வெண்ணிற ஆடைகளை அணியுங்கள். மேலும் வெண்ணிற ஆடைகளாலேயே பொதிந்து உங்களில் மரித்தோரை அடக்கமும் செய்யுங்கள்". இவ்வாறு வெண்ணாடையின் நற்சிறப்பை எடுத்தியம்பியுள்ளார்கள்.

வெண்ணிறத்தின் பின்னர், பச்சை நிறம் அண்ணலவர்களுக்கு விருப்பமான நிறம். பச்சை நிறத்தில் திக்கான பச்சையில்லாமல் லேசான பச்சை கோடிட்டவைகளே அதிகப் பிடித்தம். திக்கான சிவப்பு நிறம் திரு நபியவர்களுக்கு ஒரு வெறுப்பான நிறமாகும். கருஞ்சிவப்பு ஆடை மட்டுமல்லாது பொதுவாக நிறத்தை பொருத்த அளவு சிவப்பு நிறம் எல்லாமே அப்படித்தான்.

ஆனாலும் இளஞ்சிவப்பு கோடிட்ட ஆடைகளை சில தருணம் அணிந்திருப்பதையும், இளமஞ்சள், இளமண்ணிறம், ஒட்டகைநிறம் போன்ற ஆடைகளை அணிந்திருந்ததாகவும் அறிவிக்கப்படுகிறது.

---

* அறிவிப்பு : முஹ்ஸினே இன்ஸானிய்யத் 99
அறிவிப்பு : அபூதாவூத் இப்னுமாஜா
அறிவிப்பு : அஹ்மத்—திர்மதி—நஸயீ—இப்னுமாஜா

## காலணி

திரு நபியவர்கள் காலணி அராபிய நாட்டு கலாச்சாரப்படி (நமது நாட்டு காலணிகள் தோலால் அல்லது கட்டையால் ஆனவை போன்று) மேல்பட்டைவார், இரண்டு முன் வார்கள் கொண்டதாக இருக்கும். முன் வார்களில் ஒன்று கட்டை விரலின் இடையேயும் இருக்கும். பட்டை முன் வார்களில் உரோமம் யாதுமில்லாது தெளிவாக இருக்கும். காலணி நீளம்: ஒரு சாண் இரண்டு அங்குலங்கள், முன்பாத அகலம் ஏழு அங்குலங்கள் இரண்டு முன்வாரிலிருந்து கட்டை விரல் இரண்டு அங்குல அகலமும் இருக்கும். சிலதருணம் நின்ற நிலையில் காலணிகள் அணிவார்கள், சிலசமயம் அமர்ந்து கொண்டும் அணிவார்கள். அணியும் போது வலதுகாலைக் கொண்டு தொடங்குவார்கள் பின்பு இடதுகால் கழற்றும்போது இடதுகாலைக் கொண்டு தொடங்கி பின்பு வலதுகால். தோலால் செய்யப்பட்ட காலணிகளில் கால்களை கரண்டைக் கால் வரை முற்றிலும் மூடிய ஐவ்ரப் என்ற பூட்ஸ் போன்றதை அணிவார்கள். ஐவ்ரப்பில் சாதாரணமான அல்லது உயர்ரகம் அனைத்தையும் அணிந்துள்ளனர்.அபீஸீனிய நாட்டு நஜ்ஜாஷ் அரசர் ஒரு தருணம் கருநிறம் கொண்ட ஐவ்ரப் ஜோடி ஒன்றை அன்பளிப்பாக அனுப்பினார். அதனை அண்ணலவர் கள் அணிந்திருந்தார்கள். கடும் குளிர் காலத்தில் அதன் மீது மஸஹ்ம் செய்து கொண்டார்கள். குளிர் கடுமையான காலத் தில் கால்களைக் கழற்றி கழுவாது கைகளைத் தண்ணீரால் நனைத்து (காலுரைகளின் முன் கால்கள் நுனியிலிருந்து கிரண்டைமேல் பாகம் வரை, இழுத்து தடவுவதற்கு மஸஹு எனக் கூறப்படும்.) தடவுவார்கள்.

இதனைப் போன்று திஹ்யதுல்கல்பி எனும் திருத்தோழர் ஒருவர் ஒரு ஜோடி ஐவ்ரபை(பூட்ஸ்) அன்பளிப்பாக வழங் கினார்கள். அதனை கிழிந்து போகும்வரை அணிந்திருந்தார் கள்.

## மோதிரம்

வெள்ளியால் ஆன மோதிரம் ஒன்றை திரு நபியவர்கள் அணிந்திருந்தனர். சிலதருணம் அதன் கொண்டையும் வெள்ளியால் ஆனதாக இருந்தது. சிலதருணம் அபிஸீனிய நாட்டுகல் ஒன்று கொண்டையில் பதிக்கப்பட்டிருந்தது. இரும்பால் உள்ள அணிகலன்களை பெருமானார் அவர்கள் வெறுத்திருந் தனர். என்றாலும் சில தகவல்படி வெள்ளி நீர் முலாம் பூசிய, இரும்பு மோதிரம் அணிந்திருந்ததாகவும் வந்துள்ளது. மோதிரம் அணிந்திருப்பது பெரும்பாலும் வலது கரமே ஆகும். சிலதருணம் இடது கரத்திலும் அணிந் திருந்தனர். நடுவிரல்,

ஆள் காட்டிவிரல் இவைகளில் அணியாது அரைவிரலில் அணிவதையே விரும்பினர். மோதிரக் கொண்டை வெளிப் பக்கம் இருக்காமல் உள்ளங்கை பக்கலே திரும்பி இருக்கும்.

மோதிரக் கொண்டையில் முஹம்மதுர் ரசூல்லாஹி என்று பொறிக்கப்பட்டிருக்கும் 'முகம்மது' — கீழ் வரிசையிலும்

***'ரசூல்' — அதன் மேல்வரிசையிலும்***

***'அல்லாஹ்' — அதற்கும் மேல் வரிசையிலும் அமைந்திருந்தன.***

இவ்வாறு மூன்று வரிசைகள் அமைந்திருக்கும் மோதிரத்தை அழகுப் பொருளாக கருதி அணியாமல் அரசியல் நோக்கில் அது முத்திரையிடுவதற்காகவே அணிந்திருந்தனர் என்பதுவே பொருத்தமானது என சிலர் கருத்து தெரிவித் துள்ளனர்.

## அலங்காரம்

தலை முழுவதும் முழுக்க முடி வளர்த்த அண்ணலவர் கள் அதனை அழகுபடுத்தி நாகரீகமாக வைத்துக் கொள்வதில் என்றும் கவனக்குறைவு செய்ததில்லை.

தேவைப்பட்ட நேரம் எண்ணை தேய்ப்பார்கள். சீவிவாரிக் கொள்வார்கள். மாங்கெடுத்தும் சீவிக் கொள்வார்கள். மீசைப் பகுதியில் மேல் உதட்டில் அதன் விளிம்புக்கு மேல் நீண்டு வளர்ந்த உரோமங்களை கத்தரித்து அழகுடன் வைத்துக் கொள்வர். தாடி உரோமங்களில், நீளத்தால் அகலத்தால் அளவுக்கு அதிகம் வளர்ந்து· சிதைந்திருக்கும் உரோமங்களை கத்தரித்து நறுக்காக கச்சிதமாக வைத்துக் கொள்வர்.

தலைமுடி, மீசை, தாடி இவைகளின் உரோமங்களை இருக்க வேண்டிய அளவோடு வைத்து அதனை சீவி வாரி பராமரிப்புச் செய்து கத்தரித்து கச்சிதமாக வைத்துக் கொள்வதில் அண்ணலவர்கள் எத்தகைய கண்காணிப்புச் செய்தார்கள் என் பதனைப் போன்று, தோழர் பெருமக்களும் கடைபிடித்து ஒழுக்க பயிற்சி அளித்துக் கொண்டிருந்தார்கள்.

"தலைமுடி, தாடி, வளர்ந்தவர்கள் அதற்குரிய ஒழுக்க முறையையும் கவனித்து நடப்பார்களாக!" என்று சொல்வார்கள்.

ஒருதருணம் ஹஜ்ரத் அபூகதாதா(ரலி) அவர்களைக் கண்ணோக்கி கதாதாவே! நீர் உமது தலைமுடி தாடி முடிக்குரிய மரியாதையைப் பேணிக் கொள்வீராக! என எடுத்துரைத்தார்கள். இன்று உலகில்: அளவுக்கும் எஞ்சிய மதப்பற்று கொண்டு தன்னை உலகப்பிணைப்பிலிருந்து ஒதுக்கி வைத்து துறவரம் பூண்டவர்களாக தன்னை காட்டிக் கொள்ள நினைப்போரும்

உள்ளனர். இது ஒரு ஏமாற்று வித்தையே ஆகும். இவ்வாறு உள்ளவர்கள் குளிக்காமல் தூய்மையாக இருக்காமல் நாகரீகப் பண்பாட்டை ஒதுக்கி கரடுமுரடாக தலைவிரி கோலமாக அவலச்சணமாக தோன்றுவதே தனக்கு உயர்வானது என்க்கூறி நடக்கின்றனர்.

இத்தகைய துறவரம், சன்யாசம் போன்ற அநாகரீக வாழ்வுக்கு ஒரு தடுப்புச்சுவர் எழுப்பவே அண்ணவர்கள் மேற்கூறியவாறு எடுத்துக்கூறி திருத்தோழர்களை நவநாகரீக பண்பாட்டில் நடை போட இழுத்துச் சென்றனர்.

ஊரில் இருக்கும் போதும், வெளியூர் பயணத்தின்போதும் திரு நபியவர்களுடன் உள்ள சாதனங்கள்:

1. எண்ணைப்புட்டி
2. சீப்பு (சிலதருணம் யானைத் தந்தத்தால் ஆன சீப்பும் வைத்திருந்தனர்)
3. சுர்மாக்கூடு (கருநிற சுர்மா உள்ளது)
4. கத்தரிக்கோல்
5. பல்குச்சி (பல்துலக்கும்குச்சி) மிஸ்வாக்
6. முகம் பார்க்கும் கண்ணாடி
7. மரத்தாலான மெல்லிய கைத்தடி

இரவு நேரம் தூக்கத்திற்கு செல்லுமுன் ஒவ்வொரு கண்ணிற்கும் மும்மூன்று தடவை சுர்மாகோலால் சுர்மாவை எடுத்து போட்டுக் கொள்வார்கள் (இரவு நேரத்தில் சுர்மா இடுவதின் காரணம் சுர்மாவின் கருநிறம் வெளியில் தெரியா திருக்கவே எனக்கருதப் படுகின்றது)

பின் இரவில் தூக்கத்தில் இருந்து எழுந்து மனித தேவைகளிலிருந்து விடுபட்ட பின் உலூச் செய்வார்கள் பின்னர் படுக்கையின் போது உடுத்திய ஆடையை மாற்றி தொழுகைக் குரிய ஆடையை அணிந்து மணம் பூசிக் கொள்வார்கள்.

## வாசனை

வாசனைப் பொருள்களில் ரைஹான் எனும் வாசனை திரவியத்தை பெரிதும் விரும்புவார்கள். மருதாணி மலரின் சுகந்த வாசனையை மனநிறைவுடன் விரும்பி ஏற்பார்கள். அனைத்து வாசனையை விட அதிகம் வரவேற்புக்குரிய வாசனைகள் கஸ்தூரியும் சாம்பிராணியுமாகும். வீட்டில் அடிக் கடி வாசனை புகை போட்டு வாசனை படுத்திக் கொண்டிருப்பர்.

இல்லத்தில் ஒரு அத்தர் புட்டி என்றும் இருந்து கொண்டிருக்கும். அதில் அற்புதமான வாசனை கொண்ட அத்தர் நிறப்பப்பட்டு அடிக்கடி பயன்படுத்திக் கொண்டே இருப்பர். சிலதருணம் அண்ணலவர்களுக்கு ஆயிஷா அவர்கள் தங்கள் கரங்களாலேயே வாசனைப்பொருளை எடுத்து தேய்த்து விடுவதும் உண்டு.

ரைஹான் அரபிய நாட்டில் கிடைக்கும் ஒரு மலரின் வாசனை.

திருநபியவர்கள் ஒரு தெருவில் சென்று இருந்தார்களாயின் சென்ற பின்பும் வெகுநேரம் அத்தெருவில் வாசனை கமழ்ந்து கொண்டே இருக்கும். அந்நேரம் அத்தெருவில் செல்லும் ஒவ்வொருவரும் மணம் கமழும் அந்த குணமகனார் சுகந்த வாசனை கொண்ட அந்த வசந்த கால பூஞ்சோலை இவ்வழியே நடந்து சென்றுள்ளனர் என தெளிவாக தெரிந்து கொள்வர். அன்பளிப்பாக வந்த வாசனை திரவியத்தை அவசியம் இன்பமுடன் ஏற்றுக் கொள்வர். அன்பளிப்பாக வரும் வாசனைப் பொருள்களை ஏற்பதில் தயங்குவோரைப் பிரியப்பட மாட்டார்கள்.

இஸ்லாமிய கலாச்சார அடிப்படையில் ஆண்மக்கள் நிறம் வெளியில் தென்படாது சுகந்தம் நன்கு வெளியில் வீசும் வாசனையைப் பயன்படுத்துதலையும், பெண்மக்கள் சுகந்தம், மறைந்தநிறம் வெளியில் தென்படும் வாசனைப் பொருளைப் பயன்படுத்துதலையே விரும்புவார்கள். அவ்வாறு செய்யக் கட்டளையுமிடுவார்கள்.

## நடை

மேன்மை, கண்ணியம், பெருந்தன்மை, நற்சிறப்பு பொறுப்புணர்வு அனைத்தும் ஒருங்கே சேர்ந்து பொலிவு பெற்று பேரொளி வீசுவது போன்று தென்படும் அண்ணலவர்களின் அழகு நடை. கால்களை இழுத்து ஆடி அசைந்து நடக்காது, உடலை ஒன்று சேர்த்து இழுத்தாற்போன்று பாதத்தை உறுதியாக பதிய வைத்து நடை போடுவார்கள். நடந்து செல்லும்போது வலப்புறம் இடப்புறம் ஏறிட்டுப்பார்க்காது பாதத்தை தூக்கி வைத்து முன்பக்கம் சற்று குனிந்த நிலையில் நடப்பார்கள். அந்நேரம் அண்ணல்வர்களைக் கண்ணோக்கினால் ஏதோ மேட்டுப்பகுதியில் இருந்து பள்ளத்தின் பக்கம் இறங்கி வருவதைப்போன்று தென்படும் ஹிந்துப்னு அபீஹாலா அவர்கள் அண்ணலவர்களின் நடையை எடுத்து விளக்கும் போது நன்நபியவர்கள் நடையோடு பூமி சுருண்டு வருவது போன்று தென்படுகிறது.

வேகமான நடை விசாலமான எட்டு வைத்து நடக்கும் இவர்களோடு நடந்து சென்ற ஹஜ்ரத் அபூஹுரைரா(ரலி) அவர்கள் சொன்னார்கள். அண்ணலவர்கள் நடந்து செல்லும் போது அவர்கள் நடையை நாங்கள் தொடர்ந்து சென்று பிடிப்பது மிக்க கடினமாக தோன்றும் என்று "நீர் பூமியில் நடந்து செல்லும்போது அகம்பாவம் கொண்ட நிலையில் நடக்காதே."*

இந்த திரு வசனத்திற்கு ஒரு செயல் விளக்கமாக அண்ணலவர்கள் பணிவுப் பண்பை பாங்குடன் எடுத்துக் காட்டி நடந்து செல்வார்கள்

## பேச்சு

ஒரு மனிதருடைய இறைநம்பிக்கை பக்தி, பரவசம், செயல்வடிவம், அந்தஸ்து இவைகளை தெள்ளென வெளி உலகுக்கு எடுத்துக்காட்டி, அவரைப் புரியச்செய்வது அவருடைய பேச்சுத்திறன். சொல்வன்மை, சொல் நயம், வார்த்தை நளினம், விசயத்தலைப்பு, சொற்றொடர், குரலின் உச்சம், இரக்கம், பேச்சின் வேகம், விருப்பு இவைகளை கொண்டே அவர் எப்படிப்பட்டவர், என்ன தகுதி பெற்றவர் என்பதை துரிதமாக அறிந்து முடிவுகட்டி விடலாம்.

அண்ணல் நபியவர்களுக்கு அளிக்கப்பட்ட நபித்துவப் பட்டம் பதவி பொறுப்புகள் அனைத்தையும் இன்று நாம் நமது சிந்தனைக் கண்ணில் நோக்கி அடுக்கடுக்காகப் புறட்டிப் பார்ப்போமாயின் அவர்களல்லாது வேறு எவருமாயிருந்தால், அப்படியே மனதை பதறவிட்டு மாபெரும் குழப்பத்தில் மூழ்கி திகைத்து திக்குமுக்காடி பெருமூச்சுவிட்டு அப்படியே கல்லாய் சமைந்து காட்டுக்கு செல்ல மூட்டையை கட்டியிருப்பர்.

1) அகிலமனைத்தையும் ஆட்டிப்படைக்கும் ஒரு அற்புத புரட்சித்திட்டம்.

2) அனைத்து உலக மக்களையும் அளவளாவிப்பிடித்து அன்புப்பிணைப்பால் பண்பின் செறிவால் பக்தியின் வழியால் பரஸ்பர நடத்தையால் எல்லோரும் ஓர்குலம் எல்லோரும் ஓர்இனம் எல்லோருக்கும் ஒரே ஏக இறைவன் என்ற ஒரு அற்புதமான அம்சம் கொண்ட அருமைவழிமுறை.

3) அனைத்து மக்களுக்கும் செயல்வடிவில் ஏற்றிப்போற்றி ஒழுகும் ஒப்பற்ற அரசியல் சட்டம்.

---

* திருக்குர்ஆன் அத்தியாயம் : லுக்மான்





பொருளடக்கம்

4) நிகரற்ற ஒரு சமுதாய அமைப்பும் அதன் அளவற்ற அற்புத வாழ்க்கைமுறை இத்தனையும் ஏகமாக உருவெடுக்க அரும்பாடுபட வேண்டும். அதே தருவாயில் குடும்பத்தொடர்பு சமுதாய சம்பந்தப்பட்ட பிரச்சனை, போர் அபாயங்கள், அயல்நாட்டு அரசர்களுக்குத் தூது மற்றும் அழைப்பு, தூதுவர்களின் சந்திப்பும் தொடர்பும், உள்நாட்டு பிரமுகர்களின் தலைவர்களின் பேட்டி, மற்றும் மார்க்க சம்பந்தப்பட்ட விளக்கமுறை, இறை வணக்க வழிபாட்டு வழிகள், தங்கள் சொந்த வணக்கம், வாழ்க்கை முறை போன்ற எத்தனையோ பிரச்சனைகளுக்கு தீர்க்கமான முடிவு அனைத்தையும் சமாளித்து கண்காணிப்பு செய்தாக வேண்டும்.

இதற்கிடையில் தங்களோடு பழகி நெருங்கி வரும் தோழர்களுடன் பேச்சு வார்த்தைகள் இரவு பகல் இடைவிடாது நடந்து கொண்டிருக்கும்.

உரையாடும் போது புன்முறுவல், பூக்கும் நன்முகம், ஆழ்ந்த கருத்து மிளிர்ந்த அற்புதச் சொற்றொடர், உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் நவநாகரீக வார்த்தைகள் நடமாடிக் கொண்டே இருக்கும். ஹிந்துப்னு அபீஹாலா பெருமானார் பேச்சு அம்சத்தை எடுத்துரைக்கும் போது கூறினார்.

பெருமானார்(ஸல்) அவர்கள் முன்னில் எத்தனையோ பிரச்சனைகள் அடுத்தடுத்து வந்து கொண்டே இருக்கும். நீண்ட நேரம் சிந்தித்து கொண்டே இருப்பார்கள். ஒரு தருணம் கூட அவர்கள் சிந்தனையிலிருந்து விடுபட்டிருப்பதை நாங்கள் கண்டதில்லை. மணிக்கணக்கில் மௌனத்தை மேற்கொண்டிருப்பர். தேவையற்று எந்தப்பேச்சையும் பேச மாட்டார்கள்.

சிந்தனையில் திழைத்து மௌனத்தை மேற்க்கொண்ட நேரங்கள் நீங்கலாக திரு நபியவர்கள்(ஸல்) சிறந்த ஒரு சன்மார்க்க அழைப்பாளராக, மாபெரும் இயக்க தலைவராக, பிரச்சாரகராக, போதகராக, உள்ளத்தை திருத்தும் உத்தமராக, இருந்ததால் மக்களோடு தொடர்பு கொண்டு உரையாடுவது ஒரு முக்கிய அம்சமாக விளங்கிற்று.

எனவே ஹஜ்ரத் கைஸுப்னுஃதாபித் அவர்கள் கூறுவது போன்று நாங்கள் திரு நபியவர்கள் (ஸல்) முன்னில் உலக சம்பந்தப் பட்ட பிரச்சனைகளைப் பேசினால் அதில் எங்களுடன் நன்கு பங்கு கொண்டு உரையாடுவர். மறுமை சம்பந்தப்பட்ட பேச்சு தொடங்கினால் அதிலும் முழுமையாக கலந்து கொள்வர். ஊண், குடிப்பு விசயங்களில் பேச்சு தொடங்கினால் அதிலும் சேர்ந்து அங்கம் வகித்து விடுவர்.





பொருளடக்கம்

அதே தருணம் திருகுர்ஆன், அவர்கள் பேச்சின் தூய்மை பற்றி "அவர் மனதில் பட்ட இச்சைக்கு ஏற்றபடி எல்லாம் பேசமாட்டார்" என குறிப்பிடுவது போன்று வீணான எப்பேச்சும் அவர்கள் நாவில் நடமாட விடமாட்டார்கள்.

## பேசும்முறை

கேட்ப்போர் மனதில் சொல்லும் கருத்தும் நிலைத்து ஊன்றிக் கொள்ளும் அளவு வார்த்தைகளை நிறுத்தி நிறுத்தி ஏன் அதனை விரல்விட்டு எண்ணி விடும் அளவுக்கு அவசரப்படாது பேசுவர்.*

உம்முமஃபது அம்மையார் திரு நபியவர்கள் பேச்சின் நற்சுவையை என்ன அழகாக குறிப்பிடுகின்றார்கள்.

முத்துக்கோர்வையில் மணிகள் ஒன்றன்பின் ஒன்றாக தொடர்வது போன்று கூடுதல் குறைவற்ற தேவைக்கு ஏற்ற சொற்றொடர். ஒன்றை உறுதிபடுத்தி கூறுதல், எளிதாக விளக்கி வைக்கும் வார்த்தைகள், கேட்போர் மனனமாக்கி கொள்ள வார்த்தைகளை மும்முறை திரும்பத் திரும்பக் கூறுதல், கொச்சையான விஷயத்தை வெளிப்படையாக கூறாது சைகை யாக எடுத்துரைத்தல், ஆபாசம், மானக்கேடான வார்த்தைகளை வெறுத்து ஒதுக்குதல், புன்முறுவல் பூத்த பொன் முகத்தோடு உரையாடல், இத்தகைய ஒப்பற்ற ஒளிமுகத்தை கண்ட தோழர் அப்துல்லா இப்னு ஹாரித் அவர்கள் கூறுகின்றார் "புன்முறு வல் பூத்துப்பேசுவதில் அண்ணல் நபியவர்களுக்கு மேலான ஒருவரை நான் கண்டதில்லை" என்று,

பேசும்போது அடிக்கடி விண்ணகத்தின் பக்கம் மேல் நோக்குவர். தொடர்ந்து பேசும் தருணம் ஒரு விஷயத்தை வலியுறுத்தி கூறுவதாக இருந்தால் சாய்ந்திருந்தால் நேராக உட்கார்ந்து கூறுவர். முக்கியமான வார்த்தைகளை திரும்பத் திரும்ப கூறுவர். கேட்போருக்கு ஒரு விஷயத்தைப்பற்றி அச் சுறுத்துவதாக இருந்தால் பேச்சோடு சேர்த்து கையை அடித்துக் கூறுவர். விஷயத்தை விளக்க கையைக்கொண்டும் கைவிரல் கள் கொண்டும் (GESTURES) சைகை செய்து காட்டுவர். எடுத்துக்காட்டாக:—

இரண்டு வஸ்த்துக்களை ஒன்று சேர்த்து விளக்குவ தாயின் ஆள் காட்டி விரல் நடுவிரல் இரண்டையும் ஒன்று சேர்த்து காட்டுவர். சிலதருணம் இருகரங்கள் விரல்களை ஒன்றோடொன்று கோர்த்து உறுதியாக ஒற்றுமைக்கு உதாரணம்

---

* அறிவிப்பு : நூல் ஷமாயில் திர்மதி

காட்டுவர். ஒரு பொருளை அல்லது திசையை சுட்டிக் காட்டுவதாயின் முழுக்க கரம் கொண்டு காட்டுவர்.

முக்கிய சம்பவத்தை வற்புறுத்த சிலதருணம் வலது கரத்தை இடது கரம் முதுகுப்புறம் வைத்து விரலுக்குமேல் விரலை வைப்பர். புதுமையைக்கூறும் போது கரத்தை தங்கள் பக்கம் புறட்டிக் காட்டுவர். சிலதருணம் தலையை அசைத்தும் பற்களால் கீழ் உதட்டை கடித்தும் காட்டுவர். சிலதருணம் கையால் தங்கள் தொடையை தட்டுவர்.

பெருமானார்கள் பிறந்த குடும்பம் புவியோர் போற்றும் ஒரு பொற்சிறப்புப் பெற்ற குரைஷியர் குடும்பம். தாய்மொழியை வாய்மொழியாகக் கற்று, மழலை மொழி பேசும் இளமை வயதில் துளிர்விட்டு வளர்ந்து, தூய நவ நாகரீகப் பேச்சை கற்ற இடம் பனீஸஅது கூட்டத்தினர் வாழ்ந்த இடம்.

நவநாகரீக அரபு மொழியை அழகுடன் அற்புதமாக பேசும் இவ்விரு கூட்டத்தாரின் மத்தியில் வளர்ந்த இவர்கள், முத்தான வாயிலிருந்து நித்தமும் வந்து கொண்டிருந்த சுத்த மான சொற்றொடருக்கு மெருகு கொடுத்துக் கொண்டிருந்தது (வஹீ) இறை அறிவிப்புத் திரு வசனத் தொடர்பு.

இத்தனையும் ஏகமாக அமைந்து எழில் தரும் அழகு வசனங்களை அடுக்காக அண்ணலவர்கள் பேசிக்கொண்டிருந் தமையால் நவநாகரீக மொழி பேசுவார்கள் என்ற நற்சிறப்பை பெற்று இருந்தனர். பொது மக்கள் எளிதுடன் விளங்கும் வார்த்தைகள். அதே தருணம் இலக்கிய கண்ணோட்டத்தில் ஈடில்லா பேரமைப்பு. கரடுமுரடற்ற இதயம் கவரும் இனிய வார்த்தைகள், கொச்சைகள் இல்லாத மெச்சத்தகுந்த சொற் றொடர். சொல்லப்போனால் அண்ணலவர்கள் தன்னிகரற்ற இந்த உன்னத இயக்கத்திற்கு தனிப்பெரும் ஓர் ஒப்பற்ற உயர் நடையையே உருவாக்கியிருந்தனர்.

அற்புதமான வார்த்தைகளின் கோர்வை சேர்ப்புமுறை, ஒப்பு உவமை கொடுத்து உயர்நடையில் பேசுதல், பிரசங்கப் பாணியில் ஒரு புதுத்திருப்பம். நவநாகரீகமற்ற நாட்டுப்பேச்சை ஒதுக்கித் தள்ளி நயமான வார்த்தைகள் கொண்டு நளினமாக பேசுதல் இத்தனையும் ஒருங்கே அமைந்ததால் ஒரு தருணம் பனீநஜ்து கூட்டத்தினர் பெருமானார்(ஸல்) அவர்களிடம் வெகுநேரம் பேட்டி கண்டு பேசினர். இறுதியில் புதுமை புலரக் கேட்டனர். ஏக வல்லவன் அல்லாஹ்வின் திருத்தூதர் அவர் களே! நாங்களும் தாங்களும் ஒரே தாயின் பிள்ளைகள். ஒரே இடத்தில் வளர்ந்தவர்கள். அதே தருணம் அரபி மொழியில் அற்புதமாக பேசும் தாங்கள், வார்த்தையின் நுண்ணிய இனிய நடையின் ரசனத்தை, இலக்கிய செறிவில் மேதையர் அல்லாது

எவரும் புரிந்து கொள்ளமுடியாது, இந்த அளவுக்கு தாங்கள் எங்கு சென்று கற்றீர்கள்?

இதனைக் கேட்ட அவர்கள் இறைவனே எனக்கு நல்லொழுக்கத்தைக் கற்பித்து அதில் என்னை அழகுபடச் செய்தான். மேலும் நான் நவநாகரீக மொழிபேசும் பனீஸஅது கூட்டத்தில் வளர்ந்தேன் என கூறினார்கள்.

ஒரு தருணம் வெளியூரிலிருந்து ஒருவர் பெருமானார் களைப் பேட்டிகாண வந்தார். வந்தவர் வெகுநேரம் பேசிக் கொண்டிருந்து திரும்பிவிட்டார். உரையாடலை அதிசயத்துடன் கூர்ந்து கவனித்துக் கொண்டிருந்த சித்தீக்(ரலி) அவர்கள் அண்ணலை நோக்கி,

“நன்நபியவர்களே! உங்களிடம் வந்து உரையாடிய அந்த மனிதர் என்ன கேட்டார் தாங்கள் அதற்கு என்ன நயம்தழுவிய பதில் சொன்னீர்கள். உங்கள் இருவரின் உரையாடலை நன்கு என்னால் புரிந்து கொள்ள முடியவில்லையே!” என அதற்கும் அண்ணலவர்கள் மேற்கூறிய மறுமொழியே கூறினார்கள். அதனைக் கேட்ட சித்தீக் அவர்கள் சொன்னார்கள் நான் அரேபிய நாடு முழுமையும் சுற்றிப்பயணம் செய்துள்ளேன். நயமான அரபு மொழி பேசும் நாவலர்களையும் சந்தித்து அவர்கள் பேச்சையும் கேட்டுள்ளேன். எனினும் தாங்கள் பேசும் நவநாகரீக மொழிக்கு மேலான ஒரு நற்சுவை கொண்ட பேச்சை வேறு எவரிடமும் நான் செவியுற்றதில்லை.

ஒரு தருணம் ஹஜ்ரத் உமர் அவர்கள் திரு நபியவர்களைக் கண்ணோக்கி நன்நபியவர்களே! தாங்கள் எங்களை விட்டுச் சண நேரம் கூட பிரிந்து வாழ்வதில்லையே! அவ்வாறிருக்க தாங்கள் அற்புதமான அரபு மொழி பேசு கின்றீர்கள்! எவ்வாறு கற்றீர்கள்? எங்கு சென்று படித்தீர்கள்? என வினவுகின்றனர். அதற்கு பெருமானார் பதில் தருகின்றார் கள். எமது பாட்டனார் இஸ்மாயில் (அலை) அவர்கள் அன்று பேசிக் கொண்டிருந்த நவநாகரீக அரபு மொழி அவர்கள் காலத்தின் பின்னர் மறைந்து போய்விட்டது. அழிந்து போன அந்த அரபிய நவநாகரீகச் சொற்களை அமரர் ஜிப்ரயீல் (அலை) அவர்கள் என்னிடம் வந்து எடுத்துரைத்து அதனை எனக்கு மனதில் இருத்தினார்கள்.

அதாவது, திரு நபியவர்கள் பேசிய அரபி மொழி ஒரு அசாதரமான மொழியல்ல. நன்நபியவர்கள் தங்கள் நபித்துவப் பாணியிலான நடைமை பாட்டனார் இஸ்மாயில் (அலை) அவர்களின் நடையில் பிணைகின்றார்கள். அத்துடன் திருகுர் ஆன் திரு வசனங்களும் “வஹீ” இறை அறிவுப்பாக இருந்





பொருளடக்கம்

தமையால் இம்மூன்று நடைகளும் ஒன்று சேரும் போது அம்மொழிக்கு ஒரு புது மெருகு ஏற்றப்பட்டு புதுமை பொலிவு பெற்று ஒளி வீசத் தொடங்கியது. எனவே! கேட்போர் மனதில் அதன் அற்புத நடையும் அதிசய கருத்துக்களும் அலை அலையாக மோதுகின்றன.

திரு நபியவர்களின் பேச்சில் அமைந்துள்ள தனிச் சிறப்பில் ஒன்று ஜவாமிஉல்கலிம் எனப்படும் சொல் சுருக்கம்! கருத்துச்செறிவுகள் நிறைந்தவை. திருநபியவர்களே ஒரு தருணம் சொன்னார்கள், கருத்துக்கள் நிறைந்த சொல், சுருங்கிய வார்த்தைகள் எனக்கு வழங்கப்பட்டது என்று*

எடுத்துக்காட்டாக சில வார்த்தைகள்:—

நேசர், நேசருடனே.

இஸ்லாத்தை ஏற்பீர் : ஈடேற்றம் பெறுவீர்.

செயல்கள் எண்ணங்களைப் பொறுத்தவையே.

செயலுக்குரிய கூலி அதன் நாட்டப்படியே.

இல்லாளுக்கு பிறந்த குழந்தை இல்லானுக்குரியதே.

விபச்சாரனுக்கு கல்லடியே.

யுத்தம் ஓர் தந்திரமே.

கேட்டது பார்த்தது போன்றல்ல.

கூட்டங்களுக்கு (அமானத்) ரகசியம்,பாதுகாப்பு அவசியம்.

தீமையை விடுதல் தர்மத்தில்பட்ட ஒன்று.

மக்களின் தொண்டரே மக்களின் தலைவர்.

நற்பொருட்கள்யாவும் பொறாமைக்குள்ளானவை.

நல்லவார்த்தை தர்மத்தில் பட்ட ஒன்று.

கருணைகாட்டாதவர், கருணைகாட்டப்படார்.

மேற்கூறிய வார்த்தைகளை பாருங்கள் அரபி வார்த்தை களில் இரண்டு வார்த்தைகள் சேர்ந்துள்ளன. மிஞ்சினால் மூன்று சொற்களுக்கு அதிகமில்லை.

இவைகளின் சொல்நயம் கருத்துப்பொலிவு முதலியவை கள் இலக்கண இலக்கியப்பிணைப்பு முதலியவைகளை அரபு மொழியில் சிறந்த பாண்டித்தியம் பெற்ற நிபுணர்களே நன்கறிவர்

* அறிவிப்பு: அபூ ஹுரைரா(ரலி) நூல் முஸ்லிம்





பொருளடக்கம்

என்றாலும் இவைகளின் கருத்து செறிவுகளை நாம் சிந்தனை செய்தால் ஒவ்வொரு சொற்றொடர் இணைப்புகளுக்கு விளக்கம் தருவதாயின் பலபக்கங்கள் எழுதி முடிக்க வேண்டிவரும்.

பெருமானார்கள் பேருரைகளில் வந்த இந்த சுருங்கிய சொற்களில் சிலவற்றை மேலே குறிப்பிட்ட இத்தருணத்தில் முத்துக்கோர்த்தாற் போன்ற ஆயிரக்கக்கான நல்லுரைகளை அண்ணலவர்கள் எடுத்தியம்பி அகிலமக்களை ஆட்கொண்ட அந்த சொற் கொத்துக்களின் ஆழ்ந்த கருத்துகளின் சொல் நயத்தின் உயிரோட்டமும் எந்த அளவு மனதைக் கவர்ந்து வந்தன என்பதற்கு சில எடுத்துக்காட்டுகள்.

நீங்கள் இறையச்சம் கொண்டு நடக்க நற்போதனை செய்கின்றேன்.

உங்கள் தலைவர் அபிஸீனிய நாட்டு அடிமையாக இருந்தாலும் நீங்கள் தலைமைக்கு கட்டுப்பட்டு நடக்க, உங்களை வலியுறுத்துகின்றேன்.

எனக்குப்பின் உங்களில் ஜீவித்திருப்பவர் பற்பல வேறு பாடுகளைச் சந்திக்க வேண்டி வரும்.

அவ்வாறு வேறுபாட்டை சந்தித்த தருணத்தில் நீங்கள் எனது வழியையும் எனது வழியை கடைபிடித்து நடக்கும் நேர் வழி பெற்ற எனது கலீபா பிரதிநிதிகளின் வழிகளில் ஒழுகி நடப்பது கடமையாகும். அதனை நன்கு இறுகப்பிடித்துக் கொள்ளுங்கள். எச்சரிக்கையாக இருங்கள்! சன் மார்க்கத்தில் புதிய (போலி) நடை அனுஷ்டான முறையை புகுத்தாதீர்கள். ஏனெனில் புதிய அனுஷ்டானமுறைகள்யாவும் வழி கேட்டில் சேர்ப்பவைகளாகும்.

அண்ணலவர்களிடம் கேள்வி எவரும் கேட்டால் கேள்விக்கு ஏற்ற விடையும் சுருக்கமான சொற்றொடரும் எந்த அளவு அழகு நடை போடுகின்றது என்பதை ஒரு கேள்விபதிலில் கண்ணுறுங்கள்.

அம்ருப்னு அபஸா என்பவர் பெருமானார்(ஸல்) அவர் களைச் சந்தித்து உரையாட ஆரம்பிக்கின்றார்.

1. இந்த இஸ்லாமிய அழைப்பு இயக்கத்தில் முதன்முதலில் உங்களுடன் சேர்ந்தவர்கள் யார்?

(அடிமையில்லாத)

1. சுதந்திர மனிதரில் ஒருவர், ஹஜ்ரத் அபூபக்கர் சித்தீக்(ரலி) அடிமை இனத்தில் சேர்ந்தவர் ஒருவர்:— ஹஜ்ரத் பிலால்(ரலி)

2. இஸ்லாமிய சற்குணம் யாது?

தூய பேச்சு, பசித்தோருக்கு பசி தீர்த்தல்

3. ஈமான் (விசுவாசத்தின்) மூலப்பொருள் யாது? பொறுமை, கொடைத்தன்மை

4. இஸ்லாத்தின் நற்சிறப்பு யாது?*

தனது நாவைக் கொண்டும் கரத்தைக் கொண்டும் பிறருக்கு தீங்கிழைக்காதிருத்தல்.

5. ஈமானை மேன்மை படுத்துவது யாது?

எவரிடம் சிறந்த சற்குணம் உள்ளதோ அதுவே அவரை மேன்மைபடுத்தும்

6. சிறந்த தொழுகை யாது?

அடக்க ஒழுக்கத்துடன் நெடுநேரம் நின்று வணங்குவது

7. 'ஹிஜ்ரத்' ஒன்றைவெறுத்து (துறவு கொண்டு) ஒதுங்கு தலில் மேலானது யாது?

இறைவனுக்கு வெறுப்பானவற்றை நீர் வெறுத்து ஒதுங்கி விடுவது

8. ஜீஹாத் புனிதப்போரில் சிறப்பு மிக்கது யாது?

போரில் தனது குதிரையும் கொல்லப்பட்டு தானும் புனித மரணமடைந்து விடுவது.

9. *வணக்கத்திற்கு ஏற்றநேரம் எது?

இரவின் பிற்பகுதி.

ஒரு தருணம் திருநபியவர்கள் (ஸல்) முன்னில் மனிதனை நரகின் பக்கம் சேர்த்து வைப்பதற்கு முக்கியமாக உள்ளது யாது? என ஒரு கேள்வி பிறந்தது அதற்கு திருநபியவர்கள் (ஸல்) பதில் தந்ததாவது வாயும், அபமும் என்றார்கள்.

அதாவது வாயினால் இரண்டு தீமைகள் உருவா கின்றன. ஒன்று தீய உணவு மற்றொன்று தீய பேச்சு. மனிதன் தீய கேட்டினால் உண்ணும் உணவாலும் நரகம் செல்ல நேரிடுகின்றது. மேலும் அவன் தவறான வார்த்தை களை பயன்படுத்துவதால் ஒருவருக்கொருவர் மோதல் ஏற்படு கின்றது, சச்சரவு தோன்றுகிறது. அக்கிரமம் தலை தூக்கு

---

* அறிவிப்பு : நூல் மிஷ்காத்
* நூல்: மிஷ்காத்
* நூல்: மிஷ்காத்


பொருளடக்கம்

கின்றது. இதன் காரணமாகவும் நரகம் செல்ல நேரிடுகின்றது மேலும் தனது (மர்மத்தலத்தை) அபத்தை விலக்கப்பட்ட தவறான் வழிகளில் உபயோகித்து உடல் இச்சையை தணித்துக் கொள்வதாலும் அவன் நரகில் புக நேரிடுகின்றது. என்பதை எவ்வளவு அழகாக இரண்டே சொற்களில் சுருக்கி பதில் தந்ததை சற்று சிந்தித்துப்பாருங்கள்.

ஒரு சமயம் ஹஜ்ரத் அலி(ரலி) அவர்கள் நபிகள் திலகத்தை நோக்கி நபிகள் நாதரே! தங்கள் நடைமுறை விதிகளை எனக்கு விளக்கிக்கூறுங்கள் என ஒரு கேள்வி மூலம் வேண்டிக்கொண்டார். அதற்கு பெருமானார்(ஸல்) அவர்கள் எவ்வளவு அற்புதமாக ஒவ்வொன்றாக் சொல்லிக் காட்டுகின்றார்கள் பாருங்கள்.

மெஞ்ஞான அறிவு எனது மூலதனம்.

பகுத்தறிவு எனது சன்மார்க்க அடிப்படை.

அன்பு எனது அடித்தளம்.

ஆர்வம் எனது வாகனம்.

இறை நினைவு எனது தோழன்.

நம்பிக்கை எனது சேமிப்புப் பொருள்.

கவலை எனது துணைவன்.

கல்வி எனது ஆயுதம்.

பொறுமை எனது மேலாடை.

கிடைத்ததை பொருந்திக் கொள்ளுதல் எனது லாபகரப்பொருள்.

தாழ்மை எனது பெருமை.

(உலகப்) பற்றற்ற தன்மை எனது தொழில்.

உறுதி எனது ஊக்கம்.

உண்மை எனது உதவி.

வழிபாடு எனது கட்டுப்பாடு.

(ஜீஹாத்) நல்முயல்வு, தியாகம் எனது குணம்.

எனது கண்கள் குளிர்வது தொழுகையிலே

பொது மக்கள் நாட்டுப்புற மக்கள் விளங்குவதற்கு ஏற்றவாறு திருநபியவர்கள் அழகிய ஒப்பு உவமை காட்டி கூறிய





பொருளடக்கம்

பொன்னான விஷயங்களில் எண்ணற்றவை ஹதீது மொழி களில் வந்துள்ளன.*

எடுத்துக்காட்டிற்கு ஒன்றுமட்டும் இங்கு தருகின்றேன் அண்ணலவர்கள் அருளுகின்றனர். பூமியில் மூன்று வகைப் பட்ட பகுதிகள் உள்ளன.

1. ஒன்று அதில் மழை பெய்கின்றது. பெய்த மழையை அது அப்படியே ஏற்று உறிஞ்சி வைத்து பசுமை கொண்ட தாவரங்களை முளைக்கச்செய்து செழுமைப் படுத்துகின்றது.

2. இரண்டாவது வகை அது கெட்டித்தரையான பகுதி. அது தன்னில் பொழியும் மழையை பூமி ஏற்று தேக்கி பாதுகாத்து வைத்துக் கொள்கின்றது. திரட்டிப்பாதுகாத்து வைத்த அந்நீரை இறைவன் மனித இனத்திற்கு பயன்பட வைக்கின்றான்.மக்கள் அதனைக் குடிக்கின்றனர். பிறபொருள்கள் ஜீவன்கள் குடிக்கச் செய்கின்றனர். அதன் நீரை விவசாயப் பகுதிக்கு பாய்ச்சி செழுமைப்படுத்தி வளரச்செய் கின்றனர்.

3. மூன்றாம் வகை அது கட்டாந்தரை. திண்மை வாய்ந்த பகுதி அது. தன்மீது பெய்த மழையினை கட்டுப்படுத்தி தேக்கி வைப்பதுமில்லை. அதனை ஏற்று உறிஞ்சி தாவரங்களை செழுமைப் படுத்துவது மில்லை. இவைகளைப் போன்று மனிதரில் மூன்று பிரிவு உள்ளனர்.

ஒரு பிரிவினர் இறைவனால் எனக்கு வழங்கப்பட்ட சன்மார்க்க அறிவு, நேர்வழி, இவைகளை அறிந்து கற்று, தான் பயனடைகின்றனர்.

ஒருபிரிவினர் அதனை தானும் பயனடைந்து மற்றவரும் பயனடையச் செய்யபாடுபடுகின்றனர்.

ஒரு பிரிவினர் அதனை தானும் கற்றுத் தெரிந்து பயனடைய முயலுவதுமில்லை மற்றெவரும் பயன்பெறச்செய்ய வகை செய்வதுமில்லை எனவே! இறைவன் சன்மார்க்க நேர்வழியையும் அதன் நல்லறிவையும் எனக்கு தந்து என்னை உலகமக்கள் மத்தியில் அனுப்பி வைத்ததற்கு முன்பு கூறப்பட்ட இது ஒரு உதாரணமாகும் என்றார்கள்.

---

* நூல் : அஷ் ஷிஃபா
ஆசிரியர் : காலீ இயால்

மேலும் நீங்கள் அழகிய எளிய மொழி கொண்டு மக்களிடம் உரையாடுங்கள். நளினமான எளிய சொற்களைக் கொண்டு மக்களிடம் உரையாடுவீர்களாக. அன்றியும் விளங்காத கரடுமுரடான சொற்களை வம்பாக சேர்த்து பேசுதலை தாங்களும் விலகி நடந்தார்கள். மற்றவர்கள் அவ்வாறு பேசுதலை கண்டனப்படுத்தியும் எச்சரித்துள்ளார்கள்.

ஒரு தருணம் கூறியதாவது அகம்பாவம் கொண்ட மனத்துடன் கரடுமுரடான சொற்களை வம்பாக சேர்த்து அளந்து கொட்டி பிறர்புரியாது பேசுவோர் மறுமைநாளில் என்னைவிட்டும் வெகுதூரத்தில் இருப்பர் என்று கூறினார்கள்.

## 1. சொற்பொழிவு*

மனிதகுலத்தவரை புனிதப்படுத்தும் மாநபியாக வந்த அண்ணல் நபியவர்களுக்கு சொற்பொழிவு ஒரு மாபெரும் சாதனமாக அமைந்தமையால், அத்துறையில் நபியவர்கள் நிகரற்ற வல்லுனராக விளங்கினார்கள். சொற்பெருக்கும் நாவன்மையும் குரைஷி குலமக்களுக்கு குலவிருந்தாக அமைந்த அந்த அற்புத இனத்தில் பிறந்த இவர்கள் சம்பந்தமாக சொல்லவா வேண்டும்!. அனைத்து குரைஷியர்களிலும் இன்னும் ஒருபடி உயர்ந்தே தனித்தன்மை பெற்றே காட்சி தந்தனர். தரணிய மக்களுக்கு தலைமை தாங்கி நடத்திச் செல்லும் இவர்கள் சொற்பொழிவு ஆற்றத் தொடங்கினார்களாயின்,

இடைவிடாது தொடர்ந்து கொட்டும் நீர்வீழ்ச்சி போன்று மனதைக்கவர்ந்து மதி மயங்கச்செய்யும் இளந்தென்றல் போன்று, போர்களத்தில் தொடர்ந்து மினுமினுக்கும் போர்வாள்களின் பேரொளி போன்று ஓயாது ஒலித்துக்கொண்டு இருக்கும்.

அடிக்கடி சொற்பெருக்காற்றி நல்லுபதேசம் செய்து மக்கள் மனதில் சோர்வையும் அலட்சியத்தையும் உருவெடுக்க விரும்பாத இவர்கள் சமுதாயத்தின் தேவை, சூழல் இவைகளை முன்னிறுத்தி, உரித்தான நிதானத்தன்மையோடு சொற்பெருக்கு ஆயுதத்தை உபயோகிக்கத் தொடங்குவார்கள்.

பள்ளி வாயிலிலேயே பேசுகின்றார்கள் என்றால் கையிலே கம்பை ஊன்றி நிற்பார்கள்.

போர்களத்தில் உரையாடுகின்றார்கள் என்றால் கரத்திலே வில்லைப்பிடித்து நிற்பார்கள் இல்லை என்றால் வாகனத்தில் ஏறி வாகுடன் வாய் மொழி கொட்டுவார்கள்.

---

* நூல்: முஹ்ஸினே இன்ஸானிய்யத் பக்கம் 110

மடை திறந்தாற்போன்று நடைபோடும் அந்த சொற் பொழிவு நீரோட்டத்தின் இடையிடையே அத்திரு உருவம் வலமும் இடமும் மாறி மாறி திரும்பி பூரண சந்திரன் போன்று தோன்றும்.

கருத்துக்கேற்றவாறு கரங்கள் அசைவு கொண்டு சைகை செய்து கொண்டிருக்கும். சொல்லும் கருத்தை உறுதிபடுத்த, உண்மைபடுத்த, 'என்னுடைய உயிர் எவனிடம் இருக்கின்றதோ அந்த அல்லாஹுவின் மீது ஆணையாக' அல்லது 'இந்த முஹம்மதின் ஜீவன் யார்வசம் உள்ளதோ அவன் மீது சத்தியமாக' என்று திடப்படுத்திக் கூறிக் கொண்டிருப்பர்.

சொற்பொழிவின் போது அந்த உத்தம பேருருவத்தின் உள்ளத்தின் உணர்வலைகளின் வெளித் தோற்றம் பேச்சின் தொனியிலே திருவதனத்திரையிலே படம் பிடித்தாற்போன்று நடமாடிக் கொண்டிருக்கும்.

கேட்போர் மனத்தை ஈர்த்து கவர்ந்து பக்குவப்படுத்தி பரவசத்தில் மூழ்கச்செய்து விடும்.

எடுத்துக்காட்டாக இரண்டு சொற்பொழிவுப்பிரிவுகள் இங்கே சந்திக்கின்றன.

இஸ்லாமிய வரலாற்றுப் போர்களில், ஹுனைன் போர், தாயிஃப் போர் இவ்விரண்டும் முக்கிய இடம் பெற்றவை. இவ்விரண்டி லும் முஸ்லிம்களுக்கு மாபெரும் வெற்றி கிடைத்து ஏகப்பட்ட யுத்த கொள்ளைப்பொருள்களும் சொத்துக்களும் உடமைகளும் இவர்கள் கைவசமாயின.

திருமக்காவை வெற்றி கொண்ட பின்னர் கணக்கிலடங் காத காபிர்கள் முஷ்ரிக்குகள் இஸ்லாத்தை ஏற்று அந்த திருக் கோட்டையில் நுழைந்து புகலிடம் தேடிக்கொண்டிருந்தனர்.

புனித இஸ்லாத்தை புதிதாக ஏற்ற அந்த மக்கமா நகர குரைஷித் தலைவர்கள், சுற்றில் உள்ள மற்ற பிரமுகர்கள், மனச்சாந்திக்காகப் புதிதாக இணைந்ததில் திடமான இடப்பிடிப்பிற் காக திருகுர்ஆன் கட்டளைக்கிணங்க அவர்களுக்கு ஏகப்பட்ட பெருங்கொண்ட கொள்ளைப் பொருள்களை அண்ணலவர்கள் ஈந்து மகிழ்வு படுத்தினர்.

இச்சம்பவத்தின் காரணத்தையும் அடிப்படைத் தத்துவத் தின் மூல அம்சத்தையும் புரிந்து கொள்ளாத சில அன்சாரி தோழர்கள் அண்ணலவர்கள் நடந்து கொண்ட இம்முறையை குறைபடுத்தி இவ்வாறு விமர்சிக்கத் தொடங்கினர். என்ன! இஸ்லாமியப் போரில் நாம் ஈட்டிய வாள்களில் படிந்துள்ள உதிரத்துளிகளின் ஓட்டம் இன்னும் நிற்கவில்லை, காய்ந்தும்

போகவில்லை. அதற்குள்ளாக ஏந்தல் இறை தூதர் அவர்கள் இப்பொழுது இஸ்லாத்தில் பிணைந்த குரைஷியர்களுக்கு கொட்டிக் கொட்டி அளந்து விடுகின்றார்கள்.

துன்பகாலத்தில் நாம் தோள்கொடுத்து துணை நின்று பாடுபட்டோம். இன்ப காலத்தில் ஏகப்பட்ட கொள்ளைப் பொருள் களை இலவசமாக இஷ்டப்பட்டவர்களுக்கு அள்ளி விடுகின்றார் கள் என்று சாந்திக்கடல் சமாதான திருஉருவமாக வந்த அந்த அண்ணலவர்கள் இவ்விசயத்தை செவியுற்றதும் எவ்வளவு அமைதியாக பொறுமையை கடைப்பிடித்து என்ன பாங்குடன் பதில் கூறி மக்கள் மனதின் அடித்தளத்தை ஆட்டிப்படைத்து அன்புப்பிணைப்பை மேலோங்கச் செய்கின்றார்கள், பாருங்கள்.

அன்சாரிக் குழாமில் பட்டவர்களை மட்டும் தனிமையில் ஒரு கூடாரத்தில் கூட்டி அமரச்செய்தார்கள்.

ஏகமாக எல்லோரையும் நோக்கி,

எனது அன்புத் தோழர்களே! நீங்கள் இப்படி எல்லாம் பேசியதாக கேள்விப்படுகின்றேனே உண்மை தானா? என கேட்கின்றார்கள்.

ஆம் பேசியது உண்மைதான். ஆனால் எங்களில் பொறுப்பான மனிதர்கள் வாயிலிருந்து இந்தப் பேச்சு எழ வில்லை. விபரமறியாத சில இளைஞர்கள் இவ்வாறு பேசிக் கொண்டனர் என பதில் வருகின்றது.

பரிசீலனை செய்து விசயம் உண்மை என தெரிந்த பின்னர் அருமை நபியவர்கள் கேட்கின்றார்கள்.

எமது அன்புத் தோழர்களே! சற்று நினைத்துப் பார்த்து பதில் கூறுங்கள்.

என்ன, நீங்கள் மாபெரும் வழி கேட்டிலும் தீமையிலும் இருந்த நேரத்தில் இறைவன் என் வாயிலாக இந்த அற்புத சன்மார்க்க வழியை உங்களுக்கு காட்டி உங்களை உன்னதப் படுத்தவில்லையா?

**பதில்:** ஆம், ஆம்.

நீங்கள் பகைமை கொண்டு பற்பல பிரிவினர்களாக சிதறிப் பிரிந்திருந்த தருணத்தில் என் மூலமாக உங்களை ஏகமான ஒரே குழுவினர்களாக ஆக்கி ஐக்கியத்தைத் தோன்ற அருள் செயவில்லையா?

**பதில்:** ஆம், ஆம்.





பொருளடக்கம்

நீங்கள் வறுமையில் வாடி வதங்கி உழன்று கொண்டிருந்த தருவாயில் என் பொருட்டால் உங்களை ஒப்பற்ற செல்வந்தர் களாக ஆக்கி உயர் மட்டத்திற்கு மேலோங்கச் செய்யவில்லையா?

**பதில்: ஆம், ஆம்.**

ஒவ்வொரு கேள்விக்கும் அன்சாரித்தோழர்கள் வாயி லிருந்து, ஆம் உண்மைதான் சந்தேகமற அல்லாஹுவினுடைய அவனது திருத்தூதரினுடைய பேருபகாரம் எங்கள் மீது எண்ணற்றவை. இதனை நாங்கள் உளமார ஒப்பி ஏற்கின்றோம் என ஏகமனதாக ஒரே குரலில் ஒலி வந்து கொண்டிருந்தது.

அவ்வமயம் அண்ணலவர்கள் அவர்களைக் கண்ணோக்கி இதற்கு மாறாக நீங்கள் என்னிடத்தில் இவ்வாறு பதில் தருவீர் களாயின்,

முஹம்மதுவே! மனித குலத்தவர் உங்களை பொய்யரென கூறி எதிர்ப்புக்கணைகளை ஏவிக் கொண்டிருந்த நேரத்தில் உங்களை உண்மையான உத்தம நபி என வரவேற்றோம்.

உங்களை ஆதரிப்பாரற்று அனைவரும் கைவிட்ட நேரத்தில் உங்களை எதிர் கொண்டு அழைத்து போற்றிப் புகலிடம் தந்தோம்.

நீங்கள் ஏழ்மையில் சிக்குண்டு வறுமையில் சுழன்று கொண்டிருந்த தருணம் உங்களுக்கு சகலதுறைகளிலும் நல்லுதவி தந்து கரம் கொடுத்து காப்பாற்றினோம் என நீங்கள் பதில் கூறுவீர்களாயின்,

நான் கூறுவேன் 'ஆம், நீங்கள் கூறுவது அனைத்தும் வாஸ்தவமே! நான் அதனை மறுக்கவே இல்லை.' என கூறிக் கொண்டே இருப்பேன்.

எனினும் எமது அன்சாரித்தோழர்களே!

நான் உங்களிடம் ஒன்று மட்டும் கேட்டுக் கொள்ள ஆவல்படுகின்றேன்.

"(இந்த மக்காவாசிகளான) இவர்கள்! (இவர்களுக்கு வழங்கப்பட்ட) இந்த ஆடுமாடு ஒட்டகைகள் போன்ற மிருகங் களை அவர்கள் ஓட்டிச்செல்லட்டும்.

அதற்கு பதிலாக இந்த முஹம்மதுவை (தன்னை) உங்கள் இல்லங்களுக்கு கொண்டு செல்ல உசிதப்பட மாட்டீர் களா?" எனக்கேட்டதும் அத்தனை திருத்தோழர்களின் அன்பு முகங்களில் இன்பமலர்கள் விரிந்தோடின.

சிந்தியுங்கள் சொற்பொழிவின் ஏற்றத்தை நோக்குங்கள் சீற்றத்தைக் கவனியுங்கள் உச்சகட்டத்தை எட்டிப்பாருங்கள். கருத்துச் செறிவின் போக்கை கவனியுங்கள்.

இந்த அபாயகரமான உணர்ச்சிக்கறையை அந்த உத்த மரின் கூரிய வாள் (நாவு) போன்ற சொற்பெருக்கு ஆயுதம் எவ்வளவு நாசுக்காக சீவி அகற்றி, சாணைபிடித்து, சீர்படுத்தி, செப்பனிட்டு, தூய்மைபடுத்தியது என்பதை கவனியுங்கள்.

ஈடு இணையற்ற பேச்சாளரான இவர்கள் கேட்போரின் உள்ளங்களை எந்த அளவு உற்சாக மேலீட்டால் துள்ளி எழச்செய்தார்கள் என்பதைப் பாருங்கள்.

அந்த அன்சாரிக்குழாமில் பட்ட எல்லோருடைய இதய அடித்தளத்திலிருந்து என்ன எழுந்து முட்டி மோதிக் கொண்டு வருகின்றது என்பதைப் பாருங்கள்.

கேவலம் இந்த உலகப்பொருள்களில் எதுவும் எங்களுக்கு தேவை இல்லை. அனைத்தும் துச்சமானவைகளே!

அதே நேரத்தில் "எங்கள் உத்தம சீலர் சத்திய திரு நபி எம்பெருமானார் முஹம்மது(ஸல்) அவர்களாகிய நீங்கள் மட்டும் எங்களுக்குக் கிடைத்தாற்போதும்!!

அதுவே எங்களுக்கு போதும்!" போதும்!! என ஆர்பரித்து குதித்தெழுந்து கூறினார்.*

திரு நபியவர்கள் குரைஷியர்களை முன்னிறுத்தி சொற் பொழிவாற்றியவைகளில் முதன்மையானது ஸஃபா மலைக் குன்றின் சொற்பொழிவு.

அது நீங்கலாக எத்தனையோ சொற்பொழிவுகள் அவர்கள் முன்னில் செய்துள்ளனர். **அவைகளில் ஒன்று இதோ உங்கள் முன்னில்.** சமுதாயத்தை நடத்திச்செல்லும் **தலைவன்** நிச்சயமாக அவன் அவர்களிடம் பொய் கூறவே மாட்டான்.

இறைவன் மீது ஆணையாக நான் பொய் கூறவே மாட்டேன். அனைத்து மக்களிடமும் பொய் கூறி பகட்டுக்காக நிச்சயம் பொய் கூறவேமாட்டேன். அப்படியே நான் அனைத்து மக்களையும் அழிவின் பக்கம் கொண்டு சேர்பவனாக பாவித்துக் கொண்டாலும் நிச்சயம் நான் உங்களை அழிவின் பக்கம் நாசத்தின் வழியில் அழைத்துக்கொண்டு செல்லவே மாட்டேன்.

---

* நூல்: புகாரீ

வணங்குதற்கு உரித்தான அந்த அல்லாஹு ஒருவனைத் தவிர்த்து வேறுயாருமில்லை. உறுதியாக நான் அனைத்துலக மக்களுக்கும் குறிப்பாக உங்களுக்கும் அல்லாஹுவினால் நியமிக் கப்பட்ட திருத்தூதராக அனுப்பப்பட்டுள்ளேன். நீங்கள் ஒவ்வொரு வரும் நித்திரையில் ஆழ்ந்து விடுதல், போன்று ஒரு தினம் நீங்கள் மரணிக்கவே போகின்றீர்கள். நீங்கள் தூக்கத்திலிருந்து எழுந்திருப்பது போன்று ஒரு நாள் நீங்கள் உயிர்ப்பித்து எழுந் திருக்கப் போகின்றீர்கள். அந்நாளில் நீங்கள் செய்த செயல்கள் பற்றி கணக்கு வாங்கப்படுவீர்கள். நீங்கள் நல்லவை செய்திருந் தால் அவசியம் நற்கூலி பெறுவீர்கள் இடர் செய்திருந்தால் அவசியம் தண்டனை பெறுவீர்கள். அவைகளின் பிரதிபலனாக நீங்கள் நிரந்தர சொர்க்கம் அடைவீர்கள் அல்லது நிரந்தர நரகம் செல்வீர்கள். மேற்கூறப்பட்ட சொற்பொழிவை கவனியுங் கள் எவ்வளவு மென்மையான பேச்சு எந்த அளவு அறிவை யும் உணர்ச்சியையும் தட்டி எழுப்பப்படுகின்றது. சமுதாயத் தலைவர் சமுதாய நலனை எவ்வளவு பொருப்புணர்வோடு செயல்படுத்துகின்றார்கள். எதிர்கால நிகழ்ச்சிகளை எவ்வளவு உறுதிபடுத்தி படம் பிடித்து காட்டுகின்றார்கள். மிகச்சிறிய இந்த சொற்பொழிவில். உவமை தாண்டவமாடுகிறது ஏகத்துவம் துளிர்கின்றது. தூதுத்துவம் மலர்கின்றது. மறுமை பற்றிய அடிப்படை திட்டம் முன்னில் நிற்கின்றது.*

## அண்ணல் நபிகளின் அருமைக் குணங்கள்

### பொது வாழ்வு

நாட்டிற்கு நற்பணிபுரியும், மனித இனத்தவருக்கு புனிதப் பணி செய்யும் புண்ய சீலர்களை நாம் அறிந்துள்ளோம்.

மகத்தான மாபெரும் சேவைகள் செய்யும் அப்பெரியோர் கள் பொது மக்களின் தொடர்பு கொண்டு ஒவ்வொருவரின் தனிப்பட்ட பிரச்சினைகளைத் தீர்த்து வைத்து தன்னிறைவு கொண்டோராக ஆக்குவதற்கு அதற்குரிய நேர ஒதுக்கீடு செய் வதை அவர்களில் சிலர் பிரியப்படுவதுமில்லை. அதற்குரிய செயல்முறையைப் பேணுவதுமில்லை அவர்களில் தனிமையில் இனிமை கொள்பவர் சிலர். கடுகடுப்பு வக்கரிப்பு வறட்சிக் குணம் கொண்டோர் சிலர். பெருமையே தனக்குரிய உரிமை எனக்கருதி தன்னை கீழே இறக்காமல் அப்படியே அமர்ந்து அகம்பாவம் கொண்டு நடப்போரும் சிலர்.

அதே தருணம் பெருமானார் (ஸல்) அவர்கள் திருவாழ்வுக்கு வாருங்கள். உலகில் தோன்றிய பெருமகர்களில்

* நூல் : ஜம்ஹரதுல்குதப், பக்கம் 5

எவரும் சாதிக்க முடியாத ஒரு மாபெரும் சாதனையைப் புரிந்து எவரும் எட்டிப்பிடிக்கமுடியாத ஒரு மாபெரும் இடத்தைப் பிடித்து வெற்றிக்கொடியை நாட்டிய இவர்கள், பொதுமக்களோடு முழுத் தொடர்பு. சமுதாயத்தாரிடம் சகல நேரமும் ஒட்டியவாழ்வு. தனிப்பட்ட ஒவ்வொரு நபர் மீதும் குறிப்பான கண்ணோட்டம். இத்தனையும் திரட்டிய இவர்களிடம். இம்மியளவு பெருமை இதயத்தில் காண முடிந்ததா! மக்களை விட்டும் என்றாவது ஒதுங்கி வாழ நினைத்தார்களா! வறட்சி, வக்கரிப்பு என்றாவது தென்பட்டதா! ஏன்! உலகமக்களை ஒன்று சேர்த்து ஏக சகோதரப்பிணைப்பிற்கு திட்டம் தீட்டிய இவர்கள், ஒருவர் மற்றவ ரோடு ஒட்டி வாழ வேண்டும். ஒவ்வொருவரும் தனக்கென வாழாது பிறருக்காக வாழ வேண்டும். ஒவ்வொருவரும் அவரவர் உரிமை பெற்று சுதந்திரத்தோடு இருக்க வேண்டும் என்ற அடிப்படையை உருவாக்கிய இவர்களிடம் மேற்கூறப்பட்ட தகுதியற்ற செயல்கள் எதுவும் தலைதூக்க என்ன இருக் கின்றது! யாவும் தனக்கே வேண்டும், தனது சுய நலத்திற்கே யாவும் பயன்பட வேண்டும் என்ற அடிப்டையில் பிறர் பற்றி எவ்வித சஞ்சலமும் கொள்ளாது, மனிதனை மனிதனே தீர்த்துக் கட்டி தானே வாழ வேண்டும் என்ற வழிமுறையை கடைப் பிடித்து மனிதாபிமானமற்று நடக்கும் இன்றைய மக்களுக்கு, அந்த அண்ணல் நபியவர்களின் சமுதாய பிணைப்பு வாழ்க்கை எவ்வாறு படம் பிடித்து காட்டுகிறதென்பதைப் பாருங்கள்.

## சலாம், முகமன்

- பாதையில் நடந்து வருவோர்க்கு பண்புடன் சலாம் கூறு வர்.
- முன்னதாக சலாம் கூறுதலில் தயக்கம் ஏதும் கொள்ள மாட்டார்கள்.
- எவரிடமும் செய்தி அனுப்புவதாயின் அத்துடன் தான் சலாம் கூறியதாக கூறும்படியும் சொல்லி அனுப்புவர்.
- எவருக்காவது சலாமை எத்தி வைக்க வேண்டியதாயின், சலாம் கூறி அனுப்புவோருக்கும், பதில் சலாமை கொண்டு வருவோருக்கும், தனித்தனியாக சலாம் கூறுவர்.
- குழந்தைகள் கூடியிருந்த கூட்டத்தினருகில் சென்றால் அவர்களுக்கும் சலாம் கூறுவர்.
- அணங்குகளின் அவையின் அருகில் சென்றால் அவர் களுக்கு சலாம் கூறுவர்.





பொருளடக்கம்

- வீட்டினுள் நுழையும் போது சலாம் கூறுபவர் வெளியேறும் போதும் சலாம் கூறுவர்.
- உற்ற நேயர்களைச் சந்திக்கும் போது கட்டித்தழுவி, கைலாகை செய்வர்.
- (முஸாஃபஹா) கைலாகை கொடுக்கப்பட்டவர், அவராக தனது கையை கழற்றாத வரை தாங்களாக முதன் முதலில் தங்கள் கரத்தை கழற்ற மாட்டார்கள்.

## கூட்டம்

- திருத்தோழர்கள் கூடிய கூட்டத்தினருகில் செல்வார்களாயின் தங்களைக் கண்டு திருத்தோழர்கள் எழுந்து மரியாதை செய்வதை அருவருப்புச்செய்து தடுத்து நிறுத்தி விடுவர்.
- கூட்டத்தில் ஒதுங்கி ஓரத்தில் உட்காருவதையே உசித மாக கைக்கொள்வர்.
- கூட்டத்தில் மக்களின் தோள்புஜங்களைத் தாண்டி நடுவில் அமருதலை பிரியப்படமாட்டார்கள். பணிவுப் பண்பில் அல்லாஹுவின் ஒரு அடியான் போன்று நான் அமருவேன்,எழுந்திருப்பேன் என கூறுவர்.
- கூட்டத்தில் தோழர்களோடு அமர்ந்திருக்கும் தருணம் வரிசையில் தங்களைத் தனிப்படுத்தி முன்னில் தனி இடம் வகுத்து அமர்ந்திருக்கமாட்டார்கள்.
- தங்களைச் சந்திக்க வருவோரை சங்கைபடுத்த தங்கள் உடலில் போர்த்திய போர்வையை விரித்து அதன் மீது அமரச் செய்வர்.
- பேட்டிகாண வந்தவர் அவராக முதன் முதல் எழுந்திருக்காதவரை அண்ணலவர்கள் அவரைப்பிரிந்து குழுவைவிட்டு எழுந்திருக்க மாட்டார்கள்.

## உரையாடல்

- குழுவினர் ஒரு காரியம் பற்றி உரையாடிக் கொண்டிருப்பார்களாயின் அவ்வுரையாடலை முறித்து வேறு விசயத்தின்பக்கம் அவர்களைத் திருப்பாது அப்பேச்சிலேயே அவர்களும் கலந்து பிணைப்பு கொள்வர்.
- சுபுஹ் காலை நேரத்தொழுகை முடிந்த பின்னர் பெரும்பாலும் தோழர் பெருமக்கள் பழங்கால நிகழ்ச்சிகள்





பொருளடக்கம்

சம்பவங்கள் பற்றி உரையாடி, மகிழ்ச்சிப் பெருக்கெடுத்து சிரிப்பு வெள்ளத்தில் மூழ்கிக் கொண்டிருப்பர்.* சுவை யான காவியங்களைப்பாடி அவையோர்களை சிரிப்பில் ஆழ்த்திக் கொண்டிருப்பர். அத்தனையிலும் அண்ணல வர்கள் பக்குவப் பாங்குடன் பங்கு கொண்டு அவையி னரை அலங்காரப்படுத்தி விடுவர்.

- அவையினர் பேச்சில் அருவருப்பும் வேண்டத்தகாத விசயங்கள் நடமாடும்போது உடனே அப்பேச்சினை முறித்து வேறு திருப்பத்திற்கு கொண்டு வந்து விடுவர்.
- உரையாடலின் போது ஒரு நபரையே முன்னோக்கி கூறி தனிப்பட்ட ஒரு நற்சிறப்பை அவருக்கு உருவெடுக்க வைக்காதிருக்க அவையினுள் உள்ள அனைத்து நபர் களையும் ஒவ்வொருவராக முன்னோக்கி பேசிக்கொண் டிருப்பர்.
- தொடர்ந்து ஒரு விசயத்தை பேசிக் கொண்டிருக்கும் தருணம் அவ்விசயத்திற்கு சம்பந்தமற்ற ஒரு வினாவை ஒருவர் கிளப்புவாராயின் உடனே அவருக்கு பதில் பகராது நடந்த பேச்சை தொடர்ந்து முடித்து விட்ட பின்னர் அவருடைய கேள்விக்குரிய அழகான பதிலைக் கூறுவர்.
- தங்களை நோக்கி பேசிக் கொண்டிருப்பவர் தானாக தனது முகத்தை திருப்பாதவரை தாங்களாக தங்கள் முகத்தை முன்னதாக திருப்பிக் கொள்ளமாட்டனர்.
- ரகசிய விசயங்களை எவராவது அண்ணலவர்கள் காதின் பக்கம் வந்து கூறுவாராயின், அவர் பேச்சை முடிக்கும் வரை தங்கள் காதைக் கொடுத்து தலையைத் தாழ்த்தி செவி மடுத்துக்கொண்டே இருப்பர். இடையில் அவரை விட்டுப்பிரிந்து செல்ல பிரியப்படமாட்டார்கள்.
- உண்மைக்கும் நேர்மைக்கும் ஏற்ற பேச்சை எவர் கூறினாலும் அதனை இடையில் தடுக்காது கேட்டுக் கொண்டே இருப்பர். பேச்சு நேர்மையற்றிருந்தால், அதனை உடன் தடுத்து விடுவர். அல்லது அதனை அறிவுறுத் தும் வகையில் திருவதனம் மாறுபட்டு விளங்கும். அல்லது அவ்விடத்தை விட்டும் உடனடியாக எழுந்து சென்று விடுவர்.

---

* அறிவிப்பு : அன்னை ஆயிஷா (ரலி)

- முக்கிய விசயங்களை நின்ற நிலையில் பேசித்தீர்த்துக் கொள்வதை என்றும் பிரியப்படமாட்டார்கள்.
- பிடித்தமற்ற விஷயங்களில் செவியுற எப்பொழுதும்பிரியப் படமாட்டார்கள்
- ஏற்காத ஒருவர் பேச்சையோ அல்லது செயலையோ கண்டிப்பதாயின் அன்னாரை பெயர் கூறிக் கண்டிக் காது பொதுப்படையாக சைகை செய்து கண்டிப்பர். அல்லது பொது உபதேசத்தின் வாயிலாக தடுத்து எச்சரித்து விடுவர்.
- நேர்மைக்கும் சட்டத்திற்கும் புறம்பாக நடப்பவரைக் கண்ணோக்கினால் அவரின் பக்கம் முகத்தை திருப்பி ஏறிட்டுப்பார்க்க மாட்டனர். அவருடைய சலாத்திற்கு பதில் சொல்லவும் மாட்டனர்.

பகிரங்கத்தில் தீய மனிதன் என கண்டறிந்த மனிதனைக் கூட அவன் அவர்களை பேட்டி காண வந்த நேரத்தில் மலர் முகத்தோடு உரையாடி அவனை மகிழ்வித்து விடுவர்.

ஒரு தருணம் ஒரு மனிதன் தங்களைப் பேட்டிகாண வந்தான். அவன் தூரத்தில் வரும்போது அவனைக் கண்டவுடன் அண்டையில் அமர்ந்திருக்கும் தோழர்களிடம்,

இதோ! தனது கூட்டத்தாரிடையே மிகக் கெட்டபுதல்வன் மிகக்கெட்ட தோழன் ஒருவன் வருகின்றான் என கூறினர். சிறிது நேரத்தில் அவன் வந்தடைந்ததும் அண்ணலவர்கள் அவனிடம் அளவளாவிப்பேசி அவனை மகிழ்வுக்கடலில் மூழ்கச் செய்து விட்டனர்.

அவன் சென்ற பின் அன்னை ஆயிஷா சித்தீகா அவர்கள் ஆச்சரியப்பட்டு கேட்கின்றார். என்ன! நன்நபியவர் களே! வந்த அந்த மனிதனைக் கெட்ட கொடியோன் என கூறினீர்கள். அவன் வந்தடைந்ததும் அவனிடம் அளாவளா விப்பேசி மகிழ்வித்து விட்டீர்களே! என்று. **அல்லாஹுவின் மீது ஆணையாக!** உலகில் மக்கள் எவனைக் கெட்ட குணம் படைத்தோன் எனக்கருதி அவனைச் சந்திக்காது அவனை விட்டு ஒதுங்கி நடக்கின்றனரோ! அத்தகையவன் மறுமை நாளில் மிகக் கெட்டவனாவான், என்று பெருமானார்கள் பதில் கூறினார்கள்.

<u>சந்திப்பு</u>

- நண்பர்களைச் சந்திக்க அவர்கள் இல்லங்களுக்கே கினால் வீட்டின் வாயிலுக்கு நேரே நிற்காது அதன்

வலப்புறம் அல்லது இடப்புறம் நின்று கொண்டு தங்கள் வருகையை அறிவிப்புச் செய்ய அல்லது அனுமதி கோர மூன்று முறை சலாம் கூறுவர். பதில் கிடைக்கா விடில் எவ்வித சங்கடமும் சஞ்சலமும் கொள்ளாது சட்டென திரும்பிவிடுவர்.

- இரவு நேரத்தில் எவரையாவது சந்திக்கச் சென்றால் சந்திப்பு தர வேண்டியவர் விழித்திருந்தால் செவியில்படும் அளவு, தூக்கத்திலிருந்தால் தூக்கத்திற்கு தொல்லை கொடுக்காத அளவு, சலாம் கூறும் குரலை மென்மை யாக இயக்கி அறிவுப்புச் செய்வர்.

- தங்கள் உடலில் அல்லது உடையில் ஒட்டியுள்ள துரும்பு, மண் போன்றவைகளை அகற்றி விட்டவர் களுக்கு அத்தொண்டின் காரணமாக நன்றி செலுத்தும் வகையில் உமக்கு பிடிக்காத அருவருப்பான ஒவ்வொரு பொருளையும் உம்மை விட்டு இறைவன் அகற்றி வைப்பானாக என "துஆ" பிரார்த்தித்து பாராட்டுவார் கள். அதே தருணம் அதற்கு பிரதி செய்யும் நினைப்பை மனதில் இறுத்தி சமயம் வரும் பொது பிரதியும் செய்தும் விடுவர்.

- தற்செயலாக தங்கள் மூலம் பிறருக்கு இடஞ்சல் எதுவும் தோன்றி விட்டால் அவ்விடஞ்சலுக்கு பதில் பழிவாங்கும் உரிமையை அவருக்கு அளித்து அதற்கு தங்களை ஆயத்தப் படுத்திக் கொள்வர்.* அல்லது அதற்குப்பிரதி யாக அன்பளிப்பு எதுவும் செய்து சமாதானம் செய்து சாந்தப்படுத்தி விடுவர்.

- புத்தாடை பூண்டு பொலிவுடன் எதிர்நோக்கிவருபவரைக் கண்டால் அழகு! என்னே! அழகாக இருக்கின்றது! நீண்ட நாட்கள் இதனை நீர் அணிந்து கொண்டி ருப்பீராக! என வாழ்த்துரை கூறுவர்.

- தீங்கிழைத்தோருக்கு பதில் தீங்கு கொடுக்க என்றும் பிரியப்படமாட்டனர். மாறாக மன்னித்தருளும் மாபெரும் பண்பே அவர்கள் திருவாழ்வில் நிறைந்து நடமாடிக் கொண்டிருந்தது.

- பிறர் செய்த இடரை மன்னித்துவிட்டால் அம்மன்னிப்பின் அடையாளமாக தங்கள் தலைப்பாகையை அனுப்பி வைத்து அறிவித்து விடுவர்.

---

* நூல் : அல்மவாஹிபுல்லதுன்னீ

- வெளியாட்கள் நண்பர்கள் ஏன் தங்கள் குடும்பத்தில் உட்பட்டோர் வரை எவர் அவர்களைக் கூப்பிட்டு அழைப்புக் குரல் கொடுத்தாலும் (லப்பைக்) இதோ ஆஜர் வந்துவிட்டேன் என பதில் பகர்ந்து செல்வர்.

## நோய்வினவுதல்

- நோய் வாய்ப்பட்டோரை நோய் வினவ அதற்கென தனிப்பட்ட முயல்வை மேற்கொண்டு செல்வர்.

- நோய் வாய்பட்டோர் தலை மாட்டின் அருகில் அமர்ந்து உமது உடல் நிலை எவ்வாறு உள்ளது எனக்கேட்ட நிலையில் நோயுற்றோர் நெற்றி அல்லது கை நாடி நரம்பில் கரம் வைத்து விசாரிப்பர்.

- சிலதருணம் தங்கள் திருக்கரங்களால் நோயாளியின் மார்பு, வயிறு, நெற்றி முதலியவைகளை தடவிக் கொடுத்துக் கொண்டும் வினவுவர். எதுவும் சாப்பிடு கின்றீரா எனவும் கேட்பர்.

- நோயாளி உண்ண விருப்பப்படும் உணவை தருவித்துத் தர என்ன உணவை விரும்புகின்றீர் எனக் கேட்பர். தேவைப்பட்ட உணவை அவர் கூறினால் அது அவருக்கு தீங்கு தரக்கூடாததாக இருந்தால் அதனை வரவழைத்து உண்ணச்செய்வர். தீங்கிழைப்பதாயின் அதனைத் தடுத்து விடுவர்.

- நோயாளி மனச்சாந்தி பெற; நீர் கவலைப்படாதீர் இறைவன் நாடினால் குணப்படுத்தி விடுவான் என கூறி குணமாக 'துஆ' பிரார்த்தனையும் செய்வர்.

- திருத்தோழர் ஹஜ்ரத் ஸஅது(ரலி) அவர்கள் நோய்வாய்ப்பட்ட போது அவர்கள் குணமடைய மூன்று விடுத்தம் துஆ செய்தனர்.

- திரு நபியவர்கள் தந்தையுடன் பிறந்த மூன்று பெரிய தந்தையர்கள் இஸ்லாத்தை ஏற்காத (ஷிர்க்) குபுரு நிலையில் இருந்த தருணம் கூட அவர்கள் நோய் வாய்பட்ட நேரத்தில் நோய் வினவச் சென்றனர்.

- ஒரு யூதச் சிறுவன் இஸ்லாத்தை ஏற்றான் அவன் ஏற்ற சில நாட்களில் நோய்வாய்பட்டு விட்டான். செவியுற்றதும் அண்ணலவர்கள் அவனிடமும் சென்று நோய் வினவினர்.

- நோய் வினவ ஒரு காலத்தை நேரத்தை அதற்காக ஒதுக்கீடு செய்வதில்லை. அண்ணலவர்களுக்கு அதன்

அறிவிப்பு கிட்டியதும் சந்தர்ப்பம் கிடைத்த உடன் விசாரிக்கப் புறப்பட்டு விடுவர்.

- திருத்தோழர் ஹஜ்ரத் ஜாபிர் அவர்கள் நோய்வாப்பட்டு விடுகின்றனர். அவர்கள் வசிக்குமிடம் திருமதீனாவுக்கு வெளிப்புறப்பகுதி. நகரத்தை விட்டும் தூரமானஇடம். நோய் வாய்ப்பட்டதைச் செவியுற்றதும் நன்நபியவர்கள் அன்புத்தோழர் அபூபக்கர் ஸித்தீக்கை (ரலி) உடன் அழைத்துக் கொண்டு கால் நடைப்பயணமாக புறப்பட்டுச் சென்று ஜாபிர் அவர்களைச் சந்திக்கின்றனர்.

ஹஜ்ரத் ஜாபிர் அவர்கள் அத்தருணம் உணர்வற்று மயக்க நிலையில் கிடக்கின்றனர். இந்நிலையைக் கண்ணுற்றதும், திரு நபியவர்கள் துஆ செய்தார்கள். பின்னர் சிறிது தண்ணீரை கரத்தில் எடுத்து ஜாபிர் அவர்கள் முகம் உடல் முதலிய பாகங்களில் தெளித்தனர். துஆ செய்தனர்.

சற்று நேரத்தில் தோழர் ஜாபிர் அவர்களுக்கு தெளிவு தோன்றி விட்டது திரு நபியவர்களிடம் உரையாடத் தொடங்கினர் தரிகா, அனந்தரவாரிசு சொத்து சம்பந்தமாக, ஹஜ்ரத் ஜாபிர் அவர்கள் சில விளக்கங்கள் கேட்டுத் தெரிந்து கொண்டனர். நோய் வாய்ப்பட்டு உயிருக்கு போராடிக் கொண்டிருக்கும் நேரத்திலும் கல்வி அறிவின் தோட்டம்!.

- நோய்வாய்ப்பட்டோரை வினவுதலில் எந்த அளவு பணிவுப்பண்பை கனிவுடன் கைக்கொண்டார்கள் என்றால், திருநபியவர்களுக்கு சதாகாலமும் எல்லையற்ற தொல்லைகளை நேர்முகமாக, மறைமுகமாக, கூரிய முட்கள் போன்று குத்திக்குத்தி கொடுத்துக்கொண்டிருந்த நடிப்புக்காரன் முனாபிக்கு கூட்டத்தாரின் தலைவன், அப்துல்லா ஹிப்னு உபை, நோய் வாய்ப்பட்ட தருணத்தில் அண்ணலவர்கள் அவனிடமும் சென்று நோய் விசாரணை செய்தனர்.
- மரித்தோரின் வீட்டிற்குச் சென்று துக்கம் விசாரிப்பர். மரித்தமனிதரின் அடக்க வைபவத்தில் முழுக்க கலந்து கொள்வர்.
- மரணப்படுக்கையில் உள்ளவர் குற்றுயிரான நிலையில் உள்ளார் என கேள்விப்பட்டாலோ அல்லது அழைக்கப் பட்டாலோ உடனடியாக சென்று பார்வையிடுவர்.
- அவரின் நிலையை அனுசரித்து அன்னாருக்கு தவ்ஹீத் ஏகத்தவ நம்பிக்கை பற்றியும் இறைவன் பக்கல் திருப்பம்

கொண்டு அவனது நினைவிலேயே திழைத்திருக்கவும் திருக்கட்டளை இடுவர்.

- இறந்தோரின் குடும்பத்தினர் உறவினரிடம் சென்று தங்கள் ஆழ்ந்த அனுதாபத்தை தெரிவித்து பொறுமையைக் கைக்கொள்ள அருமை மொழி கூறுவர்.
- அவர்கள் அழுது புலம்பி கூக்குரலிட்டு முட்டி மோதி சட்டைதுணிகளை கிழித்து முடியைப்பிய்த்து சஞ்சலத்தை தோற்றுவிப்பதை அடியோடு தடை செய்து நிறுத்துவர்.
- மரித்தோரை அடக்கம் செய்ய அவர் மீது போர்த்த கபன் ஆடையில் வெண்ணிற ஆடையே விரும்பத் தகுந்ததென கூறுவர். அதனையே கைக்கொள்ள கட்டளையும் பிறப்பிப்பர்.
- நல்லடக்கம் செய்வதில் துரிதத்தை மேற்கொள்ளக் கூறுவர். ஜனாஸா கொண்டு செல்லும் போது தாங்களும் அத்துடன் நடந்து செல்வர்.
- ஜனாஸா தொழுகையை தாங்களே நடத்தி வைப்பர். அன்னாருக்காக பாவமன்னிப்பும் கோருவர்.
- தங்கள் முன்னில் பிரேத ஊர்வலம் சென்று கொண்டிருந்தால். எழுந்து மரியதையைக் காட்டுவர். (அவ்வாறான தருணத்தில் சில நேரம் தாங்கள் அமர்ந்து கொண்டிருந்ததாகவும் அறிவிப்பு கிடைக்கின்றது. மேலும் ஆரம்ப காலத்தில் அவ்வாறு எழுந்து நின்றனர், பின்னர் அவ்வாறு அதனைக் கையாளவில்லை எனவும் விளக்கம் வருகின்றது)*
- மரித்தோர் குடும்பத்தினருக்காக மற்றோர் (உறவினர் முதலியோர்) உணவு தயாரிப்புச் செய்து அனுப்ப கட்டளையிடுவர்.

அண்ணலவர்களின் அன்பு சகோதரர் ஹழ்ரத் ஜஅபர், (ஹழ்ரத் அபூதாலிபின் குமாரர்) அவர்கள் இறந்த தருவாயில் திரு நபியவர்களே, தங்கள் குடும்பத்தாரை உணவு தயாரிப்புச் செய்து ஜஅஃபரின், குடும்பத்தாருக்கு அனுப்பி வைக்க கட்டளையிட்டனர். (நமது பகுதியில் இதற்கு நேர்மாற்றமான நிலையே நிகழ்ந்து வருகின்றது இதனை செவியுற்ற பின்பும் நமது நிலையில் படிப்பினை பெற வேண்டாமா?)

---

* நூல் ஜாதுல்மஆது [illegible]

- வெளியூர் பயணத்தை முடித்து திரும்பிவரும் திருத்தோழர் எவரும் சாந்தி நபியவர்களைச் சந்திக்கச் சென்றால், அன்புப் பெருக்கெடுத்து கட்டித்தழுவுவார்கள் சில தருணம் அவரது நெற்றியில் முத்தமிடுவார்கள்.

- உற்ற உறவினர் திருத்தோழர்கள் எவரையும் பயண மனுப்ப நேர்ந்தால் அனுப்பும் தருவாயில் உடன் பிறப்பே! உமது உயரிய துஆவில் எங்களையும் நினைத்துக் கொள்ளும் மறந்து விடாதீர் என அன்பு வார்த்தையால் இன்பம் பெருக கூறுவர்.

- பந்தம் நிறைந்த பந்துக்கள், சொந்தம் சொரியும் திருத் தோழர்கள், இவர்களில் எவரையாவது மகிழ்ச்சி மலர்ந்த தருணங்களில் அழைப்பதாயின், ஹஜரத் அபூஹுரைராவை, ஏ! அபாஹுர் எனவும் அன்னை ஆயிஷாஸித்தீகாவை ஏ! ஆயிஷ், என்றெல்லாம் செல்லமாக சொல்லி அழைப் பார்கள்.

- பச்சிளங்குழவுகளுடன் பாசத்துடன் பழகுவர்.
- பிள்ளைகளின் தலைகளை பிரியமுடன் தடவிக்கொடுப்பர்.
- அவர்களின் எதிர்கால நல்வாழ்வுக்கு பரிவுடன் பிராத் தனை புரிவர்.
- பிறந்த குழந்தையைப் பேரன்புடன் மடியில் ஏந்தி அவர் களை விளையாட்டுக்காட்ட வேடிக்கையான வார்த்தைகள் கூறி மகிழ்விப்பர்.
- இளங்குழவு ஒன்றை இனிமையோடு கையிலேந்தி அதனை முத்தமிட்டுச் சொன்னார்கள். இக்குழந்தைகள் யாவும் இறைவனது பூங்காவின் (சொர்க்க பூங்காவின்) மணம் வீசும் மனங்கவர் மலர்களில் பட்டவைகளாகும் என.
- குழந்தைகளுக்கு நல்ல சிறப்பான பெயர்கள் தேர்வு செய்து அழகுடன் சூட்டுவார்கள்.
- குழந்தைகளுடன் அளவளாவ எந்த அளவு நடந்து மகிழ்விப்பார்களென்றால், தங்களுக்கு முன்னில் குழந்தை குழாமை நேர் வரிசையாக நிற்க செய்து சொல்வார்கள், "என்னை எந்தக்குழந்தை முன்னதாக ஓடி வந்து தொடு கின்றதோ அதற்கு சிறந்த வெகுமதி தருகிறேன்" என்று, அவ்வமயம் சில குழந்தைகள் ஓடிவந்து அண்ணலவர் களின் மார்பில் விழும். சில குழந்தைகள் வயிற்றில்





பொருளடக்கம்

விழும். அத்தனையும் ரசித்து ஆர்வத்துடன் விளையாட்டுக் காட்டுவர், வெகுமதியும் தருவர்.

இளஞ்சிறார்களுடன் நகைச்சுவையுடன் பேசுவர். ஆனால் நகைச்சுவையை மிகைப்படுத்தாது அளவுடன் பேசி அன்புடன் சிரிக்க வைப்பர்.

ஹஜ்ரத் அனஸ் அவர்களும் அவர்கள் சகோதரர் அபூஉமைர் அவர்களும் சிறுவயதுடையவர்கள் அனஸ் அவர் களைக்கண்டால் "ஏ! இரண்டு காதுகளுடைய அனஸே" என ஹாஸ்யம் கலந்து கூப்பிடுவர். ஒருதருணம் அபூ உமைர் பூஞ்சிட்டு குருவி ஒன்றைப்பிடித்து விளையாடிக் கொண்டிருந் தார், சில நாட்களில் அக்குருவி இறந்து விட்டது. இறந்து விட்டதைக்கண்ட அபூ உமைர் கவலை முகத்தோடு வாட்ட முற்று உட்கார்ந்திருந்ததால் அவ்வமயம் அவர் அருகில் அண்ணலர்கள் செல்கின்றார்கள். சோகம் தோய்ந்த முகத் தோடு அமர்ந்திருக்கும் அபூ உமைரைக் கண்ணோக்கி அபூ உமைரே! உமது குருவிக்குஞ்சு என்னாச்சு? என ஹாஷ்யம் ததும்ப கேட்டு சிரிக்க வைத்தனர்.

- அப்துல்லாஹ்ஹிப்னுபஷீர் ஒரு சிறு வயதுப்பையன் ஒரு நாள் அவரிடம் அவரது தாயார் சிறிதளவு திராட்சை பழங்களைக் கொடுத்து இதனை அண்ணல் நபியவர் களிடம் அன்பளிப்பாக கொடுத்துவாரும் என அனுப்பி வைத்தார். பாவம் அப்துல்லாஹுவுக்கு அப்பழத்தின் மீது ஆசை பிறந்து விட்டது. செல்லும் வழியிலேயே தின்று தீர்த்துக் கட்டிவிட்டார். சில தினங்களின் பின்னர் விசயம் வெளியாகிவிட்டது.

  அப்துல்லாஹ் அண்ணலவர்கள் முன்னில் செல்கின்றார் அப்துல்லாஹுவை அண்ணலவர்கள் அழைத்து பக்கத் தில் நிறுத்தி அப்துல்லாஹ்வின் காதைப் பிடித்துக் கொண்டு செல்லமாக கேட்கின்றார்கள்.

  "ஏ! ஏமாற்றும் பையனே! என்னை ஏமாற்றி விட்டாயல் லவா!" ஏமாற்றும் பையனே! எனக் கூறி வேடிக்கையாக சிரிக்க வைத்தனர்.

- பயணத்திலிருந்து ஊர்வந்து நுழையும் போது எந்தப் பிள்ளை எதிர்பட்டாலும் அதனைத் தூக்கி வாகனத்தில் ஏற்றிக்கொள்வர். பெரிய பையனாக இருந்தால் பின்னால் அமர்த்திக் கொள்வர். சிறு பிள்ளையாக இருந்தால் முன்னால் இறுத்திக்கொள்வர்.

- பருவ காலங்களில் புத்தம் புதிய பழங்கள் வரும் தருணம் இளங்குழவுகளை அழைத்து நிறுத்திக் கொண்டு நல்விருத்திக்கு **துஆ** செய்துவிட்டு ஒவ்வொரு பிள்ளையாக அழைத்து ஊட்டி விட்டுச் சொல்வார்கள்.

  இன்றைய சமுதாயச் சிறுவர்கள் நாளைய சமுதாயப் பெரியவர்கள்.

  துளிர்விட்டு முளைத்துவரும் இத்தூய இனத்தவர் நாளைய இஸ்லாமிய இயக்கத்தை கட்டிக்காக்க கொடிபிடித்துச் செல்லும் மாவீரர்கள் என்ற கருத்தினை இதன் மூலம் விளக்கிக் காட்டுவர்.

- முதியோர்களைக் கண்டால் முழுக்கவும் மரியாதைபடுத்தி கௌரவிப்பர். திரு மக்காவை வெற்றி கொண்ட தருணம் அது திருத்தோழர் சித்தீக் அவர்கள் தங்கள் முதுமை நிறைந்த தந்தையை முற்றிலும் பார்வை இழந்த அப்பெரியாரை இஸ்லாத்தை ஏற்க வைக்க அண்ணல் நபியவர்களிடம் அழைத்து வந்தனர். அவ் வமயம் அண்ணலவர்கள் ஹஜ்ரத் சித்தீக் அவர்களைப் பார்த்து, ஹஜ்ரத் சித்தீக் அவர்களே! இம்முதியோருக்கு முழுச்சிரமத்தை கொடுத்து அழைத்து வந்துவிட்டீர்களே! என்னை அழைத்திருந்தால் நானே அவர்களிடம் சென்றிருப்பேனே! என கூறி தங்கள் பச்சாதாபத்தை தெரிவித்தனர்.

## மனிதாபிமானத்தின் இறுதிக்கட்டம்

இன்று மனிதன் மனிதாபிமானத்தை தேடித் தேடித்திரிகின்றான். எங்கு நோக்கினும் அது முற்றிலும் அழிந்து புதை குழியை புகலிடமாக்கிக் கொண்டிருப்பதையே காண்கின்றான்.

ஆனால் அந்த உத்தம மனிதாபிமானம் எங்கு புத்துயிர் பெற்று வளர்ந்தோங்கியது என்பதைப் பாருங்கள். அதன் இறுதிக்கட்ட இடத்தையும் பாருங்கள்.

மதீனா நகரில் சிறிது புத்திக்கோளாறான பெண் ஒருத்தி இருந்தாள். அவள் ஒரு நாள் அண்ணலவர்களிடம் வந்து நான் தங்களிடம் ஒரு விசயம் கூற வேண்டும் அதனைத் தாங்கள் செய்து முடிக்க வேண்டும் என கேட்டுக்கொண்டாள்.

அதற்கு அண்ணலவர்கள் சரி செய்து முடிக்கிறேன். நீ அந்த தெருவில் நின்று என்னை எதிர்பார்த்துக் கொண்டிரும். நான் இதோ வந்து விடுகின்றேன் என கூறி அனுப்பி விட்டார்கள்.

அண்ணலவர்கள் சொன்னபடி அவள் அந்த தெருவில் நின்று எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள் திரு நபியவர்கள் கூறிய படி சொன்னவார்த்தையை நிறைவேற்றச் சென்றார்கள்.

அவள் கூறிய விசயத்தைக் கேட்டு அவள் முடித்து வைக்க கூறிய வேலையை செய்து முடித்தும் வந்தார்கள். இதே போன்று மற்றொரு தருணம் அண்ணலவர்கள் ஒரு புத்தி சுவாதீனமற்ற மனிதருக்கு அவர் கூறிய வேலையைச் செய்து முடித்ததை **அதிய்யுப்னுஹாதிம்** என்பவர் கண்டார்.

இச்சம்பவமே அண்ணலவர்கள் உண்மை நபி என்பதற்கு ஒரு சின்னமாக இருந்தது. தான் இஸ்லாத்தை ஏற்பதற்கும் ஒரு காரணமுமாக இருந்ததென அவர் கூறினார்.

■ மாநபியவர்கள் மக்களுடன் நற்குணத்தோடு பரஸ்பரமாக எந்தஅளவு அளவளாவிப் பழகினார்கள் என்பதை ஹஜ்ரத் அனஸ் அவர்கள் வாயிலாக கேளுங்கள்.

நான் பத்து ஆண்டு காலமாக பெருமானார்(ஸல்) அவர்களுக்கு நற்றொண்டு செய்தேன். அந்த பத்து ஆண்டு களில் ஒரு தடவையாவது அண்ணலவர்கள் என்னை 'சீ' என கூறியது கிடையாது இந்த வேலையை நீர் ஏன் இவ்வாறு செய்தாய் ஏன்* இதனை இவ்வாறு செய்யவில்லை, நான் கூறாத காரியத்தை நீர் ஏன் செய்து முடித்தாய், என ஒரு போதும் என்னை நோக்கி அவர்கள் கடிந்து கூறியது கிடையாது. இதைப்போன்றே மற்ற பணியாளர்கள், பணிப்பெண் களிடத்தும் திரு நபியவர்கள் நடந்தார்கள். ஒரு தருணமாவது அவர்களை தங்கள் கரங்கொண்டு அடித்தது மில்லை.

இச்சம்பவங்களை மெய்ப்படுத்த அன்னை ஆயிஷா அவர்கள் கூறுவதைக் கேளுங்கள்:

இஸ்லாமியப் புனிதப் போருக்குச் செல்தல், சன்மார்க்க சட்ட திட்டங்களுக்கு உட்படுத்தி அதனைக் காக்க தண்டனை வழங்கல், இவைகள் நீங்கலாக திருநபியவர்கள் குடும்பத்தில் பட்ட எங்களை (துணைவியர்களை) பணியாட்கள், பணிப்பெண் கள், மற்றும் எவரையும் எம்பெருமானார்கள் தங்கள் கரம் கொண்டு அடித்ததே இல்லை.

## உள்ளும், புறமும்

இன்று நம்மில் தங்களை பெரிய மனிதர் எனச் சொல்லிக் கொள்பவர்கள், காட்டிக் கொள்பவர்கள் அவர்களின் வெளி

* நூல்: — அல்மவாஹிபுண்லதுன்னியா





பொருளடக்கம்

வாழ்வுக்கும் உள்நடப்பிற்கும் ஒப்பிட்டுப்பார்த்தால் ஒன்றுக்கொன்று முழுக்க முறணப்பட்டதாகவே தெரியும்.

தன்னை வெளியில் காட்ட அதற்கென தனியதோர் நடிப்பும் வெளிவேஷமுமாக காண்பித்துக் கொள்வர். உள்ளில் உற்றுப்பார்த்தால் கொள்ளை கொள்ளை குணக்கேடுகளும் கோணலும் இழிவுச் செயல்களும் தாண்டவமாடிக் கொண்டிருக் கும்.

வெளி உலகில் பார்த்தால் எளிமையும் பணிவும் பக்தியும் பகட்டும் பரவசப்படுத்தும். வீட்டினுள் கண்ணோக் கினால் ஆடம்பரமும் உல்லாசமும் டாம்பீகமும் தலைவிரித்து தாண்டவமாடிக் கொண்டிருக்கும்.

வெளிவாழ்வில் எந்த அளவு அவர் பிரபலமாக தென்படுகின்றதோ அந்த அளவு ஏன்!அதற்கு மேலே ஒரு படி வீட்டினுள்கசபுசலும், கண்ணருவிக் கொடுமையும் கசிந்து வடிந்து கொண்டிருக்கும் அதே தருணத்தில், அண்ணல் நபியவர்களிடம் வாருங்கள் அவர்களின் வெளிவாழ்வு எவ்வாறு காட்சி தந்ததோ அவ்வாறே உள்வாழ்வும் அணுப்பிசகாது சரி நிகர் பெற்றதாகவே விளங்கும். அண்ணலவர்களின் அந்தரங்க வாழ்வு பற்றித் தெரிந்து கொள்ள ஒரு மனிதர் அன்னை ஆயிஷாவிடம் வந்து கேட்கின்றார்.

அன்னை அவர்களே!

திரு நபியவர்கள் தங்கள் இல்லத்தில் இருக்கும் போது என்ன செய்து கொண்டிருப்பார்? என்று,

ஸித்தீகா அவர்கள் பதில் கூறுகின்றனர். மாநபியவர்கள் மனிதஇனத்தில் பட்ட ஒரு மனிதர்தான். தங்கள் ஆடையினுள் உள்ள அழுக்கு அசுத்தம் முதலியவைகளை அவர்களே அகற்றி சரிபடுத்திக் கொள்வர். ஆட்டில் பாலை அவர்கள் கரத்தாலேயே கறந்து வைத்து விடுவர். கிழிந்த ஆடையை தாங்களே அதனைத் தைத்து ஒட்டுப்போட்டுக்கொள்வர். தங்கள் காலணியை தாங்களே செப்பனிட்டுக்கொள்வர். வாளியில் தண்ணீர் இரைத்து தாங்களாக கொண்டு வந்து விடுவர். சுமந்து கொண்டு வரும் பொருளை தாங்களே சுமந்து கொண்டு வந்து விடுவர். பிராணிகளுக்குரிய உணவு தீவனத்தை தங்கள் கைப்படவே கொண்டு வந்து போடுவர். பணியாளர் செய்யும் வேலையில் தாங்களும் சேர்ந்து பங்கெடுத்து ஒத்துழைப்பர். எடுத்துக்காட்டாக, கோதுமை மாவைத் திரிக்கும் போது பணியாளர்களோடு தாங்களும் சேர்ந்து பணி செய்வர். சில தருணம் தாங்களாகவே அச்சிரமத்தை மேற்கொண்டு செய்து முடிப்பர். கடைத்தெரு சென்று பொருள்கள் வாங்கு

தலை தாழ்வாகக் கருத மாட்டனர். தாங்களே சென்று சரக்கு சாமான்களை வாங்கி தேவைப்பட்டதை ஒரு பொட்டலமாக கட்டி சுமந்து கொண்டு வந்து விடுவர். தோழர் பெருமக்கள் அண்ணலவர்களைப்பற்றித் தெரிந்து கொள்ள இத்துடன் கேள்விகளை விட்டு வைத்தனர்களா? ஒரு தருணம் அன்னை ஆயிஷா அவர்களிடம் வந்து இவ்வாறு ஒர கேள்வியை போட்டனர். இறை தூதர் அவர்கள் இல்லத்தில் இருக்கும் தருணம் என்ன குணத்தோடு இருப்பர்? அன்னையவர்கள் பதில் தருகின்றார்கள். அனைத்து மனிதர்களைக் காண சாந்த சொரூபியாக மலர் முகத்தோடு என்றும் காட்சி தருவர். அவர்களில் சாந்தமே குடி கொண்டிருந்தமையால் எவரையும் கோபிக்க நாங்கள் கண்டதில்லை. தனது குடும்பத்தாரிடம் கருணை வடிவவாகத் திகழ்வதில் பெருமானார்களுக்கு மேலான ஒரு மனிதரை நாங்கள் கண்டதில்லை*

ஒரு தருணம் தந்தை ஹஜ்ரத் அலி(ரலி) அவர்களிடம் தனயர் ஹுஸைன்(ரலி) அவர்கள் கேட்கின்றனர். அருமைத் தந்தையவர்களே! அண்ணல் நபியவர்கள் தங்கள் இல்லத்தில் வந்தபோது எப்படி இருப்பார்கள் என்ன காரியம் செய்து கொண்டிருப்பார் என்று, தனையருக்கு தந்தை பதில் தருகின்றனர். திரு நபியவர்கள் தங்கள் வீட்டிற்கு வந்ததும் தங்கள் நேரத்தை மூன்று பிரிவாகப் பிரித்து விடுவர்.

முதல் பிரிவு இறைவணக்கத்திற்காக.

இரண்டாம் பிரிவு குடும்ப காரியங்களைக் கண்ணோக்க.

மூன்றாம் பிரிவு ஓய்வு எடுத்துக்கொள்ள.

இம்மூன்றில் ஏதாவது ஒரு பிரிவின் நேரத்தில் வெளியாட்கள், நண்பர்கள், பள்ளியில் அல்லாமல் தனிமையில் சந்தித்து பேச்சு வார்த்தை நடத்த வருபவர்கள், உறவினர்கள், உற்ற நேயர்கள், இவர்களுக்கு பேட்டி தந்து முக்கிய தேவைகளைப் பற்றி தெரிந்து ஆவன செய்வர்.

சொல்லப்போனால் ஓய்வெடுத்துக் கொள்வது மிகக் குறைந்தே இருக்கும்.** பெருமானார்கள் தங்கள் திருக்குடும்பத்தில் உள்ள பரிசுத்த மனைவிமார்களுக்கு உணவளித்தல், உடை கொடுத்தல், மற்றும் குடும்பச் செலவுகளின் தேவைகளை நிறைவேற்றல், இவர்கள் பொறுப்பிலேயே சார்ந்திருந்தன.

---

* நூல்: — முஸ்லிம்

** நூல்: — அல்மவாஹிபுல்லதுன்னீ
நூல்: — முஸ்லிம்
நூல்: — ஷமாயிலுத்திர்மிதீ





பொருளடக்கம்

மேலும் அவர்களுக்கு நல்லறிவு புகட்டி நலமான முன் மாதிரிக்குடும்பமாக திகழ வைத்து இவர்கள் மூலம் ஏனைய பெண்ணினத்தாரை சிறந்த சீர்திருத்தம் செய்யும் கடமையிலும் இவர்கள் முழுப்பங்கேற்று நடந்தனர்.

பட்டணத்துப்பாவையர்கள் முதற்கொண்டு குக்கிராமத்து குடிசை வாழ் அணங்குகள் வரை அண்ணலவர்கள் குடும்பத் தார்கள் துணைவியர்களிடம் வந்து தங்கள் பிரச்சனைகளுக் குரிய தெளிவான விளக்கங்கள் கேட்டு தெரிந்து செல்வர்.

அண்ணலவர்கள் தங்கள் அழகு குடும்பத்தை என்று நோக்கினும், ஒரு எளிய நிலையை மேற்கொண்டதாக, குடும்ப பாரத்தை ஒரு சுமையாகக் கொண்டு நடக்காது, வெறும் நடிப்பு வெளிவேஷம் பகட்டு எதுவும் தலைகாட்டாத ஒரு சாதாரண அமைதிக் குடும்பமாகவே திகழச் செய்தனர். அதே தருணத் தில் மாநபியவர்களும் ஒரு மனித இனத்தில் பட்டவர்களே மனித குடும்பத்தில் எழுந்து நிற்கும் சகல பிரச்சனைகள் போன்றதும் அங்கு நடமாடிக்கொண்டுதான் இருந்தன.

கவலைகள் அலை மோதி கண்கள் குளமாகும் நிலை யையும் தென்படும். மகிழ்ச்சிப் பெருக்கெடுத்து மலர்வதனங் களையும் காணலாம். அன்புப் பெருக்கால் ஆற்பரித்த அற்புத நிலையும் ஓடி வரும். தித்திப்புப்பும் காணலாம், திகைப்பும் காணலாம், போட்டியும் காணலாம், மோதலும் காணலாம், உல்லாசத்தையும் பார்க்கலாம், உபத்திரவத்தையும் சந்திக்கலாம், மனித குடும்பம் தானே! அது ஏனைய குடும்பங்கள் போன்று எல்லாமே அங்கு தலைதூக்கினாலும் குடும்பம் எனும் பூங்காவில் திரு நபிகள் அந்த குளிர் என்ற தென்றல் நனைந்து வீசியதும் அனைத்தும் குழுமை பெற்று செழுமை தோன்றி விடும்.

சில தருணங்களில் அங்கு கலகலப்பான உரையாடலும் நிகழ்ந்தது. கதை கூறிப் பொழுது போக்கும் நடந்தது. இதயத்தை மகிழ்விக்கும் இன்ப விளையாட்டும் ஊடே குறுக்கீடு செய்தது. ஒரு அற்புத நிகழ்ச்சியை பாருங்கள். அன்னை ஆயிஷா கூறுகின்றார். ''நான் ஒரு தருணம் கைமா கஞ்சி (இறைச்சியை சிறிதாக வெட்டி பொடி செய்து மாவுடன் கலந்து செய்யும் உணவு) தயார் செய்தேன். திருத்துணைவியர்களில் ஹஜ்ரத் ஸவ்தாவும் அத்தருணம் எனது இல்லம் வந்திருந் தனர். திருநபியிவர்கள் எனக்கும் ஸ்வ்தாவுக்கும் மத்தியில் அமர்ந்திருந்தனர். மகிழ்ச்சி பொங்கிய கலகலப்பான நேரம் அது. அத்தருணம் நான் ஸவ்தாவைக் கண்ணோக்கி கூறினேன். ஸவ்தாவே! இந்த உணவை நீர் உண்ண வேண்டும் என்று. ஸவ்தா உண்ண மறுத்து விட்டனர்.

மீண்டும் உண்ண வேண்டினேன். அப்பொழுதும் மறுத்து விட்டனர். அவசியம் நீர் உண்ண வேண்டும் என மும்முறை வற்புறுத்திக் கூறியும் மறுத்து விட்டனர். இறுதியாக கூறினேன் ஸவ்தாவே! நீர் உண்ணா விட்டால் அவசியம் இதனை எடுத்து உமது முகத்தில் பூசி விடுவேன் என்றேன். அதற்கும் ஸவ்தா அசைந்து கொடுக்கவே இல்லை. இறுதியாக அந்த கைமா கஞ்சியில் தனது கரத்தால் ஒரு சிறங்கை எடுத்து உண்மையாகவே ஸவ்தாவின் முகத்தில் பூசிவிட்டேன். இதனைக் கண்டதும் அண்ணலவர்கள் கலகலவென நகைத்து விட்டனர். பின்னர் அண்ணலவர்கள் ஸவ்தாவை நோக்கிக் கூறினார்கள். ஸவ்தாவே! நீயும் பதிலுக்குப்பதில் ஆயிஷாவின் முகத்தில் பூசிவிடும் எனக் கூறி என்னை நகரவிடாமல் பிடித்துக் கொண்டனர். உடனே ஸவ்தா கஞ்சியை கையில் எடுத்து எனது முகத்தில் பூசி முடித்தார். இதனைக் கண்டு அண்ணலவர்கள் மீண்டும் சிரிப்பு வெள்ளத்தில் மூழ்கினர்.

மனைவியர்களிடத்தில் குதூகலமாகத் திகழ்வதில் என்னே! ஒரு எடுத்துக்காட்டு பாருங்கள்!

ஒரு தருணம் அன்னை ஆயிஷா அவர்கள் அண்ணலவர்களிடத்தில் கடுமையாக எதிர்த்துப் பேசிக் கொண்டிருக்கின்றனர். திடீரென அன்னை ஆயிஷாவின் தந்தை சித்தீக்(ரலி), அவர்கள் வீட்டினுள் பிரவேசித்து விடுகின்றனர். அன்பு மகள் ஆயிஷா திரு நபியவர்களிடத்தில் சினங்கொண்டு பேசியதைக் கண்ட சித்தீக்(ரலி) அவர்கள் கோபமேலிட்டு மகளை அடிக்கப் பாய்கின்றனர்.

உத்தம நபியவர்கள் உடனே ஊடே விழுந்து விசயம் ஒன்றுமில்லை. நீங்கள் அடிக்க வேண்டாம் என தடுத்து நிறுத்தி விடுகின்றனர்.

கோபம் குடி கொண்ட அந்நிலையிலேயே சித்தீக் அவர்கள் வீட்டிலிருந்து வெளியேறி விடுகின்றனர்.

சென்ற சிறிது நேரத்தில் திரு நபியவர்கள் துணைவி ஆயிஷாவை நோக்கி,

“ஆயிஷாவே! உம்மை உமது தந்தை அடித்து விடாது எவ்வாறு காத்து விட்டேன் பார்த்தாயா?” என பரிவு நிறைந்த பக்குவ வார்த்தை கூறி மன மகிழ வைத்தனர்.*

அனைத்து மக்களுடைய குடும்பங்கள் போன்று மாநபியவர்களுடைய குடும்பம் விளங்கினாலும் இதற்கும்

---

* நூல்: — அல்மவா ஹிபுல்லதுன்னியா




பொருளடக்கம்

மற்றவைகளுக்குரிய பாகுபாடு யாதெனில், இங்கே பாபச் செயல் தலைகாட்டாத பண்பாடு.

பக்தியும் பரவசமும் நித்தம் செழித்தோங்கும் ஒரு முன் மாதிரி குடும்பம்.

இதனைக் கண்டு மற்ற குடும்பங்கள் சீர்பட வேண்டும், குதூகலமான தருணத்தை மகிழ்வுடன் கழிக்க வேண்டும், என்பதற்காக ஒவ்வொன்றும் எடுத்துக்காட்டாக திகழ்ந்துள்ளது. உள்ளத்தை கொள்ளை கொள்ளும் குதூகல நிகழ்ச்சிக்கு ஒன்றை பாருங்கள்!

ஒரு நாள் அன்னை ஆயிஷா அவர்கள் கதை கூறத் தொடங்கினார். தொடங்கும் தருணம் பதினோரு பெண்கள் அவர்களிடம் ஒன்றாக கூடி இருந்தனர். பேச்சுத் தொடக்கத்தில், இன்று நாம் நமது கணவன்மார்களுடைய கதையை கூடுதல் குறைவின்றி கூறிவிட்டு பின்னர் கதை கூறலாம் என முடிவு கட்டினர்.

எனது கணவர் ஒரு பருவதத்தின் உச்சத்தில் வைத்து விட்டு வந்த ஒரு ஒட்டகத்தின் சுவையற்ற இறைச்சித் துண்டம் போன்றவர். மலை உச்சத்தில் சென்று அதனை எடுக்க வழி எதுவும்மில்லை. அதன் சுவைக்காக எவரும் சென்று அதனை தடுப்பவருமில்லை அதாவது, அவர் ஒரு பயனற்ற மனிதர் என்பது பொருள்.

**இரண்டாமவர் சொன்னார்** எனது கணவருடைய கதை ஒரு தொடர்கதை அதனை சொல்லத் தொடங்கினால் எதுவும் இடையில் விட்டுப் போகுமோ என்ற அச்சம் தோன்றுகிறது. உள்ளில் உள்ளவைகளையும் வெளியில் உள்ளவைகளையும் எதனையும் நான் எடுத்துக் கூற விரும்பவில்லை. அதாவது அவர் நிறைந்த குறைபாடு உடையவர். அதனை எடுத்துக்கூற ஆரம்பித்தால் அதற்கு முடிவு வராது.

**மூன்றாமவர் பகர்ந்தார்** எனது கணவர் ஒரு நெட்டையான பேர்வழி மிக்க கடுமையான பேர்வழி! பேசினால் விவாகரத்து வந்தாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை. பேசாமலிருந்தால் நான் மனைவி என்றும் கூற முடியாது, மனைவி இல்லை என்றும் கூறமுடியாது. இவ்விரண்டிற்கும் இடையில் பட்ட நிலைதான் எனது நிலை. அதாவது ஒரு கூரிய வாளின் கீழ் இருப்பதைப் போன்றுதான் என்றார்.

**நான்காமவர்** எனது கணவனார் "ஹிஜாஸ்" நாட்டு இரவின் தட்ப வெட்ட நிலை போன்றவர். அதன் இரவில் அதிக உஷ்ணமுமில்லை, அதிக குளிருமில்லை. இதனைப் போன்று அவரைப்பற்றி அச்சமுமில்லை, அறுவருப்புமில்லை. அதாவது





பொருளடக்கம்

அமைதி நிலவும் அன்பு குணம் படைத்தவர். அவருடைய குணத்தில் ஏற்றமுமில்லை சீற்றமுமில்லை.

**ஐந்தாமவர்** எனது கணவர் வீட்டினுள் நுழையும் போது சிறுத்தைப்புலி, வீட்டுக்கு வெளியில் வேங்கைப்புலி. சொன்ன வாக்கு பற்றி பின்னர் கேட்கவே வேண்டியதில்லை.

**ஆறாமவர்** எனது கணவர் என்னுடன் உணவுண்டால் அத்தனையும் அபேஷ். குடித்தால் முழுவதும் குளோஸ். இரவு நித்திரையின் போது உடலின் போர்த்தும் போர்வை முழுக்க அவரை சுற்றிக் கொள்ளும். என்னைப் பற்றி நான் எப்படி இருக்கின்றேன் என வெளியில் கரத்தை நீட்டிக் கூட என்னைத் தீண்டிப்பார்க்க மாட்டார். அதாவது எனது சுக வாழ்வில் அக்கறை கொள்ள மாட்டார் என்பது தான்.

**ஏழாமவர்** எனது கணவர் பெரிய மடையர் மனிதாபிமான மற்றவர். சிலதருணம் எனது மண்டை உடையும். சில தருணம் பெட்டி சட்டிகள் துாள் துாளாகும் அதாவது கடின கோபக்காரர்.

**எட்டாமவர்** எனது கணவர் தொட்டால் முயல் முடி போன்ற மிருதுவானவர். நுகர்ந்தால் மனங்கவரும் வாசனை போன்ற வர். அதாவது, எனது நட்புறவில் பாச நேசம் கொண்டவர்.

**ஒன்பதாமவர்** எனது கணவர் விசாலமான மாளிகை கொண்ட பெரும் செல்வந்தர். அவரது வாளின் உறை நீண்டது (மிக்க உயரமானவர் என்பது பொருள்) வீட்டின் அடுப்பில் சாம்பல் குவியல் குவியலாக கிடக்கும்.(அன்னதானத்தில் சிறந்த வள்ளல்) என்பது பொருள்.

**பத்தாமவர்** எனது கணவர் பெரிய அரசர் போன்றவர். அரசன் என்ன அதற்கும் மேலானவர். அவருடைய ஒட்டகங்கள் மந்தை மந்தையாக வெளியில் மேச்சலுக்கு செல்லாமல் வீட்டிலேயே அடைந்து கிடக்கும். விருந்தினர்கள் ஏறிவரும் வாகனங்களின் மணியோசைகள் இவ்வொட்டாகங்களின் காதுகளில பட்டுவிட்டால் இன்று நமக்கு மரண முடிவு வந்து விட்டது. விருந்தினருக்கு விருந்தளிக்க நாம் கொலைக்களம் செல்ல இருக்கிறோம் என அவைகள் மனதில் பட்டு விடும். சிறந்த விருந்தோம்பி என்பது பொருள்.

**பதினொன்றாமவர்** எனது கதைமிக்க நீண்ட கதை, எனது கணவர் பெயர் "அபூஜரஉ", அபூஜரஉ எப்படிப்பட்டவர் தெரியுமா? தங்கத்தால் எனது காதுகளை நிறப்பி விட்டவர். உன்னத உணவளித்து எனது உடலைக் கொழுக்க வைத்தவர். மன மகிழ்ச்சியால் என்னை மகிழ்வித்தவர். ஆட்டுக்கிடைகள் நிறைந்த வீட்டில் பிறந்து வளர்ந்த என்னை

ஒட்டகங்களும் குதிரைகளும் பணியாட்களும் பண்ணை ஆட்களும் நிறைந்த பெரிய விவசாயி வீட்டில் கொண்டு வந்து வைத்து விட்டார் எனது கணவர். எனது பேச்சில் குறைகள் எதையும் காணமாட்டார். நான் நித்திரை செய்தால் எனக்கு தொல்லை எதுவும் கொடுக்காமல் சுபுஹுவரை தூங்க விட்டு விடுவார். நான் விரும்பிய உணவு, குடிப்பை உட்கொள்ள தடை எதுவுமில்லை. உம்முஅபீஜர்உ, அபூஜரஉவின் தாயார் (தனது மாமியார்) விசாலமான வீடும் ஏராளமான துணிமணிகளும் வைத்துள்ள சீமாட்டி. எனது மாமியாரும் எனது கணவர் அபூஜர்உவின் பிள்ளைகளும் பொன்னான கண்மணிகள். தகப்பனார் சொல்லை சிறிதும் தட்டாது கீழ்படிந்து நடக்கும் பிள்ளைகள். அபூஜரஉ, வீட்டுப் பணிப் பெண் பாவையர் இனத்தில் மிக்கப்பண்பு நிறைந்தவள் வீட்டுப் பேச்சை வெளியில் கூறமாட்டாள். வீடு வாசல்களை கூட்டிப்பெருக்கி எப்போதும் தூய்மையாக வைத்திருப்பாள். பதினோறு பேர்களின் கணவன்மார்களின் கதைகளைக் கனிவுடன் அமைதியாக பதுமை போன்று கேட்டுக் கொண் டிருந்த அருமை நபியவர்கள் அன்னை ஆயிஷாவைப் பார்த்துச் சொன்னார்கள்.

ஆயிஷாவே! உம்முஜரஉவுக்கு தனது கணவர் அபூஜரஉ எவ்வாறு மனம் ஒப்பிய குணம் படைத்த அன்புக் கணவராகப் பட்டாரோ அவ்வாறே நான் உமக்கு இதயம் நிறைந்த இன்பக் கணவராக இருக்கின்றேன்.

இவ்வாறு அளவளாவி அன்புப் பேச்சு வார்த்தைகள் நிகழ்ந்து முடியும் தருணம் தொழுகைக்காக பாங்கொலி காதில் படுகின்றது. பாங்கொலி பட்டதும் படீரென அத்தனையும் ஒதுக்கித் தள்ளி விட்டு அண்ணலவர்கள் பள்ளியை நோக்கிப் புறப்பட்டு விடுகின்றனர்.

அன்னை ஆயிஷா அவர்கள் அவ்வமயம் உள்ள நிலையை எடுத்துக் கூறும் போது சொல்கின்றார்கள். பாங்கொலி கேட்ட மாத்திரத்தில் அண்ணலவர்கள் எங்களை விட்டுப்பிரிந்தது எங்களுக்கும் அவர்களுக்கும் இதற்கு முன்னர் எவ்வித தொடர்பும் இல்லாது போன்று விளங்கியது என்று அதாவது அந்த அளவு உத்தம நபியவர்கள் உலகத்தொடர்பை சட்டென கத்தரித்தாற் போன்று துண்டித்து மறுமை வாழ்வே அருமைக்குரியதென காட்டினர்.*

அரபிய நாட்டில் "குராஃபா", என்ற ஒரு மனிதனை பற்றி அற்புதமான கதைகள் கூறப்படுவதுண்டு, ஒரு தருணம்

* நூல்: — ஸீரதே ஆயிஷா பக்கம் 43.





பொருளடக்கம்

திருநபியவர்கள் முன்னில் சில பெண்கள் ஒரு மனிதனுடைய அபூர்வச் செயல் பற்றிய கதை ஒன்றைக் கூறி பேசிக் கொண்டிருந்தனர். அதில் ஒரு பெண் இந்தக் கதை அந்த "குராஃபா" என்ற மனிதனுடைய கதை போன்றல்லவா இருக்கின்றது எனக் கூறினார். அவ்வமயம் அப்பெண்களிடத்தில் அண்ணலவர்கள், "அந்த குராஃபா மனிதன் பற்றிய கதையை நீங்கள் அறிவீர்களா? அவனைப்பற்றிய உண்மையான தகவலாகிறது. அவன் பனூஅத்ரா கூட்டத்தில் உள்ளவன் அவனை ஜின் இனத்தில் பட்ட ஒரு ஜின் தூக்கிச் சென்று விட்டது. சில நாட்கள் சென்று அவனை அது அவனது இருப்பிடம் கொண்டு வந்து சேர்த்து விட்டது" எனக் கூறினார்கள்.

## இரவு வணக்கம்

திருநபியவர்கள் பெருவாழ்வில் வாழ்நாட்கள் முழுவதும் பின் இரவு வணக்கம் "தஹஜ்ஜுத்" தொழுகையை என்றும் கைவிட்டதில்லை.

அண்ணலவர்கள் பின் இரவில் எழுந்து மிஸ்வாக் பல்துலக்கி ஒலூ செய்வார்கள். பின்னர் "தஹஜ்ஜுத்" தொழுகையை தொழுவார்கள். தொழும் தருணம் திருக்குர்ஆன் திரு வசனங்களை நிறுத்தி அவசரப்படாது ஓதுவார்கள் சிலதருணம் நின்ற நிலையில் நெடு நேரம் திருகுர் ஆன் வசனங்களை ஓதுவதால் திருப்பாதங்கள் இரண்டும் சுரந்து விடும்.

இதனைக் கண்ட திருத்தோழர்கள் திரு நபியவர்களே! "இறைவன் தனது திருக்கருணையால் தங்கள் முந்திய பாவங்கள் பிந்திய பாவங்கள் அனைத்தும் பொறுத்தருளி விட்டதாக". திரு மறையில் கூறுகின்றானே! "அவ்வாறிருந்தும் தாங்கள் ஏன் இவ்வாறு பாதங்கள் பருத்து வீங்குமளவு நின்று தொழ வேண்டும்" எனக் கேட்டனர். அதற்கு அண்ணலவர்கள் "நான் அல்லாஹுவுக்கு நன்றி செலுத்தும் அடியானாக இருக்க வேண்டாமா?" என பதில் தந்தார்கள்.

## இல்லம்

வழிப்போக்கன் தனது பயணத்தின் போது ஒரு நிழல் தரும் மரம் தென்பட்டதும் தனது களைப்பைப் போக்க அம் மரத்தின் கீழ் சிறிது நேரம் சயனித்து ஓய்வெடுத்துச் செல்லலாம் எனக்கருதி அங்கே சற்று நேரம் படுத்து தூங்குகின்றான். களைப்பு தீர்ந்து புத்துணர்வு பெற்றதும் மீண்டும் தனது

---

• நூல்: — ஷமாயிலுத்திர்மிதீ

பயணத்தை தொடங்குகின்றான், அது போன்று தான் நான் மேற்கொள்வேன் என அண்ணலவர் அருளியது போன்று.* திரு நபியவர்களின் இல்லம் அதன் தட்டு முட்டு சாமான்களின் தேவையின் கண்ணோட்டம் ஒரு பயணிக்கு தேவைப்படும் அளவே இருந்தது. மனிதனுடைய வாழ்வின் இறுதிக்கட்டம் மறுமையின் பக்கம் முடிவதாகும். உலக வாழ்க்கை அவனுக்கு ஒரு இடைப்பட்ட தற்காலிக வாழ்க்கை. அதற்காக அளவு கடந்த பிரயத்தனம் கொண்டு பெரு முயல்வை மேற்கொள்ள கூடாது. தனது கடமையை மேற்கொள்ளும் ஒரு சோதனைக் கூடமாக கருத வேண்டுமே தவிர மாறாக இந்த அற்ப வாழ்வினையே குறிக்கோளாக்கி இதில் பெருங்கொண்ட திட்டங் களைப் போட்டு பலம் வாய்ந்த மாடமாளிகைகளை உருவெ டுக்க நினைக்கவோ, அதற்குரிய ஆக்க பூர்வ வேலைகளை செய்யவோ, கூடாது என்பதே அண்ணலர்களின் முன்மாதிரி யான எடுத்துக்காட்டாகும்.

எனவே இத்திட்டத்தின் அடிப்படையில் திரு நபியவர்கள் தங்கள் உலக வாழ்வினை அமைத்துக் கொண்டதால் தங்கள் இல்லத்தை அழகு சாதனங்கள் ஆடம்பரப் பொருள்கள் நிறைந்து விளங்கும் கவர்ச்சிக் கட்டிடமாக ஆக்கி அதனை வலிமைமிக்கதாக ஆக்கிவிட என்றும் ஆவற்பட்டதில்லை.

திரு நபியவர்கள் எப்படியோ அப்படியே திருத்தோழர்களும் திகழ்ந்து விளங்கினர்.

அன்று திரு நபயிவர்களின் திரு இல்லம் எவ்வாறு அமைந்திருந்தது என்பதைப் பாருங்கள்.

வழிப்பயணிகள் தங்கும் ஒரு தற்காலிக இடம் போன்றது. கொடிய வெப்பம் கடுங்குளிர் இவைகளை விட்டும் தற்காத்துக் கொள்ளும் ஒரு பாதுகாப்பிடம்.

திடீரென ஆடுமாடுகள் உள்ளே பிரவேசித்து விடாம லிருப்பதைத் தடுக்க ஒரு மரத்தாலான தட்டிக்கதவு. வீட்டின் உள்ளே உள்ளவர்கள் வெளியில் தென்படாது. மறைவு செய்ய ஒரு (PRIVACY) திரை. திருத்துணைவியர்கள் தங்குவதற் கென பள்ளியை ஒட்டிய சிறு சிறு அறைகள். அனைத்திலும் சுகாதாரத்தையும் தூய்மையையும் முக்கிய கவனம் செலுத்தப் பட்டவைகளாக திகழும்.

சுகாதாரத்தைப் பேணுவதில் திரு நபியவர்கள் திருத்தோழர் களைக் கண்ணோக்கி அடிக்கடி இவ்வாறு கூறுவார்கள்.

---

* நூல்: — ஜாதுல் மஆத்

உங்கள் இல்லங்களையும் அதன் முற்றங்களையும் எப்பொழுதும் கூட்டிப்பெருக்கித் தூய்மையுடன் வைத்துக்கொள் ளுங்கள் என்று.

## தட்டுமுட்டுச் சாமான்கள்

வீட்டுப்புழக்க தட்டுமுட்டு சாமான்கள் மிக எளிமை வாய்ந்தவை. சுற்றிலும் இரும்பால்பட்டம் ஏற்றப்பட்ட மரத்தால் ஆன ஒரு தட்டு அந்த தட்டையே உணவுண்ணவும் தண்ணீர் குடிக்கவும் பயன்படுத்துவர். தினசரி வயிறார உணவுண்ண நிறைந்த உணவுப்பொருள்கள் அங்கு எங்கே இருந்தன. பெரும்பாலும் பற்றாக்குறைதான்.

ஈச்ச ஓலைகள் நிறப்பப்பட்ட தோலால் ஆன ஒரு மெத்தை விரிப்பு ஈச்ச நாரால் பின்னப்பட்ட ஒரு கச்சுக்கட்டில்.

இரட்டை மடிப்பாக ஆக்கப்பட்ட ஒரு ஜம்காளம். ஒரு தருணம் அந்த ஜம்காளத்தை நான்கு மடிப்பாக ஆக்கப்பட்டு விரிக்கப்பட்டிருந்தது. அதில் அண்ணலவர்கள் நித்திரையை மேற்கொண்டதில் அயர்ந்து தூங்கி விட்டனர். அதன் காரணத் தால் அவர்களுக்கு அன்றய ''தஹஜ்ஜுத்'' தொழுகை தவறி விட்டது. விபரம் தெரிந்ததும் கூறினார்கள். இனிமேல் இவ் வாறு மடித்து விரிக்க வேண்டாம் முன்புள்ளபடியே இரட்டையாக மடித்து விரித்தால் போதும் என கட்டளை பிறப்பித்து விட்டனர். தரையில் சாதாரணமாக ஈச்சம்பாயை விரித்து அதன் மீது படுத்து நித்திரை மேற்கொள்ளும் பழக்கமும் அவர்களுக்கு இருந்தது.

கச்சுக்கட்டிலில் ஒரு விரிப்பில்லாமலும் சில தருணம் படுத்து விடுவர். அவ்வமயம் அந்த கட்டில் கயிற்றின் வடுக்கள் அந்த திரு மேனியில் பதிந்து அப்படியே தென்படும். அதனை ஒரு தருணம் திருத்தோழர்கள் ஹஜ்ரத் உமர் ஹஜ்ரத் அப்துல்லாஹிப்னுமஸ்ஹூத் அவர்கள் கண்ணுற்று கண்ணீர் கலங்கி விட்டனர்.

ஒரு தருணம் ஹஜ்ரத் உமர் அவர்கள் கண்டகாட்சியை கண்முன் கொண்டு வாருங்கள். அதாவது, தங்கள் அன்புத் துணைவிமார்கள் ஒன்று கூடி அண்ணலவர்கள் முன்னில் பிரச்சனை ஒன்றை கிளப்பி வைத்தனர்.

அதாவது வாழ்க்கை வசதியில் அவர்களைச் செழிப்புறச் செய்ய வேண்டும். வேண்டிய சாதனப்பொருள்கள் தாராளமாகக் கிடைக்க வேண்டும் என்பதே அவர்கள் வேண்டுகோள்.

இச்சர்ச்சை பெருகியதும் அண்ணலவர்கள் தங்கள் நம்பிராட்டிகளுடன் வெறுப்புக் கொண்டு சில நாட்கள் அவர்களில் எவரிடமும் பேச்சு வார்த்தை வைக்காது ஒதுங்கியிருந்தனர்.

ஒரு நாள் திரு நபியவர்கள் தனிமையில் இருக்கும்போது விசயத்தை விளங்கிக் கொள்ள திருத்தோழர் ஹஜ்ரத் உமர் அவர்கள் அண்ணலவர்களிடம் செல்கின்றனர். ஈச்ச நாரால் பின்னப்பட்ட ஒரு கச்சுக்கட்டிலில் அண்ணலவர்கள் சாய்ந்து படுத்திருப்பதைப் பார்கின்றனர். வீட்டின் ஒரு மூலையில் ஒரு கைப்பிடி அளவு கோதுமை கொட்டிக்கிடக்கின்றது. மற்றொரு மூலையில் ஒரு தோல் துண்டம் தொங்கிக்கிடக்கின்றது. இதனைக் கண்டதும் ஹஜ்ரத் உமர் அவர்களின் கண்கள் குளமாகி விட்டன. கண்ணீர் வடிக்கும் உமரைக் கண்ணோக்கி திரு நபியவர்கள் கேட்கின்றனர். "உமரே ஏன் அழுகின்றீர்கள்?" உமரவர்கள், ரோம், ஈரான் போன்ற நாட்டின் பேரரசர்கள், கைஸர், கிஸ்ரா, சக்ரவர்த்திகளின் சுகபோக வாழ்வினையும் நினைத்து இரண்டிற்குமுள்ள ஏற்றத்தாழ்வைக் கண்முன் நிறுத்திக் கண்ணீர் சொரிகின்றேன், என்று கூறுகின்றனர்.

அதற்கு அண்ணலவர்கள், "கைஸர், கிஸ்ரா போன்றவர்கள் இந்த உலக சுகபோகத்தை கொண்டு செல்லட்டும் நமக்கு என்றும் அழியாத மறுமையின் நிரந்தர வாழ்வு கிடைப்பதை உமரே நீர் விரும்பவில்லையா என பதில் கூறினார்கள்."*

## உணவு

அண்ணலவர்களுக்குப் பிடித்த அருமையான உணவு இறைச்சி உணவாகும். ஆட்டின் முன் சப்பை இறைச்சி, கழுத்து கறி, முதுகு இறைச்சி விலா எலும்புடன் சேர்ந்த இறைச்சி, இவைகள் இன்பமாக ஏற்பர். ரொட்டித்துண்டங்களை இறைச்சியுடன் சேர்த்து தயாரிப்புச் செய்யப்படும் உணவை வெகுவாக நேசிப்பர். (நமது நாட்டில் இதற்கு திக்கடி, கொழுக்கட்டை என்று பல பெயர்கள் உள்ளன). இவ்வுணவு அரபிய மக்களிடத்தில் மிக்க இன்புகரமான உணவெனக் கொள்ளப்படுகிறது.

பெருமானார்களுக்குப் பிரியமான உணவில் முக்கிமானவை, தேன், காடி(வினாகரி)தண்ணீர், குமுட்டிபழம் (கக்கரி) வெள்ளரிக்காய், வெள்ளரிப்பழம், சுரைக்காய், கிச்சடி உண்டி. (பருப்பு வகையினை கோதுமையுடன் சேர்க்கப்பட்ட உணவு) வெண்ணை முதலியவை. பாலுடன் பேரித்தம்பழத்தை சேர்த்து

---

* நூல்: ... [illegible]





பொருளடக்கம்

தயாரிப்புச் செய்யப்படும் உணவு அண்ணலவர்களுக்கு அதிகப் பிரியமானது.

வெண்ணையுடன் சேர்த்து பேரீத்தம்பழத்தை சாப்பிடுவர். (சாலன்) குளம்பில் அடிமண்டி (ஷோர்பா) பிரியமாக நேசிப்பர். வெள்ளரிக்காயை உப்பிட்டும் வெள்ளரிப்பழத்தை இனிப்புடனும் சேர்த்து உண்பர்.

நோயாளிகளுக்கு பத்திய உணவாக ஹரீரா, பாயாசம் (கஞ்சி)யை கொடுக்க விருப்பப்படுவர்.

ஒரு தடவை பாதாம்பருப்பில் செய்யப்பட்ட உணவை தங்கள் திருச்சன்னதியில் சமர்ப்பிக்கப்பட்டது. இது செல்வந்தர்கள் அரசர்களின் உண்டியாகும் நான் இதனை உண்ணப்பிரியப்பட வில்லை என கூறி மறுத்து விட்டனர்.

வீட்டில் சோர்பா, குளம்பு தயாரிப்புச் செய்யப்பட்டால் அண்டை வீட்டாருக்கும் இதனைக் கொடுக்க வேண்டும். ஆதலின் கொஞ்சம் கூடுதலாக தயாரிப்புச் செய்யுங்கள். என தங்கள் இல்லத்தாருக்கு கட்டளையிடுவர்.

## குடிப்பு

சுவை நிறைந்த மதுரமான தண்ணீர் மிக்க விருப்பம். ஒரு நாள் இரண்டு நாட்கள் தொலைவான இடங்களிலிருந்தும் கூட இனிமையான தண்ணீரை தருவித்து ஆவலோடு குடிப்பர். பாலை தனித்தும் குடிப்பர். அல்லது அத்துடன் தண்ணீரைச் சேர்த்துப் பெருக்கியும் குடிப்பார்கள். குடிப்பில் தேன் கலந்த ஷர்பத் ஏகப்பட்ட பிரியம்.

தோல் துருத்தி அல்லது கல்லாலான பாத்திரம் இவைகளில் தண்ணீரை ஊற்றி அதனில் பேரீத்தப்பழத்தை இட்டு ஊற வைப்பார்கள். ஊற வைக்கப்பட்ட அந்நீரை தொடர்ந்து தேவைப்பட்ட நேரத்தில் குடித்துக் கொண்டிருப்பர்.

நாட்கள் பட்டு அது புளிப்பு ஏறி, போதை ஏற்படும் என அஞ்சும் தருணம் அதனை வெளியில் வீச செய்வர்.

## உண்ணும் முறை

ஒவ்வொருவரும் பிரிந்து தனிமையில் உணவுண்ணு வதைப் பிரியப்படமாட்டார். ஒன்றுகூடி உண்பதையே உயரியது எனக்கூறி அவ்வாறு செய்யவே கட்டளையிடுவர். மேஜை நாற்காலியில் அமர்ந்து உணவுண்ணுவதை தங்கள் எளிமை வாழ்வுக்கு ஏற்றதாகக் கருத மாட்டனர்.

உணவு உண்ணும் இடத்தில் தனித்தனிக் கோப்பைகளில் சிறிய தட்டுகளில் உணவுப்பொருள்களை வைத்து உண்பதையும்

பிடித்தமான செயலாக கருதமாட்டனர். தங்கம் வெள்ளிப்பாத்திரங்களை உபயோகிப்பதை ஹராம் விலக்கப்பட்ட செயலாக ஆக்கினர். கண்ணாடி, மண் முலாம்பூசிய செம்பு, மரம் இவைகளாலான பாத்திரங்களை புழக்கத்தில் கொண்டு வந்துள்ளனர்.

உணவுண்ணும் விரிப்பில் அமர்ந்து கரங்கள் கழுவியதும் காலணியை கழற்றி அமர்ந்து வலது கரத்தால் உணவுத் தட்டில் முன்னிலிருப்பதை சாப்பிடுவர். தட்டின் நடுவிலிருந்து சாப்பிடமாட்டார்கள். சாய்மானத்தில் சாய்ந்து கொண்டு சாப்பிடுவதை அருவருப்பாக கருதுவர். உணவு உண்ணும் போது இரண்டு கால்களையும் மண்டியிட்டு மடித்துப் போட்டு உண்பர். ஒவ்வொரு கவளத்தின் போது பிஸ்மில்லாஹி கூறிக் கொண்டே உண்பர். பிடித்தமற்ற உணவை அப்படியே விட்டு வைத்து விடுவர். அதில் குறைபாடு ஏதும் கூறமாட்டார். பதார்த்தம் உணவுப்பொருள்கள் அதிக சூடான நிலையில் அதனை உண்ண ஆவல் படமாட்டார். சமைத்த இறைச்சித் துண்டங்களை சிலதருணம் கத்தியால் அறுத்தும் சாப்பிடுவர். ஆனால் சிரமத்தை மேற்கொள்ளும் இச்செயல் விரும்பத்தகாதது என்றே ஒதுக்கி விடுவர். சதாதருணமும் உணவுண்ணும் பொழுது உணவுப்பொருளை கை முழுக்கவும் ஆக்காமல் மூன்று விரல் கொண்டே எடுத்துண்பர்.

பழங்கள் கனிகளை சில தருணம் நடந்து கொண்டும் உட்கொண்டுள்ளனர். இரண்டு பழங்களை ஒன்று சேர்த்து உட்கொள்வர். உதாரணமாக வெள்ளரிப்பழம் ஈத்தம்பழம் இரண்டையும் ஒன்று சேர்த்தும் உண்பர்.

பேரீத்தப்பழக் கொட்டையை இடது கரத்தால் எடுத்து வெளியில் போடுவர். விருந்தழைப்பை அவசியம் ஏற்றுக் கொள்வர். விருந்துண்ணச்செல்லும் பொழுது தங்களுடன் தற்செய லாக வேறு ஒருவர் உரையாடிக் கொண்டோ அல்லது வேறு காரணத்தாலோ சேர்ந்து வரும் நிலையை சந்தித்தால், அவரையும் தங்களுடன் அழைத்துக் கொண்டு, விருந்தோம்பல் செய்பவரின் அனுமதி பெற்று, அன்னாரையும் விருந்தில் கலக்கச் செய்வர்.

அண்ணலவர்கள் எவருக்காவது விருந்தளித்தால் விருந்து உண்பவரிடம், தோழரே! தயங்காது மகிழ்வுடன் திருப்திகரமாக உண்ணுங்கள் என அடிக்கடி வற்புறுத்திக் கூறுவர்.

பந்தியில் (கழரியில்) உணவுண்ணும் போது மற்றோரை அனுசரித்து அனைத்து நபர்களும் உண்டு முடிக்கும் வரை தாமதப்படுத்தி மனிதப்பண்போடு கடைசி நபர் முடித்து எழுந்திருக்கும் வரை அமர்ந்திருப்பபர். மற்றோர்களும் ஏகமாக முடித்து விட்டால் அவர்களுடன் அண்ணலவர்களும் சேர்ந்து முடித்து

விடுவர். உணவுண்டு முடித்ததும் அவசியம் கரத்தை கழுவி விடுவர். கரம் கழுவி முடித்ததும் இருகரங்கள் ஏந்தி இறைவனிடம் இந்த ஏற்றமான உணவை தந்தருளியதற்காக நன்றி செலுத்தும் வகையில் செயல்படுவர். தங்கள் உணவு விருத்திக்கும் விருந்தளித்தவரின் பெரு வாழ்வுக்கும் அருமை யாக துஆ செய்வர்.

உணவுப்பொருள் வெளியிலிருந்து எது வந்தாலும் தங்களோடு உள்ள அனைத்து நபர்களையும் அவ்வுணவில் பங்கு பெற அவசியம் வற்புறுத்திக் கலக்கச் செய்வர். கூட்டத்தி லிருந்து வெளியில் சென்றோருக்கும் அவரது பங்கை பக்குவ மாக எடுத்து வைத்து விடுவர்.

பழக்குவியலில் சேர்ந்து உண்ணும் போது ஒவ்வொன்றை யும் வரிசை முறையாக எடுத்து உண்ணும் பழக்கத்தை தோற்றுவித்தனர். தண்ணீர் முதலிய குடிப்புக்களை முடக்கு முடக்கு என்ற சப்தம் கேட்கும் அளவு மளமளவெனக் குடித்து விடமாட்டார். பொதுவாக மும்முறை கோப்பையை வாயிலிருந்து எடுத்து வெளியில் மூச்சு விட்டுக் குடிப்பர். ஒவ்வொரு முறையும் ''பிஸ்மில்லாஹ்'' கூறி முடிவில் ''அல்ஹம்துலில்லாஹ், வஷ்ஷுக்ருலில்லாஹ்'' ''புகழ் அனைத்தும் அல்லாஹுவுக்கே நன்றியும் அவனுக்கே'' எனக் கூறுவர்.

குடிப்புகள் குடிக்கும் போது பெரும்பாலும் அமர்ந்து கொண்டே குடிப்பர். அமர்ந்து குடிக்க வசதியற்ற சில தருணம் நின்றும் குடித்துள்ளனர். ஆனால் இவ்வாறு செய்தது மிகக்குறைந்த தருணங்களே நடந்துள்ளது.

குடிக்கும் பானங்கள் திருஅவைக்கு வந்த தருணம் குழுவில் உள்ள அனைத்து நபர்களும் பங்கு பெறச் செய்வர் அவ்வாறு அவையில் உள்ளோர்களுக்கு வழங்க தொடங்கும் போது தங்களுக்கு வலது பக்கத்திலுள்ளவரிலிருந்து ஆரம்பிப்பர்.

கொடுத்து முடிந்த வட்டத்திலிருந்தே அடுத்துள்ள வட்டத்தை தொடங்குவர். குடிப்பைக் கொடுக்க தொடங்கும்போது வயதில் முதியோர் வலப்பக்கமிருந்தால் அவர்களை கொண்டு ஆரம்பிப்பர். வலப்பக்கம் அவர்கள் இல்லாவிடில் வயதில் சிறியவர்கள் வலப்பக்கமிருந்தால் இவர்கள் அனுமதி பெற்றே அடுத்தபக்கம் உள்ள முதியோருக்கு கொடுக்கத் தொடங்குவர்.

குழுவில் உள்ள அனைத்து நபர்களும் குடித்த பின்னரே அண்ணலவர்கள் இறுதியில் குடிப்பர். பானங்களை பந்தியில் வழங்குபவர், இறுதியில்தான் குடிக்க வேண்டியவர் எனக் கூறுவர்.

உணவுக் குடிப்பு பொருள்களின் மீது வாயால் ஊதுதலையும் அதனை நுகர்ந்து பார்ப்பதையும் என்றும் விரும்பமாட்டனர்.

ஊண், குடிப்புப் பொருள்களை மூடி வைக்கக்கட்டளையிடுவர். தங்கள் முன்னில் சமர்ப்பிக்கப்பட்ட உணவு எதுவாயினும் இது என்ன உணவு என முதன் முதலில் விசாரணை செய்வர்.

தங்களுக்கு விஷ உணவு ஒரு யூதப்பெண் மூலம் கொடுக்கப்பட்ட பின்னர் அன்னியர் எவராயினும் தங்களுக்கு உணவுப்பொருளைச் சமர்ப்பித்தால், முதலில் அதிலிருந்து ஒரு அரைகவளம், கொண்டு வந்தவரை உண்ண வைத்த பின்னரே அதனைத் தாங்கள் உண்ணத் தொடங்குவர்.

மேற்கூறியவாறு நாசுக்காக, நாகரீகமாக உணவுண்ண ஆர்வம் கொண்ட இவர்கள், பெரும்பாலும் பசி பட்டினியாகவே தங்கள் வாழ்நாளைக் கடத்தியுள்ளனர்.

"அல்லாஹுவின் அடிமை போன்றே நான் உணவு உண்ணுகின்றேன் என்று கூறுவர்.

## இருக்கை, படுக்கை

உத்தம நபியவர்கள் உட்காரும் நிலைகள் பலதரப்பட்டவை. குத்தவைத்து உட்கார்ந்திருப்பர் சிலதருணம். சிலதருணம் இருப்பிடத்தை பூமியில் அமர்த்தி இரு துடைகளை வயிற்றுடன் சேர்த்து இருகைகளால் அதனைக் கட்டி உட்கார்ந்திருப்பர். சில தருணம் துணி முதலியவை கொண்டு அதனைக் கட்டியும் அமர்ந்திருப்பர்.

சாய்ந்து அமர்ந்தால் இடது கையை ஊன்றியவர்களாக அமர்ந்திருப்பர். ஆழ்ந்த சிந்தனையில் அமர்ந்திருக்கும் தருணம் கையிலுள்ள குச்சி தடியால் தரையினை வருடிக் கொண்டு அமர்ந்திருப்பர்.

தரையில் சாய்ந்து படுக்கும் போது வலது விலாப்புரமாக சாய்ந்து, வலது கரத்தை வலது பக்க வதனத்தில் வைத்து, தலையினை தாங்கியவர்களாக படுத்திருப்பர். மல்லார்ந்து படுக்கும் பழக்கமும் உண்டு, மல்லார்ந்து படுக்கும் அத்தருணம், ஒரு பாதத்தை மறுபாதத்தின் மேல் அமர்த்தி மறைக்க வேண்டிய பகுதியை ஒழுங்காக மறைத்துப்படுத்திருப்பர். முகம் குப்புறமாக ஒரு போதும் படுத்ததில்லை. அவ்வாறு படுப்பதை கண்டனப் படுத்தி விலக்கியும் உள்ளனர். ஒளி விளக்கில்லாத இருட்டு வீட்டில் தூங்குவதை பிரியப்படுவ்திதில்லை. மறைப்பில்லாத திறந்த வெளி மொட்டை மாடி முதலியவைகளில் தூங்குவதற்கு

உசிதப்படுவதில்லை. தூங்குவதற்கு முன்னர் உலூ செய்து கொள்வர். தூங்கச் செல்லும் போது பற்பல துஆக்களை ஓதுவர். மேலும் "சூரதுல் இக்லாஸ், சூரதுல் ஃபலக், சூரதுன்னாஸ்" இம்மூன்று சூராக்களை ஓதி உடலில் ஊதிக் கொண்டு உடல் முன் பாகங்களில் தடவிக் கொள்வர். தூக்கத்தின் போது மெல்லிய குரட்டைச் சத்தம் வெளிப்படும். இரவின் இடைக்கால நேரங்களில் எழுந்து மலஜலம் முதலிய இயற்கை தேவைகளை முடித்தால், உடனடியாக கைகால் முகங்களை கழுவி உலூ செய்து கொள்வார்கள். இரவு நேரப்படுக்கையின் போது உடுத்திக்கொள்ள அதற்கென தனித்த தோர் வேஷ்டியை வைத்திருப்பர். சட்டை முதலிய மேல் உடைகளை களைந்து தனிமையாக தொங்கவிட்டிருப்பர்.*

## இயற்கை தேவை(மல ஜலம், கழிவு)

திரு நபியவர்கள் காலத்தில இல்லங்களில் மலஜல கழிவறைகள் எதுவும் கிடையாது.

அதற்காக அண்ணலவர்கள் காடு மேடுகள் பக்கம் ஏறத்தாழ இரண்டு மைல்தூரம் வரை சென்று மனிதர் பார்வைகளை விட்டு மறைந்து விடுவர். சிறுநீர் தெரித்து விடாத மிருதுவான தரை பார்த்து அமர்ந்து விடுவர். மலஜலம் கழிக்கும் இடத்தில் முதலாவதுஇடதுகாலை பின்னர் வலது காலை வைத்து தரையை நெருங்கிய பின்னரே மறைப்பு துணியை உடலைவிடடு ஒதுக்கி உட்காருவர். உட்காரும் போது கல்மண் போன்ற மேடுகளை மறைவாக ஆக்கி அதன் மறைவில்அமருவர்.

கழிப்பிடம் செல்லும் போது காலணி அணிந்து தலையை மறைத்து மூடியிருப்பர். கஃபாவின் திசையை முன்னோக்கி அல்லது பின்னோக்கி அத்தருணம் அமரமாட்டார்கள் மோதிரத் தில் அல்லாஹுரசூலுடைய பெயர் பொரிக்கப்பட்டிருப்பதால் அதனை கௌரவிக்க மோதிரத்தை தனியாக கழற்றி வைத்து மறைத்துக் கொள்வார்கள்.

தண்ணீர் முதலியவைகளைக் கொண்டு சுத்தம் செய்தலுக்கு இடது கரத்தையை பயன்படுத்துவர்.

மலஜலம் கழித்து வெளியேறும் பொது முதலாவது இடதுகாலை தூக்கி வைப்பர் பின்னர் வலதுகாலை குளிப்பின் போது அவசியம் மறைப்பு ஏற்பாடு செய்தே குளிப்பார்கள். தொட்டியில் குளிக்கும் போதும் அவசியம் மறைப்பு ஏற்பாடு இருக்கும். சில தருணம் மழை பெய்யும் போது வேஷ்டியை

---

* நூல்: ஷமாயிலுத்திர்மிதீ

உடுத்தி புதிய மழை உடலில் பட நனைந்து குளிப்பர். தும்மலின் பொது சப்தத்தை மெதுவாக்கி வாயினை, கை, அல்லது துணியால் மூடிக்கொள்வர்.*

## பயணம்

வெளியூர் பயணம் செய்ய அண்ணலவர்கள் திட்டமிட்டால் அதன் புறப்பாடுக்குரிய நாள் பெரும்பாலும் வியாழன் நாளையே விசேச நாளாகக் கருதுவார்கள். பயணத்தின் போது வாகனத்தை வேகமாக ஓட்டிச்செல்வர். இடையில் இரவுதங்கிய தருணம் அவ்விடத்திலிருந்து மீண்டும் பயணத்தை மேற்கொள்ளும் நேரம் சுபுஹ் காலை நேரத்தையே உசிதமாகக் கொள்வர்.

(CAMPLIFE) பயணவாழ்க்கையில் பலர் சேர்ந்து கூட்டுறவாக செய்யும் பணிகளில் அண்ணலவர்களும் முக்கிய பங்கினை மேற்கொள்வர். ஒரு சமயம் பலரும் பங்கு கொண்டு உணவு தயாரிக்கும் நிலை ஏற்பட்டது அத்தருணம் ஒவ்வொரு வரும் ஒவ்வொரு பணியை மேற்கொண்டனர். திருத்தோழர்கள் கூறினார்கள். தாங்கள் சிரமத்தை மேற்கொள்ள வேண்டாம் நாங்களே அனைத்து வேலைகளையும் செய்து முடித்து விடு கின்றோம் என்று, அதற்கு அண்ணலவர்கள் நான் தனக்கென தனிச்சிறப்பு ஒன்றை பிரித்து வைத்து காட்டிக்கொள்ள விரும்ப வில்லை என பதில் கூறினார்கள்.

## கவர்ச்சிகள்

மனித குலத்தவர் கவர்ச்சிக்கும் உணர்ச்சிக்கும் அடிமைப்பட்டவர் கள் மனித குலத்தில் உதித்த நமது மாநபியவர்களுக்கும் மற்ற மனிதர்கள் போன்று உணர்ச்சிகளும் கவர்ச்சிகளும் ஊடுருவிக் கொண்டுதான் இருந்தன.

மகிழ்ச்சிப்பெருக்கில் மலர்ச்சி அலைகளும் கவலைக் குமுறலில் சோகக்கணைகளும் முட்டி மோதித்தாக்கிக் கொண்டி ருந்தன. இன்று நாம் உலகப்பிரபல பிரமுகர்களில் அநேகரை கண்ணுறுகின்றோம். தங்கள் வீட்டுக்கு வெளியில் பொதுமக்கள் மத்தியில் நிகழும் இன்பதுன்பங்களில் முழுப்பங்கேற்று கவலை நேரத்தில் கண்கலங்கி காட்சி தருவர். மகிழ்ச்சித் தருணத்தில் மட்டற்ற மலர் முகத்தைக்காட்டி இன்புருவர். அதே சமயத்தில் அவரது வீட்டுக்கு உள்ளில் உற்றுப்பார்த்தால் அத்தனைக்கும் மாறுபட்ட வேடிக்கையாகவே தோற்றமளிக்கும்.

ஆனால் அண்ணலவர்கள் திருவாழ்க்கையை உள்ளும் புறமும் என்றும் ஒன்றாகவே திகழ்ந்து நிற்கும்.

---

* நூல்: ஷமாயிலுத் திர்மிதீ

பெருமானார்கள் தங்கள் அருமை துணைவியர்களுடன் எத்தகைய உள்ளன்புடன் நடந்து கொண்டனர் என்பதைப்பாருங் கள்.

அன்புத்துணைவியார் ஆயிஷா அவர்கள் தண்ணீர் முதலிய பானங்களை பருகும் போது அவர்கள் பருகிய கோப்பையில் எந்த இடத்தில் வாயை வைத்துக் குடித்தார்களோ அதே இடத்தில் அண்ணலவர்களும் வாய் வைத்துக் குடிப்பர்.

அன்னை சித்தீக்கா அவர்கள் வயதில் சிறுவராக இருந்தமையால் திரு நபியவர்கள் வீட்டில் இல்லாத தருணம் அன்னையவர்கள் தங்கள் தோழிப்பிள்ளைகளுடன் விளையாடிக் கொண்டிருப்பர். திருநபியவர்கள் வீட்டில் நுழைவதைக் கண் ணோக்கினால் தோழிப்பிள்ளைகள் எல்லாம் வெளியில் விருட் டென பறந்துவிடுவர். அவ்வமயம் அவர்களை அண்ணல் அவர்கள் கண்டறிந்துவிட்டால், அவர்களை ஒவ்வொருவராக அழைத்து வந்து விளையாட உட்கார வைப்பர்.

ஈதுப்பெருநாள் முதலிய விழா நாட்களில் அபீஸீனியர்கள் வீரவிளையாட்டு வேடிக்கை செய்வர். அதனைக்காண அன்னை சித்தீக்கா அவர்கள் ஆவற்படும்போது சித்தீக்கா அவர்களை வீட்டின் வாயிலில் நிறுத்தி திரு நபியவர்கள் அவர்கள் முன்னால் நின்று மறைத்துக்கொள்வர் அவ்வமயம் அன்னை அவர்கள் தங்கள் நாடியை திரு நபியவர்கள் தோள் மீது வைத்து வேடிக்கை பார்த்துக் கொண்டிருப்பர்.

வேடிக்கையின் இடைஇடையே என்ன ஆயிஷாவே உமது வயிறு நிறம்பி திருப்தி பெற்று விட்டதா எனக் கேட்பார். இல்லை என்று சொல்வார். மீண்டும் சிறிது நேரம் கழித்து கேட்பர். இல்லை என்று கூறுவர் இவ்வாறு அவர்கள் மன நிறைவு ஏற்படும் வரை இக்கேள்வி பதில் நடந்து கொண்டே இருக்கும்.

ஒரு தருணம் பெருமானார்(ஸல்) அவர்களும் திருத் துணைவியார் ஸஃபிய்யா அன்னை அவர்களும் பயணத்தை மேற்கொள்கின்றனர். ஒட்டகம் முன்னால் நிறுத்தப்பட்டுள்ளது. உயரமான அவ்வொட்டகையில் அன்னை ஸஃபிய்யா அவர் களால் ஏறமுடியவில்லை. உடனே அண்ணலவர்கள் தங்கள் காலை மடக்கிக் கொடுத்து தங்கள் முட்டுக்காலில் ஸஃபிய்யா அவர்களின் பாதத்தை வைத்து ஊன்றி ஏறக்கூறுகின்றார்கள் அன்னை ஸஃபிய்யா அவர்களும் அவ்வாறே ஊன்றி ஒட்டகத் தில் ஏறி விடுகின்றார்கள்.

மற்றும் ஒரு சமயம் இருவரும் ஒட்டகத்தில் பயணம் செல்கின்றனர். விரைவாக நடைபோட்டுச்சென்ற ஒட்டகம் திடீரென

அதன் கால் சறுகி தடுமாறிதரையில் சாய்ந்தது அண்ணல் நபி யவர்களும் அருமைத்துணைவியார் ஸஃபிய்யா அவர்களும் கீழே விழுந்து விட்டனர். அப்பயணத்தின்போது திருத்தோழர் அபூதல்ஹா அவர்களும் உடன் சென்றிருந்தனர். இருவரும் கீழே விழுந்ததைக் கண்ணுற்ற அவர்கள் அண்ணல் நபி யவர்களிடம் ஓடோடி வருகின்றனர்.

உடனே திரு நபியவர்கள் அபூதல்ஹாவைப் பார்த்து கூறினார்கள், அபூதல்ஹாவே! என்னை நீர் கவனிப்பதற்கு முன்னதாக ஸஃபிய்யாவைப் பாருங்கள் என்ன நிலையில் இருக்கின்றார்கள் என்று.

ஒரு சந்தர்ப்பம் அணங்குகளை ஏற்றிக்கொண்டு ஒட்டகப் பாகர் ஒட்டகங்களை விரைவாக ஓட்டிச் செல்கின்றார் அதனைக் கண்ட அண்ணலவர்கள், ஒட்டகக்காரரே! ஒட்டகத்தில் பயணிக்கும் அப்பெண்கள் கண்ணாடிகள், கண்ணாடிகள் உடைந்து போகாது ஓட்டிச்செல்வீராக! என நாசுக்காக எடுத்துரைத்து எச்சரித்தனர்.*

## பிள்ளைப்பாசம்

பெருமானார்(ஸல்) அவர்களுக்கு பிள்ளைப்பாசம் பெருக் கெடுத்து அலைமோதும்.

ஏந்தல் நபியவர்களுக்கு இப்றாஹீம் எனப்பெயர் கொண்ட ஒரு குழந்தை இருந்தது. அன்னை மாரியதுல் கிப்தியா வயிற்றில் பிறந்த இக்குழந்தையினை வளர்ப்புச்செய்ய திருமதீனா வுக்கு வெளிப்புறப் பகுதி ஒன்றில் கொல்லர் வேலை செய்து கொண்டிருந்த ஒரு திருத்தோழர் குடும்பத்தில் ஒப்படைக்கப் பட்டிருந்தது. பெற்ற பிள்ளையை கண்ணுற அண்ணலவர்கள் அடிக்கடி ஆவல்படுவர். அத்திருத்தோழர் கொல்லர் வீடு வெகு தூரத்தில் இருந்த தொலைவையும் பொருட்படுத்தாது கால் நடையாக செல்வர்.

கொல்லர் வீட்டில் எப்போதும் புகை மூட்டம் தானே அப்புகை மூட்ட குகை வீட்டில் அமர்ந்து பிள்ளையின் பேராவலால் குழந்தையை மடியில்தாங்கி வெகு நேரம் கொஞ்சிக்குலாவி வைத்திருந்து திரும்பத்தந்து விட்டு வருவது வழக்கம். தங்கள் அருமை மகளார் அன்பு ஃபாத்திமா அவர்கள் தங்களைச் சந்திக்க வருவது தெரிந்தால் உடனே எழுந்து வந்து வரவேற்புச்செய்வர். பிள்ளை ஃபாத்திமா அவர்கள் எதை கூறுகின்றார்களோ அதனை செவி மடுத்துக் கேட்டு செயல்பட முற்படுவர். பிள்ளை ஃபாத்திமா அவர்கள்

---

* நூல்: புகாரீ, முஸ்லிம்

இதயத்துண்டங்களான இமாம் ஹஸன் ஹுஸைன் இவர்கள் மீது ஏகப்பட்ட பிரியம். மடியிலேந்தி மகிழ்வுடன் கொஞ்சுவர்.

தங்கள் இரு தோள்களை இருவருக்கும் இடமாக்கி விடுவர். மேலும் அவர்களை தங்கள் முதுகில் ஏற்றி குதிரை வாகனமாக தங்களை ஆக்கி விளையாடச் செய்வர். தொழுகையின் நேரத்தில் கூட தோளில் ஏற்றி உட்கார வைத்துக் கொள்வர். **அக்ர உப்னு ஹாபிஸ்** என்ற திருத்தோழர் ஒருவர் திரு நபியவர்களைக் காண வந்தார். வந்த அந்நேரத்தில் பேரர் ஹஸனிடம் கொஞ்சிக் குலாவி முத்தமிட்டுக் கொண்டிருந்தனர். இதனைக் கண்ட **அக்ரஉ** அவர்கள், பெருமானார்களைக் கண்ணோக்கி புதுமை பூத்துக் கேட்கின்றார். "என்ன அண்ண லவர்களே! எனக்கு பத்துக்குழந்தை இருக்கின்றனர். அவர் களில் ஒருவரைக்கூட நான் இவ்வாறு கொஞ்சியதில்லையே! தாங்கள் இக்குழந்தை ஹஸனை முத்தமிட்டுக் கொஞ்சு கின்றீர்களே என்று அதற்கு பெருமானார்கள் பதில் கூறினார்கள்.

"கருணை இல்லார்க்கு இறை கருணை கிட்டாது" என்று.

## சோகம்

முன்னால் கூறப்பட்ட அந்த திரு நபியவர்களின் குழந்தை இப்றாஹீம் அவர்கள் சில நாட்களின் பின்னர் இறையடி சேர்ந்து விடுகின்றனர்.

இறந்து போன அக்குழந்தை இப்றாஹீமை கண்ணோக் கியதும் அண்ணலவர்கள் சோகம் மேலீட்டால் மனமுருகி வெகுநேரம் கண்ணீர் சிந்திக்கொண்டிருந்தனர். மற்றும் ஒரு தருணம் திரு நபியவர்கள் அருமைப் புதல்வியர்களில் ஒருவர் மரணமெய்து விடுகின்றனர். குடும்பமே சோகக் கடலில் மூழ்கிக் கிடக்கின்றது. துயரம் தாங்காது உம்மு ஐமன் என்ற பணிப் பெண் கத்திக்கதறி ஓலமிடத்தொடங்கினார்.

திரு நபியவர்கள் அவ்வாறு அழுவதை தடைபடுத்தினர். அதற்கு உம்முஐமன் பெருமானார்களைக் கண்ணோக்கி இறை தூதர் அவர்களே! என்னை கதறி அழுவதைத் தடைபடுத்து கின்றீர்கள். அதே நேரத்தில் தாங்களோ கவலையின் உச்சத் தின் கண்கலங்கி தாரைதாரையாகக் கண்ணீர் வடிக்ககின்றீர் களே எனக்கேட்கின்றனர்.

அதற்கு கருணை நபியவர்கள், "உம்முஐமனே! இதயம் உருகி கண்ணீர் சிந்தும் இந்த அழுகை இறைவன் தந்த கருணைப்பகுதியில் ஒன்றாகும். இவ்வாறு அழுவது என்றும் விலக்கல்ல என்றார்கள்.

தங்கள் உத்தம மகளார் உம்முகுல்தூம் அவர்கள் மரணமெய்த சமயத்தில், மண்ணறைக்கு சென்ற மாநபியவர்கள், அந்த துயரக்காட்சியினைக் கண்டு துக்கம் தாங்காமல் அப்படியே கதிகலங்கி கண்ணீர் சொரியத் தொடங்கினர்.

அண்ணலவர்கள் கண்ணீர் வடித்து கவலைக்கடலில் மூழ்குவது தங்களது சொந்தக்குடும்பதினருக்கு மட்டும் அல்ல, அனைத்து மக்களிடத்திலும் அப்படியே! உற்ற திருத்தோழர் உத்மானுப்னு மல்ஊன் அவர்கள் உயிர் நீத்து இறையடி சேர்ந்து விடுகின்றார்கள். மரணச்செய்தி கேட்ட மாத்திரத்தில் விரைந்தோடி உயிர்த்தோழர் உத்மானின் பொன்னுடலைக் கண்ணுறச் செல்கின்றனர். பிரேதத்தின் அருமை வதனத்தைப் பார்த்ததும் அதன் நெற்றியில் முத்தமிட்டு நெடுநேரம் கண்ணீர் சொரிந்து நின்றனர். அவ்வமயம் தாங்கள் கண்ணீர் வடித்து கவலையோடு நிற்கும் காரணத்தையும் விளக்குகின்றனர்.

இன்று உத்தம தோழர் உதுமானின் பிரிவை நினைத்து நெஞ்சம் நெகிழ்கின்றது கவலை மேலீட்டால் கண்ணீர் சொட்டு கின்றது. இந்த கவலை தோய்ந்த சோகத்தருணத்தில் இறைவனுக்கு ஏற்காத எந்த வார்த்தையும் நான் கூற விரும்ப வில்லை என கூறி விட்டு

**"ஹஸ்பியல்லாஹு வநிஃமல் வகீல்"**

"இறைவனே எனக்கு போதுமானவன். பொறுப்பேற்றுக் கொள்வோரில் அவனே மிக்க நல்லவன் என்ற சொற்களையே நான் கூறுவேன்," என எடுத்துரைத்தனர். கண்ணீர் சொரி வதற்கு இச்சோக நேரங்கள் மட்டுமில்லாது மற்றும் பல தருணங்களிலும் அது உண்டு. அதாவது, உத்தம நபியவரின் உள்ளம் உணர்ச்சிப் பெருக்கெடுத்து இறைவனின் திருச்சன்ன தியில் தன்னை மறந்து அப்படியே அவனில் ஐக்கியமாக நின்ற நிலையிலும், இறைவேதம் திருகுர்ஆனை ஆழ்ந்த சிந்தனை யோடு உள்ளத்தை கொள்ளை கொள்ளும் உருக்க குரலோடு ஓதும்நேரங்களிலும், கண்கள், முத்து முத்தாக கொட்டிக் கொண்டிருக்கும்.

"அன்று நாம் ஒவ்வொரு கூட்டத்திலும் ஒரு சாட்சியம் கூறுபவரை எழுந்திருக்கச்செய்து அவர்கள் அனைவருக்கும் (நபியே!) உம்மை சாட்சியம் கூற வைப்போம்."* என்ற கருத்தை கூறும் திருவசனத்தை அடைந்ததும், அதனைக் கேட்ட அண்ணலவர்கள் அப்படியே கண்ணீர் மல்கி துக்க சாகரத்தில் தோய்ந்து போயினர்

---

* நூல்: — ஷமாயிலுத்திர்மிதீ
நூல்: — அல்மவாஹிபுல்லதுன்னியா





பொருளடக்கம்

## மலர்முகம்

“உமது சகோதரர் முன்னில் மலர் முகத்தோடு காட்சி தருவது அதுவும் தர்மத்தில் சேர்ந்த ஒன்றாகும்,” என அண்ணல் நபியவர்கள் அறிவித்தது போன்று, திரு நபியவர்கள் பற்றி திருத்தோழர்கள் எடுத்துரைக்கும் போது, திருநபியவர்கள் என்றும் சிரிப்பு வதனத்தோடே தென்படுவர், எனக் கூறுகின்றனர்.

ஒப்பற்ற பொறுப்பான நல்ல காரியங்களைச் செய்யும் பொறுப்பைத் தாங்கிய பெரியோர்கள் என்றும் மனமகிழ்வுடன் தோற்றமளித்து தனது நண்பர்கள் உள்ளங்களில் தனக்கென தனித்ததோர் இடத்தை பிடித்துவிட்டால்தான், செயல் திட்டங்கள் சீராக நிறைவு பெறும் என்ற அடிப்படையில் அண்ணலவர்கள் விளங்கினார்கள்.

தங்கள் திருத்தோழர்களின் உள்ளங்களில் திருநபியவர் கள் ஒப்பற்றதொரு இடத்தைப் பிடித்திருந்தனர். என ஹதீது நூற்கள் விளக்கிக் கொண்டிருக்கின்றன.

செம்மல் நபியவர்கள் சிரித்தும் பேசுவர். நகைச்சுவை பேசி மிகைப்பட மக்கள் மனதை மலர வைப்பார்கள் என்றால் அதிலும் ஒரு நிதானம்தான்.

உணவில் உப்புக்கலந்த அளவு, உண்மைக்குமாற்றம் எதுவும் கலந்திருக்காது. நிந்தனை, நகை பேசி எவரையும் நொந்து போக வைத்து விட மாட்டனர். கேலி பரிகாசம் பேசி எவரையும் கொக்கரிப்பு சிரிப்பில் ஆழ்த்தி விட மாட்டனர்.

தங்களின் சிரிப்பு நேரத்தில் முத்துப்போன்ற பற்கள் வரிசை மட்டும் மின்னொளி தருமல்லாது, தங்கள் தொண்டைக்குழி தெரியும்படி என்றும் சிரித்ததில்லை.

ஒரு தருணம் திருத்தோழர் அபூஹுரைரா அவர்கள் அண்ணலவர்களைப்பார்த்து, “திரு நபியவர்களே! தாங்களும் நகைச்சுவை பேசி சிரிக்கச்செய்கின்றீர்களே,” எனக் கேட்கின்றனர். “ஆம் நகைச்சுவை பேசுவேன், ஆனால் அந்த நகைச்சுவை உண்மைக்கு புறம்பானதாகாது” என்று பதில் தருகின்றனர்.

## நகைச்சுவை நிகழ்ச்சிகளில் சிலது

ஒரு சமயம் ஒருவர் திரு நபியவர்களிடம் வந்து அண்ணலவர் களே! எனது சவாரிக்கு ஒட்டகம் ஒன்று தேவைப்படுகிறது தங்களிடம் இருந்தால் தந்துதவுங்கள் என வேண்டினார். அண்ணலவர்கள் கூறினார்கள். உமக்கு ஒட்டகைக்குட்டி ஒன்று தருகின்றேன் என்றார். வினவிய அந்நபர் திகைத்துப்போய் திரு நபியவர்களே! தாங்கள் தரும் அந்த ஒட்டகைக்குட்டியை இப்பொழுது வாங்கி அதனை என்ன செய்ய முடியும்? தற்போது

உள்ள தேவைக்கு அது தகாததல்லவா? என்றார். அதற்கு திரு நபியவர்கள், ஒவ்வொரு ஒட்டகமும் அது ஒரு ஒட்டகையின் குட்டியாகத்தானே இருந்திருக்கும். என சுவை ததும்பிய நகைச்சுவையான பதிலைக் கூறினார்கள்.

முதிர்ந்த மூதாட்டியார் ஒருவர் திரு நபியவர்களிடம் வந்து இறைதூதர் அவர்களே! எனக்கு சுவர்க்கம் கிடைக்க துஆ செய்யுங்கள் என வேண்டினர்.

அதற்கு அண்ணலவர்கள் ஹாஸ்யமாக கூறினார்கள், ''மூதாட்டி அம்மையாரே! சுவர்க்கத்தில் கிழவிகள் நுழைய மாட்டனர் என்று'' இதனைக் கேட்டதும் அம்மையாருக்கு துக்கம் மேலிட்டு அழுது புலம்பித்தவித்து வெளியேறி விட்டார். அருகிலிருந்த தோழர்களைக் கண்ணோக்கி, ''தோழர்களே! அந்த அம்மையாரிடம் சென்று மூதாட்டியர்கள் அனைவரும் அந்த முதுமைப்பருவ நிலையில் சொர்க்கம் செல்லமாட்டனர். மாறாக அவர்கள் இளமை ததும்பிய பருவப் பெண்களாக உருவெடுத்தே சொர்க்கம் புகுவர் என எடுத்துக் கூறுங்கள்'' என சொல்லிவிட்டு நிச்சயமாக நாம் அந்த பெண்களை(வயது முதிர்ந்த மூதாட்டியினர்களை) பருவப்பெண்களாக மாற்றி உரு வாக்கி விடுவோம் என்ற கருத்தினைக் கொண்ட திருகுர்ஆன் வசனத்தை ஓதிக்காட்டினார்கள்.

“ஜாஹிர்” அல்லது “ஜுஹைர்” என்ற பெயருடையவர் ஒரு நாட்டுப்புறத்தார். அன்னாருக்கு அண்ணலவர்கள் மீது அளவு கடந்த பேரன்பு,பாசம். சாதாரண கிராமவாசியான அவர் திருத்தோழர் என்ற முறையில், நாட்டுப்புறத்திலிருந்து நகரப்புறத் தில் தொடர்புள்ள காரியங்களில் அண்ணலவர்கள் சம்பந்தமாக பெரும் பேருதவியாளராக திகழ்ந்தார்.

மாதுாய எண்ணத்துடன் மாநபியவர்களுக்கு அடிக்கடி அன்பளிப்புக்கள் வழங்குவார். மனநிறைவோடு அதனை ஏற்றாலும் அதன் கிரயத்தை அண்ணலவர்கள் வற்புறுத்திக் கொடுத்து விடுவர்.

திருநபியவர்கள் அந்த திருத்தோழர் “ஜாஹிர்” பற்றி அடிக்கடி இவ்வாறு கூறுவதுண்டு. ஜாஹிர் அவர்கள் நமக்கு நாட்டுப்புற குமாஸ்தா. நாம் அவருக்கு நகரப்புற காரியதரிசி என்று. ஒரு நாள் ஜாஹிர் அவர்கள் கடைவீதியில் தனது விற்பனை சாமான்களை விற்றுக் கொண்டிருந்தார். திருநபிய வர்கள் ஜாஹிரைப்பார்த்து விட்டனர். பின்னால் சென்று ஜாஹி ருடைய இரு கண்களையும் தங்கள் திருக்கரங்களால் போர்த்தி விட்டனர். மூடிக்கொண்டு அண்ணலவர்கள் கேட்கின்றனர். ''நான் யார் என கூறும் ஜாஹிரே!'' என்று, ஆரம்பத்தில்





பொருளடக்கம்

அவர்கள் அண்ணல் நபிகள் தான் என புரிந்து கொள்ள வில்லை.

திருநபியவர்கள் தான் என ஜாஹிர் அவர்களுக்கு தெரிந்ததும் தனது தோளினை திருநபியவர்கள் நெஞ்சில் உராய்ந்து தனது பேரன்பை இடைவிடாது வெளிப்படுத்திக் கொண்டிருந்தனர்.

அவ்வமயம் நபியவர்கள் நகைச்சுவையாக இந்த எனது அடிமையை யார் விலை கொடுத்து வாங்குவது என விலை கூறினர்.

அதற்கு ஜாஹிர், அல்லாஹுவின் திருத்தூதர் அவர்களே! ஒன்றுக்கும் உதவாகரையானவன் என்னை எவர் விலை கொடுத்து வாங்கினாலும் அவர் பெருங்கொண்ட நஷ்டவாளி யாகத்தான் ஆகிவிடுவர் என அன்புக்குரல் கொடுத்தார். அதற்கு அண்ணலவர்கள், ஜாஹிரே! அல்லாஹுவின் பார்வையில் நீர் உதவாக் கரையான மனிதராக இல்லையே என, மலர் முகத் தோடு மறு மொழி கூறினார்.

"கன்தக;" அகிழ்போர் நடந்து கொண்டிருக்கும் நேரம் திருத்தோழர் ஆமிர் அவர்களின் தந்தையார் ஸஅது அவர்கள் எதிரிகளை நோக்கி அம்புக்கணைகளை அள்ளி வீசிக் கொண்டிருக்கின்றனர். எதிரிகளில் ஒருவன் உடல் முழுக்க இரும்புக்கவசம் அணிந்து முகத்தை மட்டும் வெளியாக்கி அதன் பக்கம் எதிரிகளின் தாக்குதல் வராது கேடயம் ஒன்றைக் கொண்டு மறைத்து மிக எச்சரிக்கையாக இருக்கின்றான்.

ஹஜ்ரத் ஸஅது அவர்கள் அவனையே குறிவைத்து அவனை எப்படியாவது தொலைத்துக் கட்டி விடவேண்டும் என்ற ஆர்வத்தில் கணைகளை சரமாரியாக பொழிந்து கொண்டிருக்கின்றனர் ஒன்றுக்கும் அவன் சிக்கவில்லை. இறுதியில் ஸஅது அவர்கள் வில்லில் அம்புக்கணையை ஏற்றி அவனது கேடையத்திலிருந்து ஒதுங்கி, முகம் தெரிந்த நேரம் உடனே தாக்குதல் கொடுக்க எதிர்நோக்கி கொண்டிருக் கின்றனர். ஒரு தருணம் அவன் சற்று கவனக்குறைவாக தலையை வெளியில் காட்டினான். வெளியில் தெரிவதுதான் தாமதம் உடனே விட்டார்கள் கணையினை அணுவளவு கூட தவறாது பிடித்தது அவன் நெற்றியை எதிர்பாராத பயங்கர தாக்குதலுக்கு ஆளான அவன் அப்படியே தலைகீழும் கால்கள் மேலுமாக சுருண்டு விழுந்தான்.

இந்த அற்புத காட்சியைக் கண்ணோக்கிய அண்ணல வர்கள் ஸஅது அவர்களின் தீரச்செயலைப்பார்த்து உளம்

பூரித்து தங்களின் கடவாய்பற்கள் வெளியில் தெரியுமளவு நகைத்துவிட்டார்கள்.

திருநபியவர்களின் பெருவாழ்வில் ஒருபக்கம் சன்மார்க்க தொண்டும் அதன் பிரச்சாரம் அதன் விளக்கமும் நடந்து கொண்டிருக்கும். மற்றொருபக்கம் இறைபக்தி பரவசம் மேலீட்டால் என்றும் இறைவனே சதம் என உறுதி கொண்டு அவனது திருவணக்கத்தில் ஈடுபடுவது பிரிதொரு பக்கம். இறைவனால் வழங்கப்பட்ட இந்த இஸ்லாத்தின் பெரும் பொறுப்பை சரிவர எவ்வாறு நிறைவு செய்வதென என்றும் ஒரே சிந்தனை.

இத்தனை பிரச்சனைகளும் அலை அலையாக அடுத்தடுத்து மோதும் தருணங்களில் இவர்களின் மகிழ்வுக்கும் மனப்பூரிப்பிற்கும் சிரிப்பிற்கும் எங்கு இட ஒதுக்கீடு எப்படி நேரம் கிடைக்கும் என்றெல்லாம் இன்றைய மக்கள் மனதில் ஓடலாம்.

இன்று நம்மில் இது எழுவது போன்று அன்றே அக்கேள்வி எழுந்தது, பதிலும் கிடைத்தது.

ஒரு தருணம் ஹஜ்ரத் இப்னு உமர் அவர்களிடம் ஒருவர் இவ்வாறு கேட்டனர். என்ன திரு நபி அவர்களும் திருத்தோழர்களும் மனமகிழ்ச்சி மேலிட்டு சிரித்து மகிழ்ந்து கொண்டிருப்பார்களா? என்று. அதற்கு இப்னு உமர் அவர்கள், ஆம் அனைவரும் சிரித்து மகிழ்ந்து கலகலப்புடன் இருப்போம் என்றும் எமது உள்ளங்களில் ஈமானாகின்றது மலையைக் காணவும் மாவலிமை கொண்டதாக இருக்கும், சிறந்தோங்கி கொண்டிருக்கும் என்றார்கள்.

அதாவது ஈமானுக்கும் இறைபக்திக்கும் அவர்களின் மனமகிழ்ச்சி முரண்பட்டதல்ல என்ற கருத்தை இதில் காட்டு கின்றார்கள். ஹஜ்ரத் கதாதா அறிவிக்கின்றார்கள்,

‘‘நாங்கள் அம்பு எய்து பயிற்சி பெற குறி வைத்து அம்பு எய்து ஓடி விளையாடிக் கொண்டிருப்போம் சிரித்தும் மகிழ்ந்து கொண்டிருப்போம் என்று.’’

## உல்லாச பொழுதுபோக்கு

மனிதன் தனது உலக வாழ்வில் பற்பல இன்னல் இடுக்கண்களை பிரச்சனைகளை சந்திக்கின்றான். அத்தனைக் கும் தன்னை ஈடுபடுத்தி அதனை சமாளிக்க முடியாத தருணத்தில் வாழ்வே ஒரு பெரும் சுமையாகக் கருதி அவன் சோர்ந்து விடுகின்றான்.

வாழ்வில் முழுக்கவும் நம்பிக்கை இழந்து சோபையற்றுப் போன நேரங்களில் சற்று ஓய்வெடுத்து உல்லாசத்தைக்

கையாளும் போது மீண்டும் அவனது வாழ்வில் புத்துணர்வு துளிர்த்து விடுகின்றது.

ஓய்வு உல்லாசப் பொழுதுபோக்கு இதற்கும் ஒரு அளவுக்கு ஒரு நிதானத்துடன் சன்மார்க்கம் அனுமதிக்கப்பட்ட வகையில் அதனைக் கையாள வேண்டும் என்பதை அண்ணலவர்களின் அருமை வாழ்வில் காணலாம்.

திருநபியவர்களுக்கு தோட்டங்கள், காடு, வனங்களுக்குச் செல்லும் ஆர்வம் இயற்கையாக அமைந்திருந்தது.

அவைகளுக்கு தனிமையிலும் செல்வர். தோழர்களுடனும் செல்வர். அவ்வாறு சென்றால் நல்ல கருத்தரங்கும் மேலான சர்ச்சைகளும் நிகழும். குளம், கிணறு முதலியவைகளுக்குச் சென்று தனிமையில் நீந்துவர். சில தருணம் நேயர்களோடு சேர்ந்தும் நீந்துவர். குளங்களில் நீந்தினால் ஜோடி ஜோடியாகப் பிரித்து நீந்த விடுவர். முன்னால் ஒரு ஜோடியை வெகுநேரம் நீந்த விட்டு பின்னர் அதனைப்பிடிக்க மற்றொரு ஜோடியை அனுப்புவர். ஒரு தருணம் திரு நபியவர்கள் நீந்தச்செல்லும்போது திருத்தோழர் சித்தீக் அவர்களை தங்கள் ஜோடியாக ஆக்கிக்கொண்டனர். நீர்வீழ்ச்சி போன்று மழை கொட்டும்போது இடுப்பில் வேஸ்டி கட்டிக்கொண்டு அந்த பெருமழை நீர்வீழ்ச்சியில் குளிப்பது போன்று குளிப்பார்கள்.

ஒட்டகங்களில் அமர்ந்து அம்பு எய்வதில் போட்டி போடச்செய்வர். அவ்வித நேரங்களில் அண்ணலவர்களும் பங்கேற்பர். மகிழ்ச்சிப்பெருக்கும் அத்தருணங்களில் நிலவும்.

மகிழ்ச்சிகரமான நாட்கள் நேரங்களில் தஃப், (சிலங்கை இல்லாத கொட்டு) சிறுமியர்கள் பாடல் போன்றவைகளை அண்ணலவர்கள் அனுமதித்தனர். ஒரு ஈதுப்பெருநாளன்று அன்னை ஆயிஷா அவர்கள் முன்னில் இரு சிறுமியர்கள் அழகிய பாடல்களைப்பாடி மகிழ்வித்துக் கொண்டிருந்தனர். அவ்வமயம் அண்ணலவர்கள் அவர்கள் அருகில் சாய்ந்து படுத்த நிலையில் செவிமடுத்துக் கொண்டிருந்தனர். அப்போது சித்தீக் அவர்கள் திடீரென அங்கு விஜயம் செய்தனர். பாடல்கள் முழங்குவதைப் பார்த்ததும் சித்தீக் அவர்களுக்குச் சினம் மேலிட்டு என்ன இறைதூதரின் இல்லத்தில் ஷைத்தானுடைய இந்த குதியாட்டம் என கண்டனப்படுத்தினர். அதற்கு அண்ணலவர்கள் (மகிழ்ச்சிகர நாளை முன்னிட்டு) விட்டு விடுங்கள் பாடட்டும் எனக் கூறினர்.

முன்பு கூறப்பட்டது போன்று திருமண நேரங்களிலும் திரு நபியவர்கள் தஃப் அடித்து மகிழ்வதை ஆகுமாக்கி உள்ளனர்.

அன்னை ஆயிஷா அவர்கள் அறிவிக்கின்றனர். என்னிடம் ஒரு அன்சாரிப்பெண் வளர்ந்து வந்தது அதனை நான் திருமணம் செய்து கொடுத்து விட்டேன் மணமுடித்த நேரத்தில் திரு நபியவர்கள் கூறினார்கள்,

"அன்சாரிக் கூட்டத்தினர் அழகிய பாடல்களை மிக்க விரும்பி மகிழ்வர் என்ன ஆயிஷாவே! அவர்களுக்காக பாடகிகளைப்பாட வைக்க ஏற்பாடு செய்திருக்க கூடாதா?" என்று.

ஒரு தருணம் ஒரு திருத்தோழர் வீட்டில் திருமண வைபவம் நிகழ்ந்து கொண்டிருந்தது. சிறுமியர்களில் சிலர் அங்கு அழகிய பாடல்களைப்பாடி சபையோரை மகிழ்வித்துக் கொண்டிருந்தனர். அத்தருணம் அந்த வைபவத்தில் கலந்து கொண்ட ஆமிருப்னு ஸஅது என்ற திருத்தோழர் கூட்டத்தினரை நோக்கி, என்ன திரு நபித்தோழர்களே!

பத்ரு, பெரும் போரில் கலந்து கொண்ட பெரியோர்களே! என்ன! உங்களைப் போன்றவர்கள் இல்லங்களிலுமா இத்தகைய பாடல்கள் நடக்க வேண்டும்? என ஆட்சேபணைக் குரலில் கண்டனப்படுத்தினர். அதற்கு அங்குள்ளோர்கள்:—

தோழர் அவர்களே! இதனை விரும்பிக்கேட்டால் கேளுங்கள் இல்லாவிடில் வெளியில் சென்று விடுங்கள் நாங்கள் திரு நபியவர்கள் காலத்தில் இத்தகைய பாடல்களுக்கு அனுமதி பெற்றுள்ளோம். என பதிலுரைத்தனர். அரபிய மக்கள் கவிதை பாடுவதில் பெரும் திறன் படைத்தவர்கள். அவர்களில் கவிதைச்சந்தை என தனிப்பட்டதோர் சந்தையே அதற்காக கூடும். ஒவ்வொரு கவிஞரும் தனது கவித்திறனைக் காட்டி எதிரியை சரணடையச் செய்வார்.

பலதொகுப்பாக கவிதைகள் புனைந்து கஃபாவில் தொங்கவிட்டு அதனை எதிர்த்து போட்டிக்கவிபாட, அறை கூவி அழைப்பர். அண்ணலவர்கள் கருத்து நிறைந்த கவிதைகளை காவியங்களை விரும்பிக்கேட்பர். வீணாக சிலரைப் போற்றவும் தூற்றவும், காதல் சம்பவங்களை கண்மூடித்தனமாக கூறி, வேண்டாத வர்ணனை செய்வதும் நிறைந்திருந்தால், அவைகளை முழுமையாக ஒதுக்கித்தள்ளி புறக்கணித்து விடுவர்.* நல்ல கவிதைகளுக்கு திரு நபியவர்களிடம் என்றும் வரவேற்பு இருந்தது.

ஜாபிருப்னுசமரா எனும் திருத்தோழர் கூறுகின்றார்.

* அறிவிப்பு: அன்னை ஆயிஷா(ரலி) நூல்: — முஸ்லிம்
நூல்: மிஷ்காத்ஷரீபு





பொருளடக்கம்

நான் திருநபியவர்களின் திருஅவைகளில் எண்ணற்றுப் பங்கேற்றுள்ளேன். அக்கூட்டங்களில் பழங்கால கதைகள் கூறுவதையும் கருத்து நிறைந்த காவியங்களை திருத்தோழர்கள் கூறுவதையும் செவியுற்றுள்ளேன்.

அவைகளில் கவிஞர் 'லபீதின்' காவியத் தொகுப்பின் ஒரு துண்டம்.

அல்லாஹு அல்லாத அனைத்துப்பொருள்களும் பயனற் றவையே! என்ற கருத்தில் வரும் காவியத்தை அண்ண லவர்கள் மிக்க கவர்ச்சியுடன் ரசித்துக்கேட்டனர்.

திருத்தூதர் அவர்கள் ஒரு தருணம் பயணம் சென்று கொண்டிருக்கின்றனர். அவர்களுடன் "ஷரீது" என்பவரும் பயணத்தில் இருக்கின்றார். அன்னாருக்கு ஆயிரக்கணக்கான காவியங்கள் நல்ல மனனம். மகாகவி உமய்யதுப்னு அபீஸஅத் என்பாரின் கவிதைகள் உமக்கு நினைவிருந்தால் கூறும் எனச்சொன்னார்கள்.

ஷரீது அவர்கள் உமய்யாவின் நூறு கவிதைக் கொத்துக்களை சரமாரியாக பாடி முடித்தார். அவ்வமயம் அணணலவர்கள் கூறினார்கள். இக்காவியங்கள் அனைத்தும் நல்ல கருத்துச் செறிந்ததாகவும் இருக்கின்றன, கவிதை உமை யாவும் இஸ்லாத்தின் பக்கல்மிக்க நெருக்கமாகி விட்டார் என்று. இஸ்லாத்தைப்பழித்து கூறும் புலவர்கள் அன்று மிக்க அதிகமிருந்தனர். அவர்களுக்கு பதிலாக எதிர்ப்பு கவிதைகள் பாட ஹஜ்ரத் ஹஸ்ஸான், ஹஜ்ரத் கஃபுப்னுமாலிக் போன்ற இஸ்லாமிய கவிஞர்களுக்கு அண்ணலவர்கள் கட்டளை பிறப்பித்திருந்தனர். சில தருணம் மகாகவி ஹஸ்ஸான் அவர்களை திரு மதீனா பள்ளியில் உள்ள தங்கள் மிம்பர் மீது அமர்த்தி நயமான காவியங்களை பாடச் சொல்லிக்கேட்டனர். அவை களை ரசித்துக்கொண்டு கூறுவர்.

இந்த காவியங்கள் அனைத்தும் எதிரிகளைத் தாக்கும் கூரிய அம்புக் கணைகளைக்காண மிக்க வலிமை படைத்தவைகள் என்றும், இறைவிசுவாசம் கொண்ட முஃமின் தனது வாளாலும் எதிரிகளைத்தாக்குகின்றார், தனது நாவாலும் அவர்களைத் தாக்குகின்றார் எனவும் கூறினார்கள்.

## கவர்ச்சிமிக்க சில காரியங்கள்

அண்ணலவர்கள் ஆர்வத்தோடு பல கவர்ச்சிமிக்க காரி யங்களை விரும்பினர். நடைமுறையில் செய்தும் காட்டினர்.

1. எந்தப்பொருளைக் கொடுத்தாலும் வாங்கினாலும் வலது கரத்தாலே வாங்குவர், கொடுப்பர்.

2. கடிதம் எழுதும்போது ஆரம்பத்தில் "பிஸ்மில்லாஹி" யை எழுதச்சொல்வர். பின்னர் அதன்கீழ் கடிதம் பெற்றுக்கொள் வோரின் முழு முகவரி. அதன் கீழ் விசயங்கள். இறுதியில் தங்களின் முத்திரையை பதிக்க சொல்வர். அண்ணலவர்கள் மூடக் கொள்கைகளுக்கு முற்றுப்புள்ளிகள் வைத்ததோடல் லாமல் குறி, கோடாங்கி, சகுணம் போன்ற மௌடீகத்தை குழி தோண்டிப்புதைத்து விட்டனர்.

எந்த இடங்களாயினும் மனிதர்களாயினும் அவர்களுக் குரிய பெயர்கள் அழகிய கருத்துகளைத் தருவதாயிருந்தால் அவைகளை வரவேற்பர்.

அவ்வாறு அழகியவைகளாக இருப்பதையும் ஆவல்படு வர். கெட்ட அர்த்தங்கள் கொண்ட பெயர்கள் முற்றிலும் பிடிக்காது. பிடித்தமில்லாத பெயர்களை மாற்றி நல்ல பெயர் களை இடுவர். இடச்செய்வர்.

பிரயாணத்தின் போதும் பயணத்தின் போதும் அந்த இடங்கள் நல்ல பெயர்களைக் கொண்டதாக இருப்பவைகளைத் தேர்வு செய்வர்.

சண்டை சச்சரவு நஷ்டம் போன்ற பெயர்களுடைய மனிதரிடம் நல்ல ஒரு காரியத்தை ஒப்படைக்க பிரியப்பட மாட்டார்கள்.

குறிப்பிட்ட முக்கிய காரியத்திற்கு ஒருவரை அனுப்புவ தாயின் வெற்றி மகிழ்ச்சி போன்ற நல்லறிவிப்பைக் காட்டும் பெயர் கொண்ட நபரையே அனுப்புவார்கள். அண்ணலவர்கள் இவ்வாறு செய்ததின் உள்நோக்கம் பிள்ளைகளுக்கு பெயரிடும் போது வெற்றி, அமைதியைக் காட்டும் பெயர்களாக இருக்க வேண்டும் என்பதின் எடுத்துக்காட்டாகும். மாறாக அண்ணல வர்கள் இறைவனிடத்தில் ஆழ்ந்த நம்பிக்கை உள்ளவர். எந்த காரியமும் அவனது நற்கருணையால் தான் நடக்கும் என்ற நம்பிக்கையைத் தவிர்த்து, "பெயரைக்" கொண்டல்ல என்ற உறுதி கொண்டவர்கள். இதனால் திரு நபியவர்கள் சகுணம் பார்க்க விரும்புவாகள் என கருத்தில் கொள்ளக் கூடாது. வாகனங்களில் அழகிய குதிரைகளை ஆவல்படுவர், உயரிய குதிரைகளின் நெற்றிகளில் உன்னத வளர்ச்சிகள் உள்ளது என்று கூறுவர். குதிரைகளின் கண்கள் மூக்கு வாய் முதலியவைகளை அண்ணலவர்கள் தங்கள் திருக்கரங்கள் கொண்டே துடைத்து சுத்தம் செய்வர்.

கூச்சல் குழப்பம் கூக்குரல் இவைகளை என்றும் ஆவற்படமாட்டனர்.

தொழுகைக்கு ஓடி வருபவர்களைக் கண்ணோக்கி நீங்கள் அடக்கம் அமைதியை கடைப்பிடித்தவர்களாக வாருங்கள் எனக் கூறுவர்.

திருநபியவர்கள் இறுதி ஹஜ்ஜின் போது "அரஃபா" இடத்தில் ஜன சமுத்திரம் திரண்டு இருந்தது.

நெருக்கடி நிறைந்த அந்த இடத்தில் ஒரே சப்தங்களும் கூச்சல்களும் எழுந்து கொண்டிருந்தன. "கஸ்வா" என்ற ஒட்டகையின் மீது வீற்றிருந்த அவர்கள் தங்கள் திருக்கரத்தில் பிடித்திருந்த சாட்டையால் சைகை செய்து அமைதியாக இருக்க வேண்டினார்கள், அவசரப்படுவதிலும், கூச்சல்போடுவதிலும், காரியம் ஒன்றும் ஆகாது என்று சொன்னார்கள்.*

அண்ணல் நபியவர்களின் அழகிய அங்கங்களை வடிவ அமைப்புகளைக் கண்டுகளித்த நீங்கள் அவர்கள் அரியப்பண்பாடுகளால் மக்கள் மனத்தை எவ்வாறு ஈர்த்து கவர்ந்தனர் என்பதையும் இடைஇடையே பளிச்சிடப் பார்த்தீர்கள்.

எனினும் அதற்கென தனிப்பட்ட ஒரு பிரிவை ஒவ்வொன்றாக சந்தித்தால் மேலும் நல்ல விளக்கம் பெறுவீர்கள் என்பதை கருத்தில் கொண்டு கீழே தருகின்றேன். அதனை படித்துப் பயனடைவீர்களாக! பண்பு பெறுவீர்களாக!

## பொன்மனம்

நான் அன்னை ஆயிஷாசித்தீகா அவர்களிடம் அண்ணல் நபியவர்களின் சற்குணம் எவ்வாறு இருந்தது என வினவினேன் அதற்கு அன்னையவர்கள் என்ன "ஸஅது" அவர்களே! நீங்கள் திருக்குர்ஆனைப்படிக்கவில்லையா என, என்னை திரும்பக்கேட்டனர். அதற்கு ஆம் படித்துள்ளேன் என பதில் தந்தேன்.

அன்னை அவர்கள் கூறினார்கள், "திருநபியவர்கள் திருக்குணம் திருகுர்ஆனாக இருந்தது" என்று, அதாவது: திருகுர்ஆனில் கூறப்பட்ட திருக்குணங்கள் அனைத்திற்கும் அண்ணலவர்கள் செயல் வடிவமாக விளங்கினார்கள், என்பதாகும்.

அண்ணல் நபியவர்களுக்கு மேலான ஒரு நற்குணம் படைத்தோரை நாங்கள் கண்டதில்லை.

திருநபியவர்கள் திருத்தோழர்களோ, அல்லது எங்கள் இல்லத்திற்குட்பட்டவர்களோ, வேறு எவராயினும் அண்ணலவர்

* நூல்: புகாரீ, முஸ்லீம்.




பொருளடக்கம்

களை அழைத்தால் 'லப்பைக்', இதோ வந்து விட்டேன் என்று சொல்லிக் கொண்டு விரைந்து வருவார்கள்.

இத்தகைய ஒப்பற்ற உயரிய சற்குணத்தாலேயே! "அல்லாஹு" அண்ணல் அவர்களை நோக்கி,

"நபியே! நீர் மேலான சற்குணத்திலிருக்கின்றீர்கள்" என போற்றிப்புகழ்கின்றான். என அன்னை ஆயிஷா ஸித்தீகா அவர்கள் அறிவிக்கின்றார்கள்.

திருநபியவர்கள் தங்கள் திருத்தோழர்களுடன் எனது வீட்டில் அமர்ந்திருந்தனர். நான் அவர்களுக்காக உணவு தயார் செய்து கொண்டிருந்தேன். அதே தருணம் அன்னை ஹஃப்ஸா பிராட்டியார் அவர்களும் உணவு தயாரிப்பு செய்து, நான் எனது தயாரிப்பை அனுப்புவதற்குள்ளாக அண்ணலவர் கள் சமூகத்தில் அவர்கள் உணவை அனுப்பி வைத்து விட்டனர்.

இதனைக்கண்ட எனக்கு உரோசம் மேலிட்டு எனது பணிப்பெண்ணிடம் கூறினேன். நீ உடனே சென்று அந்த ஹஃப்ஸா அம்மையாரின் உணவை கீழே தட்டிவிட்டு வந்து விடும்! என்று நான் கூறியபடி அப்பணிப்பெண் அவ்வாறே செய்து முடித்தாள்.

உணவும் கீழே சிதறி விட்டது. கோப்பையும் உடைந்து விட்டது. இத்தனையும் இமை கொட்டாது அண்ணலவர்கள் புன்முறுவல் பூத்த வதனத்தோடு பொறுமையாக பார்த்துவிட்டு அப்பணிப்பெண்ணைப் பார்த்து சொன்னார்கள், உமது எஜமா னியாருக்கு கோபம் வந்து விட்டது போலும் என்று. பின்னர் உடைந்து சிதறிப்போன கோப்பைத் துண்டங்களையும் சிதறிய உணவையும் ஒன்று சேர்த்து அண்ணலவர்கள் தம் திருக் கரங்களால் சுத்தப்படுத்திக் கொண்டிருந்தனர்.

கோபக்கனலின் ஆவேசத்தால் நான் செய்த அந்த அடாத செயல் எனது உள்ளத்தை உருக்குலையச் செய்து விட்டது. எனது தவறை உணர்ந்து அண்ணலவர்களிடம் மன்னிப்புக்கோரி உடைந்த கோப்பைக்கும் சிதறிய பண்டத்திற்கும் பரிகாரம் யாது? என பணிவண்புடன் வேண்டினேன்.

அவ்வமயம் அண்ணலவர்கள் கனிவு கொண்ட இனிய வதனத்துடன் சொன்னார்கள்.

"கோப்பைக்குப்பதில் கோப்பை. உணவுக்குப் பதில் உணவு என்று, உடனே நான் தயாரிப்புச் செய்த உணவையும் கோப்பையையும் அண்ணலவர்களிடம் அனுப்பி வைத்தேன். திரு நபியவர்கள் அதனை பதிலுக்குப்பதிலாக அம்மையார்





பொருளடக்கம்

"ஹஃப்ஸாவிடம்" அனுப்பி வைத்தனர். இது விசயத்தில் திரு நபியவர்கள் என்னிடம் சிறிதளவு கூட தங்கள் அதிருப்தியைக் காட்டிக்கொள்ளவில்லை. என்னே பண்பாடு பாருங்கள்!!*

பாவையர் குழாமில் பண்போடும் அன்போடும் நடக்க வேண்டும். அவர்களை மகிழ்வித்து மனமார கௌரவித்து தொண்டுள்ளம் கொண்டோராக வாழ வேண்டும் என கூறிய அண்ணல் நபியவர்கள் எத்தனை எடுத்துக்காட்டுகளை தங்கள் வாழ்க்கையில் நிகழ்த்திக் காட்டியுள்ளனர் என்பதை நோக்கும் போது நமது சிந்தையையே சிலிர்க்கச் செய்யும் பல விந்தை யான சம்பவங்கள் தென்படுகின்றன.

திரு நபியவர்கள் துணைவியார்களில் யமன் நாட்டைச் சார்ந்த **சௌதா பிராட்டியார்,** அன்னை ஆயிஷா சித்தீக்காவை ஒரு சமயம் சந்திக்க வருகின்றனர். அன்னை ஆயிஷாவுடன் அன்னை ஹஃப்ஸா அவர்களும் அவ்வமயம் அங்கு உள்ளனர்.

அன்னை **சௌதா** அவர்கள் அப்போது கவர்ச்சிகரமான யமன் நாட்டு கமீஸ் தாவணி முதலியவைகளை அணிந்து, வதனத்தில் குங்குமப்பூ நிறம் பூசி இரு கடைக்கண்கள் ஓரங்களில் இரு மச்சங்கள் போன்று பொட்டுகள் இட்டு மிக்க அலங்காரத்துடன் வந்தனர். திருத்தோழியர்(அரீலா) எனும் அம்மையார் கூறுவது போன்று அக்காலப்பெண்கள் இவ்வாறு தங்களை அலங்காரம் செய்வது பழக்கமாக இருந்தது.

அன்னை சௌதா அவர்கள் எடுப்பான இத்தகைய அலங்காரத்துடன் தோற்றமளிப்பதைக் கண்ட அன்னை ஹஃப்ஸா பிராட்டியார் தான் அழுக்குபடிந்த கவர்ச்சியற்ற ஆடைகளை அணிந்திருக்க இவர் இத்தகைய அழகுத்தோற்றத் தில் அண்ணல் நபியவர்கள் முன்னில் காட்சிதர இருக்கின் றாரே என ஆத்திரம் கொண்டு அன்னை ஆயிஷாவை நோக்கி என்ன ஆயிஷாவே திரு நபியவர்கள் இப்போது வருகை தர இருக்கின்றார்கள் அன்னை சௌதா நம்முன்னில் எவ்வளவு கவர்ச்சிகரமாக தோன்றுகின்றனர், என்பதைப்பார்த்தீரா? அன்னை ஆயிஷா அன்னை ஹஃப்ஸாவைப் பார்த்து, ஹஃப்ஸாவே!(இந்த தோற்றத்தைக் கண்டு எரிச்சல்படாதீர் என்ற கருத்தில்) நீர் அல்லாஹுவை அஞ்சி நடப்பீராக என்றனர். ஹஜ்ரத் ஹஃப்ஸா நிச்சயமாக இந்த சௌதாவின் அழகு சவுந்தரியத்தை குலைத்தே தீருவேன் என்றனர். ஹஜ்ரத் ஆயிஷா, சௌதாவிடம் என்ன கூறப்போகின்றீர்கள்? என வினவினார்கள்.

---

* அறிவிப்பு: அன்னை ஆயிஷா(ரலி)
நூல்: கன்ஜுல் உம்மால் ஹயாதுஸ்ஸஹாபா





பொருளடக்கம்

அன்னை சௌதா அவர்கள் இயற்கையில் சற்று செவி மந்தமானவர்கள் அப்பாவித்தனமானவரும் கூட அவர்கள் செவியில் படாதவாறு ஹஜ்ரத் ஹஃப்ஸா, அன்னை ஆயிஷாவை நோக்கி, ரகசியமாக ஹஜ்ரத் சௌதாவிடம் ஒற்றைக்கண்ணன் தஜ்ஜால் வந்து விட்டான் என்று கூறப்போகின்றேன், என சொல்லிவிட்டு பின்னர் அன்னை சௌதாவை நோக்கி,

சௌதாவே! தஜ்ஜால் என்பவன் வெளியேறி விட்டான்'' என கூறினார். அதனைக்கேட்ட பாவம் சௌதா அம்மையார் அப்படியே நம்பி, என்ன! தஜ்ஜாலா வந்து விட்டான் எனக்கேட்டு திடுக்கிட்டு நடுநடுங்கிக்கொண்டு நான் அவனை விட்டும் மறைந்து கொள்ள எங்கு ஒளிய வேண்டும் எனப் பதட்டத்துடன் கேட்கின்றனர். அதற்கு ஹஃப்ஸா அவர்கள் பக்கத்திலுள்ள ஈத்தம் ஓலைகள் கொண்டு கூரை வெய்யப்பட்ட ஒரு பாழடைந்த அழுக்கு படிந்த நூலாம்படைகள் நிறைந்த கூடாரத்தைக்காட்டி அதில் சென்று ஒளிந்து கொள்ளும் என்றனர். சௌதா அதனை கேட்ட மாத்திரத்தில் ஓடோடி அதில் நுழைந்து மறைந்து கொண்டனர்.

இதற்குள்ளாக ஏந்தல் நபியவர்களும் வந்து விட்டனர். இவர்கள் இருவரும் மகிழ்ச்சிமேலிட்டு நகைத்துக்குலுங்கு கின்றனர். மிதமிஞ்சிய சிரிப்பால் இருவருக்கும பேச நாவு எழவில்லை.

நன் நபியவர்கள் கேட்கின்றனர்; ''என்ன காரணம் எதற்காக இவ்வாறு சிரித்து மகிழ்கின்றீர்கள், என்ன காரணம் எதற்காக இவ்வாறு சிரித்து மகிழ்கின்றிர்கள்'' இவ்வாறு திரும்பத்திரும்ப மும்முறை கேட்டனர். கொக்கரிப்பு மேலீட்டால் பதில் கூற வாய்வராது எதிரிலுள்ள அந்தக் கூடாரத்தின் பக்கல் சைகை செய்தனர்.

திரு நபியவர்கள் அங்கு சென்று பார்க்கும் போது அந்த கபடமற்ற அப்பாவி நடுநடுங்கிக்கொண்டு நிற்கின்றனர் அண்ண லவர்கள் அன்னை சௌதாவை நோக்கி என்ன சௌதாவே ஏன் இவ்வாறு நடுநடுங்கிக் கொண்டு நிற்கின்றாய் என வினவுகின்றனர்.

அம்மையார் அவர்கள் அண்ணலவர்களை நோக்கி திரு நபியவர்களே! அந்த ஒற்றைக்கண்ணன் தஜ்ஜால் வந்து விட்டானாமே! எனக் கேட்கின்றனர்.

பெருமானார்(ஸல்) அவர்கள் தஜ்ஜால் இப்போது வர வில்லை. இனிமேல் நிச்சயம் வரத்தான் போகின்றான். அவன் இப்போது வரவில்லை அவசியம் வரத்தான் செய்வான் என இருமுறை கூறிக்கொண்டு, அன்னை சௌதா அவர்களை





பொருளடக்கம்

அந்த அழுக்கு படிந்த கூடாரத்தை விட்டும் வெளியில் கூட்டிவந்து தங்களது பொன்னான திருக்கரங்களால், அவர்கள் மீது படிந்திருந்த அத்தனை புழுதி தூசுகள், சிலந்திப்பூச்சி நூலாம்படைகள் அனைத்தையும் தட்டி உதறி சுத்தப்படுத்தினார் கள்! என்னே பண்பியல்பு பாருங்கள்!*

அன்னை ஸஃப்யா(ரலி) அவர்கள் அறிவிக்கின்றார்.

திரு நபியவர்களுக்கு மேலான நற்குணம் படைத்தவர்களை நான் கண்டதில்லை. கைபர் போர் முடிந்த பின்னர் என்னை திருநபியவர்கள் தங்கள் ஒட்டகத்தில் தங்களுக்குப் பின்னால் ஏற்றிக் கொண்டு புறப்பட்டு வந்தனர்.

நேரம் இரவு வேளை. எனக்கு தூக்கம் மேலிட்டு அமர்ந்த நிலையில் தூங்கிக் கொண்டே வந்தேன். அதன் காரணமாக எனது சிரம் ஒட்டகத் தொட்டியின் கடைசி வக்கு வரை மோதித் தள்ளாடித்தள்ளாடி தூங்கிக் கொண்டிருந்தேன்.

எனக்கு முன்னில் அமர்ந்திருந்த அண்ணலவர்கள் தங்கள் திருக்கரத்தால் பின்பக்கமாக என்னை துளாவிப்பார்த்து கூறுவார்கள். கண்மணிப்பெண்ணே! கொஞ்சம் பொறுத்துக் கொள்க! ஸஃப்யாவின் தந்தையின் பெயர் கூறி ஹுயையின் புதல்வியே! சற்று நில் என கூறிக்கொண்டே வந்தார்கள். ஸஹ்பா என்ற இடத்தை நாங்கள் வந்ததும் என்னைப் பார்த்துக் கூறினார்கள். ஸஃபிய்யாவே! போரின் காரணமாக நான் உமது சமுதாயத்தார்களிடம் நடந்து கொண்ட சம்பவங்கள் பற்றி எனது மனவருத்தத்தை உன்னிடம் தெரிவித்தக்கொள்கிறேன். நீ கவலைப்படாதே! எதையும் நீ சிந்திக்காதே! என பற்பல சமாதா னங்கள் கூறி எனது மனதைத்தேற்றி ஆறுதல் கூறினார்கள்.*

மதீனாவில் உள்ள பணிப்பெண்கள் திரு நபியவர்களின் காலைத்தொழுகை முடிவதை எதிர்நோக்கி கொண்டிருப்பர் தொழுகைமுடிந்ததும் தங்கள் பாத்திரங்களில் தண்ணீரை நிரப்பிக்கொண்டு வருவர். கடுங்குளிர் நேரத்தில் கூட அந்த தண்ணீருக்குள் தங்கள் திருக்கரங்களை மூழ்க வைத்து நனைத்து ஒவ்வொருவராக அனுப்பிக்கொண்டிருப்பர். அதனை அவர்கள் தங்களில் நோய் வாய்ப்பட்டோருக்கு குணமளிக்க அருமருந்தாக அருந்தக் கொடுப்பர்.

---

* அறிவிப்பு: அண்ணல் நபியவர்களின் அடிமைப்பெண் ருஜைனா நூல்: அபூயஃலா மற்றும் ஹயாதுஸ்ஸஹாபா.
* அறிவிப்பு: அன்னை ஸஃபிய்யா பின்துஹுயையி
அறிவிப்பு: ஹஜ்ரத் அனஸ்(ரலி) நூல்: முஸ்லீம்

நான் ஒரு பிரயாணத்திலிருந்து திரு மதீனா திரும்பி வந்து திரு நபியவர்களைச் சந்திக்கச் சென்றேன். கைலாகை (முஸாஃபஹா) செய்வதற்காக எனது கரத்தை அவர்களிடம் நீட்டினேன். எனது கரத்தைப்பிடித்த அவர்கள் எனது கரத்தை அப்படியே விடாது பிடித்துக் கொண்டே வெகு நேரம் வரை இருந்தனர். யானே தான் முதன் முதலில் அவர்களை விட்டும் எனது கரங்களை விலக்கினேன்.**

திருநபி(ஸல்) அவர்கள் திரு மதீனாவுக்கு ஹிஜ்ரத் செய்து வந்த தருணம் அது எனக்கு வயது எட்டு இருக்கும். என்னை எனது தாயார் அவர்கள் அழைத்துக் கொண்டு பெருமானாரவர்கள் திருஅவைக்குச் சென்றனர். எனது அன்னையவர்கள் அண்ணல் நபியவர்களை நோக்கி, திரு நபியவர்களே! இந்த திரு மதீனாவில் உள்ள அன்சாரிக் குழாமில் பட்ட ஒவ்வொரு ஆணும் பெண்ணும் தங்கள் வருகையின் மனமகிழ்ச்சியால் அவரவர்களுக்கு இசை வான அன்பளிப்புகளை தங்கள் வசம் கொண்டு வந்து தந்தனர். தாங்கள் அன்புப் பெருக்கின் பேராவலைக் காட்டிக் கொண்டிருந்தீர்கள். தங்களுக்கு அன்பளிப்பாக தருவதற்கு இந்த எனது புதல்வன் அனஸ்சைத் தவிர்த்து வேறு ஒரு பொருளும் எனது கைவசமில்லை ஆதலின், இவனை எனது அன்பளிப் பாக ஏற்றுக் கொள்ளுங்கள். இவனை பணியாளனாக வைத்து சகல பணிகளையும் இவன் மூலம் வாங்கிக் கொள்ளுங்கள், என என்னை உத்தம நபியவர்களிடம் ஒப்படைத்துச் சென்று விட்டனர்.

அவ்வாறே அண்ணலவர்கள் என்னை ஏற்றுக் கொண்டனர். நானும் உள்ளன்புடன் உரித்தான பணிகளை பொறுப்புடன் நிறைவு செய்து வந்தேன். பத்து ஆண்டு காலம் அவர்களிடம் பணிவன்புடன் பணி செய்து வந்த என்னை, அவர்கள் ஒரு நாள் கூட அடித்ததில்லை, என்னை ஏசியதில்லை, கடுகடுப்பாக என்றும் என் முன்னில் அவர்கள் திரு முகத்தைக் காட்டியதுமில்லை.

ஒரு தடவை ஒரு வேலையின் நிமித்தம் ஒரு இடத்திற்கு என்னை அண்ணலவர்கள் அனுப்பினார்கள். எந்த வேலையை அண்ணலவர்கள் எனக்கு கட்டளையிட்டாலும் அதனை மறுக்காமல் ஏற்று நடக்கும் இதயம் கொண்ட நான் என்னவோ, அன்று மட்டும் அவர்கள் கூறிய அந்த வேலைக்கு செல்வதை புறக்கணித்து விட்டு தெருவில் சென்று கொண்டிருந்த நான், கடைத்தெருவில் விளையாடிக் கொண்டி

---

** அறிவிப்பு: முஹம்மதுப்னு மஸ்லமா
நூல்: தப்றானீ





பொருளடக்கம்

ருந்த ஒரு சிறுவர்கள் கூட்டத்தில் கலந்து வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தேன்.

வெகு நேரம் வரை எனது வருகையை எதிர் நோக்கிக் கொண்டிருந்த அண்ணலவர்கள் நான் வராததைக் கண்டு என்னை தேடி வந்து விட்டனர். விளையாட்டுக் கவனத்தில் ஈடுபட்டிருந்த என்னை அண்ணலவர்கள் பின்பக்கமாக வந்து எனது கழுத்தின் பின்புறத்தை தங்கள் திருக்கரத்தால் மிருது வாக பிடித்துக் கொண்டு, "யா! உனைஸ், செல்லப்பையன் அனஸே!" என குரல் கொடுத்தார்கள். திரும்பிப்பார்த்தேன், அண்ணலவர்கள் புன்முறுவல் பூத்து நிற்கின்றனர். மலர் முகத்தோடு என்னை நோக்கி, "என்ன செல்வன் அனஸே! யான் உன்னிடம் கூறிய காரியத்திற்கு செல்லாமல் இங்கு நின்று கொண்டிருக்கின்றாயே! செல்லவில்லையா? எனக் கேட்டனர்".

உடனே ஆம், இதோ செல்கின்றேன் எனக்கூறி அவ்விடத்தை விட்டுப் புறப்பட்டு அவர்கள் பணித்த வேலையை செயல்படுத்த முற்பட்டுவிட்டேன்.

ஏறத்தாழ பத்து ஆண்டுகள் அவர்களுக்கு பணி புரிந்துள்ளேன். ஒரு தடவை கூட என்னை அண்ணலவர்கள் கடிந்து கொண்டதே இல்லை.*

எம்பெருமானாரவர்கள் எவரையும் ஏசியதில்லை எவரையும் சபித்ததில்லை. துற்குணம் கொண்டோராக என்றும் நடந்து கொண்டதில்லை. எங்களில் எவர் மீதாவது கோபம் மேலிட்ட தருணத்தில் கூறுவார்கள், "அவரது நெற்றி மண்ணாகப்போக! அவருக்கு என்ன வந்து விட்டது?" என்ற சொற்கள் தவிர வேறு எதையும் கூறமாட்டார்கள்.**

திருநபியவர்கள் தங்கள் திருமுகத்தை முழுமையாக திருப்பிக்கொண்டு எங்களைப் பார்ப்பார்களே தவிர, எவரையும் கடைக்கண்ணால் பார்க்க மாட்டனர். அவர்களில் கொடிய குணமில்லை. கடும் பேச்சு இல்லை.

கடைத்தெருவில் கூச்சலிட்டு பேசியதில்லை. எனது தாய் தந்தையர்கள் அவர்களுக்கு அற்பணமாகக் கடவது (இது அக்காலத்தில் அன்பு மேலீட்டால் சொல்லும் பழக்கம்) அவர் கள் போன்ற சற்குணசீலரை அவர்களுக்கு முன்பும் எவரையும் நான் பார்த்ததில்லை பின்னரும் கண்டதில்லை.

---

* நூல்: முஸ்லிம் 253/2

** அறிவிப்பு: ஹஜ்ரத் அனஸ்(ரலி) நூல்: முஸ்லிம்
அறிவிப்பு: அனஸ்(ரலி) நூல்: அஹ்மது புகாரீ

இன்று மனித இனத்தை ஆட்டிப்படைத்து அதனை பாழடைந்த படுகுழியில் தள்ளும் ஒரு அற்பசுபாவம் இன வேற்றுமை, நிறவேற்றுமை, பிறரை தாழ்வாக மதித்தல் போன்ற ஒரு மட்ட குணமாகும். மனித இனம் தோன்றியதிலிருந்து இந்த மாபாதக வேற்றுமை, உருவெடுத்து மனித குலத்தை சிறுகச்சிறுக அழித்து அதன் முன்னேற்றத்திற்கு மாபெரும் முட்டுக்கட்டையாக திகழ்வதைப் பார்க்கின்றோம்.

உயர்ஜாதி தாழ்வுஜாதி எனும் பாகுபாட்டை உருவெடுக்க வைத்து உயர்ஜாதிக்காரர்கள், தாழ்ந்த ஜாதிக்காரர்களை மிருகங்களிலும் கேவலமாக, அற்பமாக கருதி நடத்துவதை இன்றும் நமது கண்கள் முன்னில் அது ஒரு ஆபாச நடப்பிடிப்பாக நடமாடுவதைப் பார்க்கின்றோம்.

அதே நேரத்தில் அறிவு, அந்தஸ்து, விஞ்ஞானம், பொருளாதாரம் போன்றவைகளில் முன்னேறிய மேலை நாடுகளைக்கூட இந்த அனாகரீகப்பீடை ஆட்டிப்படைக்கின்றதைக் காணும்போது, இதற்கு ஒரு முற்றுப்புள்ளி வைக்கும் காலம் தோன்றாதா என்ற எண்ணமும் சமத்துவ ஆர்வம் கொண்ட நல்ல மனிதர்கள் மத்தியில் ஒரு கேள்விக் குறியாக எழுந்துள்ளது.

இந்த இருபதாம் நூற்றாண்டில் இதற்கு தீர்வு காணும் எண்ணம் இன்று தோன்றுகிறதென்றால் அன்று பதினான்கு நூற்றாண்டின் முன்பே அண்ணல் நபியவர்கள் இதற்கு பரிகாரம் தேடி தங்கள் வாழ்வையே முன்மாதிரியாகவும் நடத்திக் காட்டிவிட்டனர். முற்றுப்புள்ளியும் வைத்து விட்டனர்.

அண்ணல் நபியவர்கள் காலத்தில் அடிமை இனம் என்று ஒரு அப்பாவிக் கூட்டம் வாழ்ந்து வந்தனர். கொத்தடிமை போன்று நடத்தப்படும் அவர்கள், குரைஷியர்கள் மத்தியில் ஏன் அரபு மண் அனைத்திலும் அக்கூட்டத்தாரை, இன்று பல இடங்களில் தாழ்த்தப்பட்டோர் என பெயர் சூட்டி அவர்களை தாழ்வாக மதித்து நடத்தப்படுவது போன்று, நடத்தப்பட்டனர்.

பகுத்தறிவற்ற மிருகங்களுக்கும் மிக்க கீழ்த்தரமாக அன்று அவர்கள் நடத்தப்பட்டனர். இறுதி எல்கைக் கல்லை நாட்ட இஸ்லாம் இதற்கு பற்பல வரம்புகளைப் போட்டு அப்படி ஒரு இனம் இல்லாமலே பூண்டோடு போக்கடித்து, ஒழித்துக்கட்டி விட்டதை, இஸ்லாமிய சட்ட நுணுக்கங்களில் மிக்க தெளிவாக காணலாம்.

திருநபியவர்கள் திரு வாழ்விலேயே அந்த வகுப்புவாதம், குலப்பெருமை, ஏற்றத்தாழ்வு என்ற மனப்பான்மையினை மண்ணோடு மண்ணாக குழிதோண்டி புதைத்து விட்டனர்.

ஜைதுப்னுஹாரித் என்பவர் அத்தகைய ஒரு அடிமை இனத்தில்பட்டவர். குழந்தைப் பருவத்திலேயே ஜைது, அவர்கள் அண்ணல் நபிகளாரின் அரவணைப்பில் வந்துவிட்டனர்.*

இவரை வளர்த்து வாலிபமாக்கி விட்ட இவருக்கு தங்கள் மாமி உமைமா பின்து அபீதாபின் புதல்வி ஜைனபு அவர்களை மணமுடித்து வைத்து ஒரு சிறந்த கலப்புத் திருமணத்தை முன் மாதிரியாக நடத்திக்காட்டி குரைஷியர்களின் அந்த குலப்பெருமைக்கு சாவுமணி அடித்து அந்த தீய எண்ணத்தை நாட்டை விட்டும் ஓட்டியே விட்டனர்.

பின்னர் **ஜைது** அவர்களுக்கு பரகா எனும் பெண்மணியை திருமணம் முடித்து வைத்தனர். பரகாவின் மூலம் ஜைது அவர்களுக்கு உஸாமா எனும் பெயர் கொண்ட ஆண்குழந்தை ஒன்று பிறந்தது. அக்குழந்தையை திரு நபியவர்கள் கண்மணிகளை இமைகள் காப்பது போன்று பேணிக்காத்து வந்தனர்.

அன்னை ஆயிஷா அறிவிக்கின்றனர் உஸாமா குழந்தைப்பருவமாக இருக்கும்போது ஒரு நாள் ஓடி ஆடி விளையாடிக் கொண்டிருந்தது. விளையாட்டு வேகத்தில் வீட்டு தலைவாயில் நிலைப்படியில் இடறி விழுந்து நெற்றியில் படுகாயம் ஏற்பட்டு இரத்தம் வழிந்தோடத் தொடங்கியது. இதனைக் கண்ணுற்ற ஏந்தல் நபியவர்கள் என்னை கண்ணோக்கி "ஆயிஷாவே! குழந்தை நெற்றியிலிருந்து வழிந்தோடும் இரத்தத்தை துடைத்து சுத்தம் செய்யும்!" என கூறினர். அதனையான் அருவருப்பாக கருதி அலட்சியப்படுத்தினேன். அதனைக்கண்ட திரு நபியவர்கள் உடனே குழந்தையை தூக்கி அணைத்து வழிந்தோடும் உதிரத்தை துடைத்து சுத்தம் செய்ய மிருதுவான தூய துணி எதுவும் கண்டு கொள்ளாத அத்தருணத்தில் தங்கள் உத்தம திரு வாயால் உறிஞ்சி உறிஞ்சி அதனைத்துப்பி விட்டு தூய்மைப் படுத்தி கூறினார்கள்.

"கண்மணி உஸாமா, பெண்குழந்தையாக நீர் இருந்தால் உம்மை வளர்த்து வாலிபமாக்கி அழகிய ஆடைகள் அணிவித்து ஆபரணங்கள் சூட்டி திருமணம் முடித்து வைத்து அழகிய மணப்பெண்ணாக மணவறைக்கு அனுப்பி வைப்பேனே! என்று.

இவ்வாறு பச்சாத்தாபத்துடன் மனமகிழ்ந்து போற்றிக் கூறினார்கள் என்றால், ஒரு தாழ்த்தப்பட்ட வகுப்பில் பிறந்த குழந்தையை எவ்வாறு அதற்கு உயர்நிலை தந்து மேன்மைப் படுத்தினார்கள் என்பது வரலாறு கண்ட புதுமையே ஆகும்.

---

* அறிவிப்பு: அபூஹுரைரா(ரலி) நூல்: ஹயாதுஸ்ஸஹாபா

திருநபியவர்கள் ஹிஜ்ரத்தின் பின்னர் உஸாமதுப்னு ஜைது மதீனா வந்தடைந்ததும் பிள்ளை உஸாமாவிற்கு மதீனா வின் தட்ப வெப்பநிலை தாங்காது அம்மை நோய் ஏற்பட்டது. நோய் குணமடைந்த பின்னர் உஸாமா குழந்தைப் பருவ மாதலால் நோயின் தாக்குதல் தாங்க முடியாது, மூக்கில் சளி வழிந்தோடத் தொடங்கியது.

அன்னை ஆயிஷா இதனைக் கண்டு சுத்தப்படுத்துவதை அருவருப்பாக நினைத்து அலட்சியப்படுத்தி ஒதுங்கினார். வெளி யில் சென்றிருந்த திரு நபியவர்கள் வீட்டினுள் வந்ததும் குழந் தை உஸாமாவின் மூக்கில் சளி வழிந்தோடுவதைக் கண்ட அவர்கள் குழந்தையின் சளியை சிந்திவிட்டு தூய தண்ணீர் கொண்டு முகத்தை கழுவி சுத்தம் செய்து துடைத்து குழந்தையை அன்புடன் முத்தமிட்டு கொஞ்சத்தொடங்கினார்கள். (பொது மக்களுக்கு தொண்டாற்றுவோம் துணை செய்வோம் என பறைசாற்றும் எந்த தலைவராவது எந்த அரசியல்வாதி யாவது இவ்வாறு நடந்தார்களா?)

திருநபியவர்கள் இவ்வாறு செய்வதை கண்கூடாக கண்ட அன்னை ஆயிஷா கூறினார்கள்.

இறைவன் மீது ஆணையாக இனிமேல் குழந்தை உஸாமா வைக்கண்டு நான் எப்போதும் தாழ்வாக கருதி அருவருப்புக் கொள்ள மாட்டேன் என்று. இஸ்லாத்தை ஏற்று அதற்கு முதல் கரம் நீட்டி அரவணைப்புச் செய்து காப்பாற்றியவர்களில் பெரும்பாலானோர் ஏழைகள், அடிமைகள், சமுதாயத்தின் முன் னில் விலாசம் தெரியாத பாவப்பட்ட மக்களாகும்.

குரைஷியர்களில் பெரும்புள்ளிகள் இவர்களைக் கண் ணோக்கும் போதெல்லாம் அவர்கள் கண்கள் உறுத்தும் கூசும். கூர்ந்து நோக்க சமத்துவமாக அவர்களோடு பழகுவதை சங்கடமாக நினைத்தனர். அல்லும் பகலும் அனவரதமும் திரு நபியவர்கள் அந்த எளிய மக்களோடு அமர்ந்து இரண்டறக் கலந்து கொண்டிருந்ததைக் கண்ட அந்த குரைஷியர்களுக்கு அவர்களுடன் சமமாக அமர்ந்து அண்ணல் நபிகளோடு உரையாடுவதை, ஏன்! அமருவதையும் கூட அற்பமாக நினைத்து ஒதுங்கினர்.

ஒரு தருணம் நடந்த நிகழ்ச்சி ஒன்றைப்பாருங்கள்!

ஒரு நாள் திரு நபியவர்கள் ஹஜ்ரத் ஸுஹைபு, பிலால், கப்பாப், அம்மார், போன்ற அடிமைகள் அத்துடன் ஏழ்மையில் தோய்ந்த சில முஸ்லிம்களுடன் அமர்ந்திருக்கின்றனர்.

அவ்வமயம் குரைஷியர்களில் பட்ட சில முக்கியஸ்தர்கள் அண்ணல் நபியவர்கள் அருகில் செல்கின்றனர். அது சமயம்

அவர்கள் திரு நபியவர்களை முன்னோக்கி, இறைதூதர் எனத் கூறும் முஹம்மதே! இந்த தாழ்வு நிலையில் பட்டவர்கள்தான் உங்கள் குழுவினராக இருக்க விரும்புகின்றீர்களா? அல்லது நாங்கள் உங்களைப் பின்பற்ற வேண்டும் என்பதை ஆசிக் கின்றீர்களா? இறை உதவி பெற்றவர்கள் இவர்களாகத்தானா இருக்க வேண்டும்? இவர்களை உங்களுடன் அமர்த்தாது வெளியில் விரட்டுங்கள். அவ்வாறு செய்தால் தான் நாங்கள் உங்களைப்பின்பற்ற முடியும் என்றனர்.

இந்நிகழ்ச்சி நடந்து கொண்டிருக்கின்றது உடனடியாக ஹஜ்ரத் ஜிப்ரீல் (அலை) அவர்கள் இறை அறிவிப்பை இவ்வாறு கொண்டு வந்து விட்டனர்.

“அந்தியிலும் சந்தியிலும் இறைவனின் திருமுகத்தையே நாடி அவனை அழைத்துப் பிரார்த்தித்து கொண்டிருக்கும் அந்த மக்களை நபியே நீர் விரட்டியடிக்காதீர் (எனவே அவ்வாறு விரட்டியடிப்பதற்கு) அவர்களின் மீதுள்ள கேள்விக் கணக்கு உம்மீது இல்லை, உம்மைப்பற்றிய கேள்விகள் அவர்கள் மீதும் இல்லை.”*

அவ்வாறு நீர் செய்தீர் எனில் பொறுப்பற்ற காரியங் களைச் செய்தோரில் சேர்ந்தவராகி விடுவீர்.**

## பணவேற்றுமை

இன்று நாட்டில் ஒருவரை அவரது வெளித்தோற்றம் ஆடை அலங்காரம் கவர்ச்சி முதலியவைகளைக் கொண்டு மதிப்பீடு செய்து நிறைபோடப்படுகின்றனர். அதே தருணம் அவனது அந்தரங்க வாழ்க்கை எவ்வளவு சீர்கேடான செயல்கள் கொண்டவைகளாக இருந்து, கொள்ளை கொள்ளையான கள்ளமனம் கொண்டிருந்தாலும் சமுதாயம் அவனுக்கு முதலிடம் தந்து வரவேற்கின்றது.

ஆனால் ஏழ்மைப்பட்டு தாழ்மை நிலை கொண்ட நல்லடியார்கள், தோற்றத்தில் மாற்றமாக அழுக்குப்படிந்த ஆடை கள் அணிந்து பார்ப்பதற்கு இழுக்காக தென்பட்டாலும், அவர் களின் கள்ளம் கபடமற்ற உள்ளங்கள் அல்லாஹுவின் திரு

---

* திருகுர்அன் 6:52
அறிவிப்பு: இப்னுமஸ்ஊத்(ரலி)
நூல்: அஹ்மது தப்றானீ
ஹயாத்துஸ்ஸஹாபா

** அறிவிப்பாளர்:அதாவு
நூல்: அல்முன்தகபு 136/5
ஹயாதுஸ்ஸஹாபா 476/6

வடியில் என்றும் அவனது அன்புப்பிணைப்பால் கட்டுண்டு பின்னிக்கிடப்பதால், கோடான கோடி செல்வங்கள் கொண்டு வெளி ஆடம்பரம் கொண்டுள்ள அந்த போலி வேசக்காரர் களைக்காண, அந்தப்பாவப்பட்ட மக்களுக்கே எப்போதும் இறைவன் சன்னதியில் நல்ல வரவேற்பு உள்ளது என்பதை, அண்ணல் நபியவர்கள் காலத்திலே அநேக சம்பவங்கள் எடுத்தக்காட்டாக வந்துள்ளன.

திருநபி(ஸல்) அவர்கள் பள்ளியில் அமாந்து ஹஜ்ரத் ஸல்மான் அபூதர்ரு போன்ற ஏழை முஸ்லிம்களுடன் உரை யாடிக்கொண்டுள்ளனர். அவ்வமயம் (புதிதாக இஸ்லாத்தை ஏற்ற) உயய்ன் இப்னுஹஸன், அக்ராஃப்னு ஹாபிஸ், போன்ற பெருந்தலைவர்கள், செல்வந்தர்கள் அண்ணல் நபிகளோடு அமர்ந்து உரையாட வருகின்றனர். அவ்வமயம் இந்த ஏழை முஸ்லிம்களைக் கண்ணோக்கியதும் கூறுகின்றனர்.

திருநபியவர்களே! நாங்கள் தங்களுடன் அமர்ந்து அளவளாவி உரையாடி தங்கள் நல்லுரைகளைக் கேட்க விரும்புகின்றோம். ஆனால் இவர்கள் அணிந்துள்ள (மேலாடை) ஜுப்பாவின் வியர்வை வாடை (ஏழ்மையின் காரணத்தால் மாற்றி அணிவதற்கு வேறு நூலாடை இல்லாது ஒரே கம்பள ஆடைகளை அணிந்து கொண்டே இருந்ததால் அதன் காரணமாக வியர்வை வாடை வந்து கொண்டிருந்தது). எங்களை தங்கள் அருகில் அமரச் செய்தலை விட்டும் அகற்றி வைக்கின்றது. ஆதலின் நாங்கள் வரும்போது இவர்கள் தங்கள் அருகில் அமராது தூரப்படுத்தி வையுங்கள் என கூறினார்.

இவர்கள் இதனைக் கூறிக் கொண்டிருக்கின்றனர் இறை கட்டளை இவ்வாறு இறங்கி விட்டது.

நபியே! நீர் அந்தியிலும் சந்தியிலும் இறைவணக்கம் செய்துகொண்டும் அவன் திருவிருப்பத்தையே தேடிக்கொண்டிரு க்கும் அந்த (ஏழை) முஸ்லீம் (நல்லடியார்) களுடன் என்றும் அமர்ந்து, அவர்களோடு நீரும் பொறுமையை மேற்கொண்டிருப் பீராக!

மேலும் நீர் இந்த உலக வாழ்வின் கவர்ச்சியில் ஈடுபடும் எண்ணத்தோடு அவர்களை(அந்த ஏழைகளை) விட்டும் உமது கண்களைத் திருப்பி விடாதீர்.*

---

* திருகுர்ஆன் 18:28
அறிவிப்பு: ஹஜ்ரத் ஸல்மான் பாரிஸீ
ஹயாதுஸ்ஸஹாபா

## மொழி வேற்றுமை

நிறவேற்றுமை, பணவேற்றுமை போன்றவைகளுக்கு சாவுமணி அடித்ததைப்போன்று அந்த அரபியர்களில் ஊறிப் போய் மலிந்திருந்த மொழி வேற்றுமைக்கும் தீர்வு கண்டனர், திரு நபியவர்கள்.

அரபு மொழி பேசும் அந்த அரபியர்கள் தாங்கள் பேசும் அந்த மொழிக்கு 'அரபு நாவன்மை' என்றும், அரபு நாவன்மை நாகரீக மொழி பேசுவோர், எனவும், அரபு அல்லாத மொழிக்கு 'அஜமீ' (பேச்சுத்திறன் அற்ற பிராணிகள் பேசும் மொழி) எனவும் 'அஜமீ' (அநாகரீக மொழி பேசுவோர் எனவும்,) பெயர் சூட்டி அழைத்தனர் என்றால், அந்த அவர்களின் மொழி மோகம் அகம்பாவம் மண்டையில் ஏறி எந்த அளவு உச்சகட்டத்தில் இருந்திருக்கும் என்பதை சற்றுச் சிந்தித்துப் பாருங்கள்.

ஒரு தருணம் ஹஜ்ரத் ஸல்மான் பாரிஸீ (பாரஸீக நாட்டைச்சார்ந்தவர்) ஸுஹைபு ரூமீ (ரோம் நாட்டைச் சார்ந் தவர்) பிலால் ஹபஷீ (அபீசீனியா நாட்டைச் சார்ந்தவர்) இவர் கள் ஒரு இடத்தில் ஒன்றாக அமர்ந்துள்ளனர். அவ்வமயம் கைஸுப்னுமதாதிய்யா என்பவன் அவர்கள் அருகில் சென்று கூறுகின்றான்.

அவ்ஸ், கஜ்ரஜ் கூட்டத்தினர்களான இந்த அரபியர்கள் இந்த முஹம்மது(ஸல்) அவர்களுடைய உதவிக்கு எழுந்து விடுகின்றனர் என்றால், (பிறமொழிபேசும்) இவர்கள் முஹம்மது (ஸல்) அவர்களுடன் ஒன்று சேர்ந்து ஒத்துழைக்க என்ன தேவை வந்துவிட்டது என்று.

இவனுடைய அந்த இடித்துக் கூறும் சொல்லைக் கேட்ட ஹஜ்ரத் முஆது(ரலி) அவர்கள் ஆவேசத்தில் எழுந்து அவனை அவனது ஆடையுடன் சுற்றி வளைத்துப் பிடித்து இழுத்து, அண்ணல் நபியவர்கள் முன்னில் கொண்டுவந்து நிறுத்தி, அவன் கூறிய அனைத்து வார்த்தைகளையும் அப்படியே எடுத்துக் கூறினார்கள். அதனைக் கேட்ட அண்ணலவர்கள் கோபாவேசத்தில் எழுந்து தங்கள் மேலாடை கீழே இழுக்கப்பட்ட அவசர நிலையில் அதிவேகமாக பள்ளிக்குசென்றனர்.

பின்னர் தொழுகைக்கு அறிவிப்புச் செய்யப்பட்டது அதன் சப்தம் கேட்டு பொது மக்கள் ஒன்று கூடினர்.

முதன் முதலில் இறை புகழ் சலவாத்தை எடுத்துரைத்து விட்டு அக்கூட்டத்தாரை நோக்கி ஒரு சிறிய சொற்பொழிவு செய்தனர்.

பொதுமக்களே! அறிந்து கொள்வீராக!
நிச்சயமாக நம் அனைவருக்கும் ஒரே இறைவனாகும்!
ஒரே தகப்பனாகும்!! ஆதம் (அலை)
ஒரே சன்மார்க்கமாகும்!!!

மேலும் கேளுங்கள்! அரபு மொழி உங்கள் தகப்பனுடையதுமல்ல உங்கள் தாயுடையதுமல்ல எனவே அரபு மொழி என்பது ஒரு சாதாரமான மொழியே அல்லாது வேறு அல்ல. எவர் அரபு மொழி பேசுகின்றாரோ அவர் ஒரு அரபியர் என்பதைத் தவிர்த்து உயரியவர் என்பது ஒன்றும் அல்ல.

இவ்வாறு திரு நபியவர்கள் கூறுவதைக் கேட்டுக்கொண்டிருந்த ஹஜ்ரத் முஆது(ரலி) அவர்கள் அந்த ''கைசுப்னு மதாதிய்யா''வை அவனுடைய ஆடைகளுடன் சுருட்டிக் கொண்டிருந்த நிலையில் திரு நபியவர்களை நோக்கி, யாரசூலல்லாஹ்! இந்த முனாபிக் நயவஞ்சகனைப்பற்றி தாங்கள் என்ன கூறுகின்றீர்கள் எனக் கேட்கின்றனர் அதற்கு திரு நபியவர்கள் கூறுகின்றனர். இவனை நரகக் குழிக்குள் தள்ளுங்கள் என்று. இந்நிகழ்ச்சியினைக் கூறும் அறிவிப்பாளர் ஹஜ்ரத் அபூஸல்மதுப்னு அப்துர்ரஹ்மான்(ரலி) அவர்கள், இந்த 'கைசுப்னுமததிய்யா' என்பவன், முர்தத், இஸ்லாத்தை விட்டும் வெளியேறியவர்கள் கூட்டத்தில் சேர்ந்துவிட்டான். அதே நிலையில் அவன் கொல்லப்பட்டதையும் நான் கண் முன்னில் கண்டேன் என்று அறிவித்துள்ளார்.

## சமத்துவம், சம உரிமை

பெருமானார்(ஸல்) அவர்கள் பிறரை மதித்து சம அந்தஸ்து வழங்குவதில் சகல துறைகளிலும் மிக்க உன்னிப்பாக கருதி நடந்ததைக் காணலாம்.

பத்ரு போருக்கு போகும் தருணம் வாகன வசதி குறைவால் ஒரு ஒட்டகையில் மும்மூன்றுபேர் சேர்ந்து செல்லக் கூடிய நிலை. திரு நபியவர்களுடன் ஹஜ்ரத் அலி(ரலி) ஹஜ்ரத் அபீலுபாபா(ரலி) இவர்கள் சேர்ந்து செல்கின்றனர். ஒட்டகை தொட்டியில் இரண்டில் ஒவ்வொருவராக அமர்ந்திருப்பர் ஒருவர் நடந்து செல்வர் ஒரு குறிப்பிட்ட இடத்தைக் கடந்ததும் நடந்துவந்தவர் தொட்டியில் ஏறி அமர்ந்து கொள்வர் முன்பு தொட்டியில் இருந்தவர் கீழே இறங்கி நடந்து செல்வர் இவ்வாறு முறை வைத்து நடந்து செல்லும் போது திரு நபியவர்கள் நடந்து செல்லும் முறைவரும்போது மேற்கூறப்பட்ட இருவரும் கூறுவர்.

அண்ணல் நபியவர்களே! தாங்கள் அமர்ந்து வாருங்கள் தங்கள் முறைக்குப்பதில் நாங்கள் நடந்து வருகின்றோம்

என்று அதற்கு அண்ணலவர்கள் (சம உரிமை வழங்க மன தில் கொண்டு) நீங்கள் என்னைக் காண வலிமையில் சிறந் தவர்கள் அல்லர். என்னுடைய முறையில் நான் நடந்தே வரு கின்றேன். அவ்விதம் நடந்துவரும் நன்மையை நற்கூலியை அடைய நான் அலட்சியம் செய்ய மாட்டேன் என்று திருத் தோழர் ஹுதைஃபா கூறுகின்றார் ரமலான் மாதத்தில் நான் ஒரு தருணம் திரு நபி(ஸல்) அவர்களுடன் தொழுகையில் கலந்து கொண்டேன். தொழுகை முடிந்ததும் திரு நபியவர்கள் குளிப்பதற்கு தயாராகி குளிக்கத் தொடங்கினர். தாங்கள் குளிக்கும் தருணம் அவர்களை பிறர்பார்க்காதவாறு திரை ஒன்றைப்பிடித்து மறைத்துக் கொண்டிருந்தேன். குளித்து முடியும் தருணம் பாத்திரத்தில் கொஞ்சம் தண்ணீர் மீதப் பட்டிருந்தது அதனைக்கண்டு அண்ணலவர்கள் என்னை நோக்கி, ஹுதைஃபாவே! இந்த மீதமுள்ள தண்ணீர் உமக்கு தேவைப் பட்டால் எடுத்துக் கொள்க! தேவை இல்லாவிட்டால் அதனை எம்மீது ஊற்றிவிடும் என்றனர். அவ்வமயம் நான் கூறினேன், இறைத் தூதர் அவர்களே தங்களுக்கு தேவையற்று எஞ்சிய தண்ணீரை தங்கள் மீது மீண்டும் ஊற்றுவதைக் காண அது என்னிடம் இருப்பதையே மிக்க விரும்புகின்றேன் எனக் கூறிக்கொண்டு அந்த எஞ்சியநீரில் நானும் குளிக்கத் தொடங்கினேன்.

முன்னர் அண்ணலவர்கள் குளிப்பின் போது பிறர் கண்ணில் அவர்கள் படாது நான் திரையிட்டுப்பிடித்து மறைத் தது போன்று அவர்களும் என்னை திரையிட்டு மறைக்கத் தொடங்கினர். அவ்வமயம் நான் கூறினேன். திரு நபியவர்களே! என் மீது தாங்கள் திரையிட்டு மறைத்து நிற்க வேண்டாம் என பணிவன்புடன் வேண்டினேன் அப்போது திரு நபியவர்கள் கூறினார்கள். ஹுஃதைய்பாவே! நீர் என்னை திரையிட்டது போன்று நானும் உன்னை திரையிட்டு மறைத்து நிற்பேன் என கூறிக் கொண்டு அவ்வாறே அதனைச் செய்து முடித்தனர்.*

## உள்ளத்தைப்புரிந்த உதவி

ஒரு நாள் அண்ணல் நபிகள் நாதரிடம் நாட்டுப்புறத்து அரபி ஒருவன் வந்து உதவி கோரினான் திரு நபியவர்கள் அவன் கோரிய உதவியை கொடுத்துவிட்டு கேட்கின்றனர். நான் உமது மனம் நிறைவு கொண்ட அளவு உதவியை

---

* நூல்: கன்ஜுல்உம்மால் 47/7261/3
ஹயாதுஸ்ஸஹாபா 709/6
அறிவிப்பு: ஹஜ்ரத் அப்துல்லாஹிப்னுமஸ்ஊத்
நூல்: அஹ்மது நசஈபிதாயா
ஹயாதுஸ்ஸஹாபா

கொடுத்துவிட்டேன் அல்லவா என்றனர். அதற்கு அவன் நீங்கள் அப்படி என்ன எனது மன நிறைவான உதவியைத் தந்துவிட்டீர்கள் என ஒரு அலட்சியப்பதிலைத் தந்தான். அவ்வமயம் அங்கு கூடியிருந்த திருத்தோழர்கள் அனை வரும் அவன் மீது சினம் கொண்டு சீறி விழ முனைந்து விட்டனர். திரு நபியவர்கள் திருத்தோழர்களை நோக்கி அவனை எதுவும் செய்து விடாதீர்கள் என கூறி தடுத்து நிறுத்தி விட்டனர். பின்னர் அந்த நாட்டுப்புறத்தான் அவனது இருப்பிடம் சென்று விட்ட சிறிது நேரத்தில் திரு நபியவர்கள் அவனது மனத்தை நிறைவுபடுத்த மேலும் அதிகப்படியான பணஉதவியைக் கொடுத்து அனுப்பிவிட்டனர். உதவியைப்பெற்ற அவன் திரும்பி வந்து அண்ணல் நபியவர்களைச் சந்திக்கின்றான். அவனைக் கண்டதும் அண்ணலவர்கள் இப்போதாவது நீர் மனநிறைவு கொண்டு விட்டீரா? என்றனர். ஆம்! இப்போது நான் முழு மனநிறைவு கொண்டு விட்டேன் இந்த எனது மன நிறைவுக்காக இறைவன் தங்களுக்கு நற்கூலி கொடுப்பானாக! தாங்கள் கொடைத்தன்மை நிறைந்த குடும்பத்தில் பட்டவர்களா வீர் என்று மனமாற வாழ்த்தினான்.

அவ்வமயம் அண்ணலவர்கள் அவனை நோக்கி நான் உமக்கு ஆரம்பத்தில் கொடுத்த உதவியை நீர் உதாசீனப் படுத்திய தருணத்தில் உம்மீது எமது திருத்தோழர்கள் அனை வரும் வெறுப்புக் கொண்டு வெம்மிப்புழுங்கி எழுந்தனர் அவர் களின் அந்த ஆவேசத்தை நான் அடக்கிவிட்டேன். எனினும் உம்மீதுள்ள அந்த வெறுப்பு உணர்வு அவர்களை விட்டும் இன்னும் நீங்கவில்லை ஆதலால் நாளை அவர்கள் முன்னில் சென்று நீர் எம்மிடம் கூறிய மகிழ்வுச் சொற்களை வாழ்த்து ரையை அவர்கள் முன்னில் கூறி அவர்களை மனத்திருப்பதி படுத்துவீராக! என்றனர்.*

நாளை நான் அவ்வாறே செய்து முடிக்கின்றேன் என கூறிச் சென்று மறுநாள் அவ்வாறே செய்து முடிக்க வந்த தருணம் திரு நபியவர்கள் அவர்கள் முன்னில் வந்து திருத்தோழர்களை நோக்கி கூறுகின்றனர். திருத்தோழர்களே! இந்த நாட்டுப்புறத்து மனிதர் உதவி கேட்ட தருணத்தில் கேட்டதை நான் கொடுத்துவிட்டு நீர் திருப்தி பட்டுவிட்டீரா? என கேட்டேன் அதனை இவர் மறுத்து அலட் சியப்படுத்தினார் அவ்வமயம் நீங்கள் இவர் மீது அருவருப்புக் கொண்டு ஆத்திரப்பட்டீர்கள். அதன் பின்னர் இவர் வீடு சென்றதும்

---

* அறிவிப்பு: ஹுஃதைஃபா(ரலி)
நூல்: அல்முன்தகபு
ஹயாதுஸ்ஸஹாபா

இவரைச் சாந்தப்படுத்த மேலும் நிறைய பணம் கொடுத்து அனுப்பினேன் அதன் பேரில் இவர் உள்ளம் நிறைவு கொண்டதும் அல்லா மல் இவர் எம்மிடம் வந்து என்னைப் போற்றி மகிழ்விக்கின்றார். அண்ணலவர்கள் அவ்வாறு நீர் செய்தது உண்மைதானா? என் அந்த நாட்டுப்புறத்தாரை நோக்கி நேரில் கேட்கின்றனர். அதற்கு அவர் ஆம் என மனநிறைவோடு கூறி ஒப்புக் கொண்டு போற்றிப் பாராட்டினார். அத்தருணம் திருநபியவர்கள் திருத்தோழர்களைப்பார்த்து கூறுகின்றார்கள்.

ஒரு மனிதனிடம் ஒரு ஒட்டகம் வளர்ந்து வந்தது ஒருநாள் அது கட்டுக்கடங்காது முரண்டு செய்து ஓடத் தொடங்கியது அதனை அடக்கி ஒடுக்க மக்கள் கூட்டம் பின் தொடர்ந்தது. தொடர்ந்து கூடிய அக்கூட்டம் அதனை அடக்க முயலவும் செய்தும் பயனற்றுப் போய்விட்டது.

இறுதியில் அதன் வளர்ப்பு எஜமானன் வந்தான் மக்கள் கூட்டத்தை நோக்கி நீங்கள் அனைவரும் ஒதுங்கிவிடுங்கள் நான் அதனை வசப்படுத்தி விடுகின்றேன் எனக்கூறி ஓர் உயரமான மேட்டில் நின்று கொண்டு கருணை மனதோடு அதனை அழைத்தான் அது சிறுகச்சிறுக அவனிடம் நெருங்கி வந்து அவன் பக்கம் நின்றது. நின்றதும் அதனைக் கட்டி வைத்து வயப்படுத்தி விட்டான்.

எனவே எமக்கும் இந்த நாட்டுப்புறத்தாருக்கும் உள்ள உவமை இது போன்றதாகும் எனக் கூறிவிட்டுச் சொன்னார்கள்,

அன்று இவர் கூறிய அலட்சியவார்த்தைகளின் காரணத் தால் உங்களை இவர் மீது நான் தாக்குதல் செய்ய விட்டிருந் தால் இவர் உயிர் துறந்து நரகத்திற்குரியவராக ஆகியிருப்பார். என விளக்கம் கூறி எடுத்துக் காட்டினார்கள்.

## புரியாத விசயத்தை புரியவைத்தல்

ஒருதருணம் திரு நபியவர்கள் தங்கம், வெள்ளியாலான சில பொருள்களை பங்கீடு செய்து கொண்டிருந்தனர். அவ்வ மயம் ஒரு நாட்டுப்புறத்தவர் நின்று கொண்டு அதனைப்பார்த்து கூறினார். முஹம்மதே! நீர் நீதியாக பங்கீடு செய்யவில்லை என உதாசீனப்படுத்தினார். அவ்வமயம் திரு நபியவர்கள், என்ன, நீர், நான் நீதி செய்யவில்லை என கூறுகின்றீரா? நான் நீதி செய்யாவிடில் எனக்கு பின்னர் உம்மீது எவர் நீதி செய்யப்போகின்றார் என சாந்தமான பதில் கூறினார்கள். இதனைக் கேட்டவுடன் அம்மனிதர் சென்றுவிட்டார். மேலும் அம்மனிதர்

சென்ற பின்னர் அவருக்கு விளக்கம் கூற மீண்டும் அன்னாரை அழைத்து வரச் சொல்லி தெளிவு படுத்தினார்கள். *

## அமைதிபடுத்தல்

அது, கைபர்போர் முடிந்த தருணம் அது போர்ப்பொருட்களை அண்ணல் நபியவர்கள் பங்கீடு செய்து கொண்டிருந்தனர். அவ்வமயம் அங்கிருந்த ஒருவர், திரு நபியவர்களே! தாங்கள் நீதியாக நடந்து கொள்ளவில்லை எனக் கூறினார். அதற்கு திரு நபியவர்கள், நான் உம்மிடம் நீதியாக நடந்து கொள்ளவில்லை என்றால் நீர் பெரும் சேதப்பட்டவராகவும் நட்டத்திற்குள்ளவராகவும் ஆகிவிடுவீர் என பதில் பகர்ந்தனர்.

இதனைக் கண்ணுற்றுக் கொண்டிருந்த ஹஜ்ரத் உமர் அவர்கள், திரு நபியவர்களே! இவன் ஒரு (முனாபிக்) நயவஞ்சகன் இவனை நான் கொன்று குவித்து விடுகின்றேன் என ஆவேசப்பட்டு கேட்கின்றனர். அதுசமயம் திரு நபியவர்கள் ஹஜ்ரத் உமரை நோக்கி, இதோ! திருத்தூதர் முஹம்மது அவர்கள் தமது தோழரில் பட்ட ஒருவரை கொலை செய்து தீர்த்துக் கட்டி விட்டார்கள் என, என் மீது பொதுமக்கள் குறைபாடு கூறுவதை விட்டும் இறைவன் காத்தருளட்டும் என கூறிவிட்டு உமர் அவர்களின் அந்த ஆவேசச் செயலை தடைபடுத்தி நிறுத்தி விட்டனர்.

## ஈடற்ற இறை நம்பிக்கை

திரு நபியவர்கள் போருக்குச் சென்றிருந்த நேரம் அது தங்கள் திருத்தோழர்களை விட்டுப்பிரிந்து தனிமையில் ஓரிடத்தில் சயனித்து ஓய்வெடுத்துக் கொண்டிருந்தனர். தருணம் பார்த்து அதனைப்பயன்படுத்த எதிரிகளில் ஒருவன் அண்ணலவர்களின் தலைப்பக்கமாக வந்து நின்று கொண்டு தனது வாளால் அவர்களைத் தீர்த்துக்கட்ட தனது உடைவாளை உருவுகின்றான்.

திரு நபியவர்கள் சட்டென கண்விழிக்கின்றனர் அதனை பார்த்த எதிரி, முஹம்மதே! எனது இந்த தாக்குதலை விட்டும் எவர் உம்மை காக்க முடியும் என கொக்கரிப்புச் செய்து கொண்டு கேட்கின்றான். அதனைக் கேட்டதும் அண்ணலவர்கள் இறைவனே என்னைக் காத்தருள்வான் என அமைதி ததும்ப பதில் தந்தனர். பதில் கூறிய மாத்திரத்தில் அவனது கையிலிருந்த உடைவாள் சட்டென கீழே விழுந்து விட்டது.

* முஹம்மதுர்ரசூல்லாஹி(ஸல்)
அறிவிப்பு: முஹம்மது காமில் ஹத்தா
பக்கம் : 83

அது வீழ்ந்த மாத்திரத்தில் அண்ணலவர்கள் அதனை எடுத்து கையிலேந்தி இப்போது என்னை விட்டும் உம்மை எவர் காக்க முடியும் என துணிவுடன் கணீரென கேட்கின்றனர்.*

அதனைக் கேட்ட எதிரி உள்ளம் நெகிழ்ந்து மன்னிப்புக் கோரும் தொனியில் தாங்கள் மன்னிப்பு வழங்குபவரில் மிக்க மேலானவர்கள் என்றான். அவ்வமயம் அண்ணலவர்கள் அவனை நோக்கி, வணக்கத்திற்குரியோன் அல்லாஹு ஒருவனே நான் அவனது திருத்தூதர் என சாட்சியம் கூறுவீராக! என்றனர். அதற்கு அவன் இதனையான் கூறவும் மாட்டேன் உங்களுடன் போர் செய்யவும்மாட்டேன் உங்களுடன் இருக்கவும் மாட்டேன். இன்னும் உங்களுடன் போர் செய்யும் கூட்டத்தாருடன் சேரவும் மாட்டேன் என்றான். பின்னர் அவனை விடுவித்துவிட்டனர் அதன் பின்னர் அவன் தனது கூட்டத்தார்களிடம்சென்று நடந்த சம்பவங்களை நயமாக சொல்லிவிட்டுக் கூறினான். நான் மிக்க மேன்மை பொருந்திய மாமனிதரிடமிருந்து வந்துள்ளேன் என்று.

## சேவையை மதித்த தூயவர்கள்

ஹஜ்ரத்அலி(ரலி) அவர்கள் அறிவிக்கின்றனர்.

ஒரு தருணம் என்னையும் ஹஜ்ரத் ஜுபைர் ஹஜ்ரத் மிக்தாத் ஆக மூவர்களையும் திரு மக்காவிற்கும் திரு மதீனா விற்குமிடையில் உள்ள "காஹ்" எனுமிடத்திற்கு அனுப்பி வைத்து சொன்னார்கள். அவ்விடத்தில் ஒரு பெண் பயணம் செய்து கொண்டிருக் கின்றாள் அவளிடம் ரகசிய கடிதம்ஒன்று உள்ளது அதனைக் கைப்பற்றி வாருங்கள் என்று.

அவ்வாறே நாங்கள் மூவரும் அந்த "காஹ்" என்னுமிடத்தில் உள்ள ஒரு தோட்டத்தை அடைந்து பார்க்கும் போது அப்பெண் அங்கு தென்பட்டாள். அவளிடம் நாங்கள் கூறினோம், பெண்ணே! உன்னிடம் ஒரு ரகசிய கடிதம் உள்ளது அக்கடிதத்தைக் கொடு என்றோம் அதற்கு அவள் என்னிடம் எந்தக் கடிதமுமில்லை என்றாள். நாங்கள் கூறினோம், நிச்சயம் உன்னிடம் கடிதம் உள்ளது அக்கடிதத்தை நீர் கொடுக்காவிட்டால் உனது மேலாடையை உரிந்து விட்டு அதனை உன்னிடமிருந்து கைப்பற்றுவோம் என்று. அவள் வேறு வழியில்லாது தனது தலைமுடிக்குள் மறைத்து வைத்திருந்த அக்கடிதத்தை எங்களிடம் கொடுத்தாள். அதனை அப்படியே திருநபியவர்களிடம் கொண்டு வந்து சேர்ந்தோம்.

---

* முஹம்மதுர்ரசூல்லாஹி(ஸல்)
அறிவிப்பு: முஹம்மது காமில் ஹத்தா
பக்கம் : 83





பொருளடக்கம்

அதில் குறிப்பிட்டிருந்ததாவது, ஹாத்திப் பின்னு அபீபல்தஆ மக்காவாசிகளுக்கு அறிவிப்ப தாவது, திருநபியவர்கள் உங்கள் மீது படை எடுத்து திருமக்கா வைக் கைப்பற்றும் நோக்குடன் உள்ளனர். என்பதை அறிந்து கொள்வீர்களாக! என்று. அதனை அறிந்து கொண்ட திரு நபியவர்கள், ஹாதிபை அழைத்து ஹாதிபே! ஏன் இவ்வாறு இரகசிய கடிதம் எழுதினீர்? என்றனர்.*

அதற்கு ஹாதிப், திரு நபியவர்களே! தாங்கள் என்மீது அவசர நடவடிக்கை எதுவும் எடுத்து விடாதீர்கள்! நான் தங்களுக்கு துரோகம் செய்து இஸ்லாத்தைத் துறந்து இஸ்லாத் திற்கு மாறு செய்யும் நோக்குடன் இதனை எழுதவில்லை. இதனை எழுதியதன் முக்கிய நோக்கம் இங்குள்ள முஹாஜிர் களின் உறவினர்கள் அங்குள்ளனர். அவர்கள் எமக்கு நெருங் கிய உறவினர்கள் ஆதலின் அவர்களுக்கும் எனக்கும் உள்ள உறவு சீர்கெட்டுவிடக்கூடாது அது நீடித்திருக்க வேண்டும் என்ற நோக்குடன் எழுதினேனல்லாது வேறு நோக்கம் எதுவும் எமக்கில்லை என்றார்.

இதனை அறிந்த திரு நபியவர்கள் ஆம்! அவ்வாறு இருக்கலாம் என ஏற்றுக் கொண்டனர். அது சமயம் ஹஜ்ரத் உமர் அவர்கள் ஆவேசத்தில் குதித்தெழுந்து, திருநபியவர்களே! இந்த முனாஃபிக் நயவஞ்சகனை கொன்று குவித்து விடுகின்றேன். அனுமதி தாருங்கள் என்றனர். அதற்கு திருநபியவர்கள் உமரே! ஆவேசப்படாதீர்கள் இவர் புனித "பத்ரு" போரில் கலந்து கொண்டவராவார். பத்ரில் கலந்து கொண்டோரைப் பார்த்து இறைவன் கூறுகின்றான்:— நீங்கள் எதையும் செய்து கொள்ளுங்கள் நான் உங்கள் பிழைகள் அனைத்தையும் மன்னித்தருளி விட்டேன் என்று. இவ்வாறு எடுத்துரைத்ததும் ஹஜ்ரத் உமர் மற்றும் திருத்தோழர்கள் யாவரையும் சமாதானப்படுத்தினார்.

**குறிப்பு:—** பத்ருப்போரில் கலந்து கொண்ட அந்த உத்தமதியாகி கள் பற்றி நீங்கள் எதையும் செய்து கொள்ளுங்கள். அத்தனை யும் மன்னித்து விட்டேன் என்ற இறைவனின் அறிவிப்பு, இஸ்லாத்தின் முக்கிய போரான பத்ரு போர் ஒரு சாதாரணப் போரல்ல அந்த போரின் வெற்றியின் மூலம் இஸ்லாம் தழைத் தோங்கியது அதில் கலந்து கொண்ட தியாகிகள் சாதாரண மனிதர்கள் அல்லர். மாதுாயமனிதர்கள் ஆதலின் அவர்களின் முன் செய்த பாவங்கள் அனைத்தையும் மன்னித்து விட்டான்

---

* நூல்: முஹம்மதுர்ரசூல்லாஹி(ஸல்)
ஆசிரியர்: முஹம்மதுகாமில்ஹத்தா
பக்கம் : 84

என்பதைச் சுட்டிக்காட்டுவதுடன், அம்மாதூய மனிதர்கள் அவர்களின் வாழ்நாட்களில் எந்த வித பாவச்செயல் செய்யவும் துணியமாட்டனர் என்பதும் கருத்தாகும். மாறாக, அவர்கள் எந்த பாவ, தீய செயல்களையும் செய்து கொள்வதற்கு இறைவன் அனுமதித்தான் என்பது பொருளல்ல. தூய மனிதர் எப்போதும் தூய செயல்கள் செய்து இறைவிருப்பத்தை தேடிக் கொண்டு தான் இருப்பர்.

## குற்றம் செய்தோர் குறையை கேட்க விரும்பாத வேந்தர்.

ஒரு சமயம் திரு நபியவர்கள் சில பொருள்களை பங்கீடு செய்து கொண்டிருந்தனர். அப்போது ஒருவர் கூறினார். இப்பங்கீடு இறைவன் திருமுகத்திற்காகச் செய்யும் மாசற்ற பங்கீடு அல்ல என்று மறைமுகமாக கூறினார். இவ்வாறு அம்மனிதர் குறைபாடு கூறியதை, ஒரு திருத்தோழர் செவியுற்றதை, திரு நபியவர்கள் காதில் போட்டுவிட்டார். அதனைக் கேட்டதுடன் திரு நபியவர்கள் சினத்தால் மனம் வெதும்பி முகம்சிவந்து கூறினார்கள்.*

திருநபி மூஸா(அலை) அவர்களுக்கு இறைவன் கருணை செய்வானாக! இன்று எமக்கு கொடுக்கப்படும் தொல்லைகளைக் காண பன்மடங்கு அதிகம் தொல்லைகள் அவர்களுக்கு கொடுக்கப்பட்டது. அத்தனையும் அவர்கள் தாங்கிக் கொண்டு பொறுமையை அருமையாக கடைபிடித்து நடந்தனர். என கூறிவிட்டுச் சொன்னார்கள், நான் மனத்தெளிவுடன் உங்களைவிட்டும் வெளியில் செல்ல ஆவல்படுகின்றேன். எனவே திருத் தோழர்களாகிய நீங்கள் எவருடைய குறைகள் பற்றியும் என்னிடம் எத்திவைத்து விடவேண்டாம். என்று, ஏனெனில். (அந்த நபரைக்கண்டால் அவருடைய குறைபாடு கண்முன்னில் வந்து விடுமல்லவா, மேலும் அன்னாரை வெறுப்புக்குள் ஆக்க அது காரணமாகி விடுமல்லாவா?

## ஆசைவார்த்தைகளுக்கு அடிமையாகாத செயல்வீரர்

குரைஷியர்களின் கொடிய எதிர்ப்புகளுக்கிடையில் அண்ணல் நபியவர்கள் தங்கள் ஏக இறைவணக்க பிரச்சாரத்தை நடத்து கின்றனர்.

திருநபியவர்கள் தங்கள் பிரச்சாரத்தை கைவிட்டுவிட்டால் மனச்சாந்தி பெறலாம் எனக்கருதிய குரைஷியரில் தலைசிறந்த

---

* நூல்: முஹம்மது உரசூலுல்லாஹி(ஸல்)
ஆசிரியர்: முஹம்மது காமில் ஹத்தா
பக்கம்: 85

ஒரு தலைவர் உத்மதிப்னுரபீஆ என்பவரை இவ்விசயத்தில் ஈடுபடச் செய்து ஆவன செய்து கொண்டனர்.

அன்னார் குரைஷியர்களை கண்ணோக்கி குரைஷியர் களே! உங்களுக்கும் முஹம்மது அவர்களுக்குமிடையே ஏற்பட்டு உள்ள பிணக்கிற்கு தீர்வுகாண நல்முயல்வு ஒன்றை மேற் கொள்ள இருக்கின்றேன் அதனை ஏற்பீர்களா? என்றார். ஆம் என்றனர் அனைவரும்.

அவர் திரு நபியவர்களிடம் செல்கின்றார். அவ்வமயம் திருநபியவர்கள் திரு கஃபாவில் தொழுது கொண்டிருக் கின்றனர். தொழுகை முடிந்ததும் திருநபியவர்களை கண்ணோ க்கிய உத்பா கூறுகின்றார்.

அன்புத்தம்பியரின் அருமை மகனாரே! நீர் குடும்பத் தாலும் கோத்திரத்தாலும் மேன்மை மிகுந்த திருமகனார் [illegible]பதையான் நன்கு அறிவேன். நீர் உமது பிரச்சாரத்தின் மூலம் சமுதாயத்தை பிளவு படுத்துகின்றீர். அறிவில் சிறந் தோரை அறிவிலியாக ஆக்குகின்றீர். அவர்கள் வழிப்படும் பல தெய்வங்களை நிந்தனை செய்கின்றீர். முன்னோர் செய்ததை மடத்தனம் என்கின்றீர். எனவே உம்மிடம் சில ஏற்பாடுகளை நான் எடுத்துக் கூற முன் வந்துள்ளேன். அதனை நீர் ஏற்றுக்கொள்வீர் என நம்புகின்றேன். சிந்தித்து செயல்படுவீராக! என்று. அதற்கு அண்ணலவர்கள், வலீதின் தந்தையார் அவர்களே! எடுத்துக் கூறுவீராக! என்றனர்.*

அப்போது அவர் கூறினார், "தம்பியர் பிள்ளையே! நீர் சிறந்த பொருள் சேமிப்பைக் கருதி இந்த பிரச்சாரத்தில் ஈடுபட்டிருப்பீராயின் நாங்கள் ஏகப்பட்ட பொருள்களை திரட்டி உம்மிடம் தந்து உம்மை பெருஞ் செல்வந்தராக ஆக்கி விடுகின்றோம். நீர் தலைமைப் பதவியை நாடிச் செய்தால் உம்மை எமது பெருந்தலைவராக்கி உமது தலைமைக்கு தாழ் பணிகின்றோம். உம்மை நாங்கள் அரசராக ஆக்க விரும்பினால் உம்மை அரச பீடத்தில் அமர்த்தி பாரில் நிகரற்ற பேரரசராக ஆக்குகின்றோம். மற்றும் உம்மீது பேய் பிசாசுகளின் (தாக்கு தல்) சாடல் ஏற்பட்டு அதனை நீர் நிவர்த்தி செய்ய முடியாதிருந்தால் அதற்குரிய மாந்திரீகம் செய்து நோய் நிவாரணம் செய்கின்றோம். எனவே இக்காரியங்களில் நீர் எதனை விரும்பினாலும் அதனை செய்து முடிக்கின்றோம் என்றார் உத்பா.

* நூல்: முஹம்மதுர்ரதுலுல்லாஹ்
ஆசிரியர்: முஹம்மது காமில் ஹத்தா


பொருளடக்கம்

உத்பாவை நோக்கி அண்ணலவர்கள் அபுல்வலீதே! உமது திட்டத்தை கூறி முடித்து விட்டீரா? என்றனர். ஆம் என்றார் அவர். உடனே திரு நபியவர்கள் திருகுர்ஆன் அத்தியாயம் அல்புஸ்ஸிலத்தின் ஆரம்பத்திலிருந்து சில திருவசனங்களை ஓதிக் காட்ட ஆரம்பித்தனர். ஆது கூட்டத்தார்கள் தமூது குழுவினர் இறைமறுப்புச் செய்ததால் அவர்களுக்கு இறங்கிய வேதனைச் சம்பவங்களை எடுத்துக் கூறும் திரு வசனங்களை ஓதிக்காட்டினார்கள்.

இதனை செவியுற்ற உத்பா அப்படியே வாயடைப்பு பெற்று திரு நபியவர்கள் மற்றுமுள்ள குரைஷியர்களுக்கு மிடையே உள்ள உறவு பந்தத்தை எடுத்துக் காட்டி அவ்வாறு இறைவேதனைகள் எங்களுக்கு ஏற்படாதிருக்க அண்ணலவர் களிடம் கெஞ்சிக் கேட்டுக் கொண்டு வீடு திரும்பினார்.

பின்னர் குரைஷியர்களிடம் வந்து கூறுகின்றார் குரைஷியர்களே! எமது திட்டத்தை முஹம்மதுவிடம் எடுத்துக் கூறினேன். அது சமயம் அவருக்கு இறைவன் மூலம் இறங்கிய வசனங்கள் சிலவற்றை எம்மிடம் ஓதிக்காட்டினார். அவ்வசனங்கள் நான் என்றுமே கேட்டிராத அற்புத வசனங்களாக இருந்தன. இறைவன் மீது ஆணையாக அவர் ஒரு சூனியக்காரராகவோ, மோடிவித்தைக் காரராகவோ, மற்றும் காவியக்காரராகவோ எனக்கு தென்படவில்லை. எனவே குரைஷியர்களே! எமது சொல்லைக் கேட்டு எமது கருத்திற்கு தாழ்பணியுங்கள். அதாவது அவரது பிரச்சாரத்திற்கு நீங்கள் தடை படுத்தாது தீவிரமடைய அவரை விட்டு விடுங்கள். ஒருக்கால் அவர் அவரது பிரச்சாரத்தில் தோல்வியுற நேரிட்டால் அரபு மக்கள் அவரை விட்டும் விடுதலை பெற்று விடுவர். அல்லது அவர் வெற்றி பெற்றுவிட்டால் அவரது வெற்றியும் சிறப்பும் உங்களுக்குரிய வெற்றியும் சிறப்புமே ஆகும் என்றார்.

அவ்வமயம் குரைஷியர் கூறினர், “உத்பாவே”! முஹம்மது உம்மை வசப்படுத்தி அவரது சூனியத்தில் மயக்கிவிட்டார் என்று மழுப்பலாயினர்.

## அடைக்கலம் தந்த, அருளாளர்

கஃபு, புஜைர், என்ற இரு சகோதரர்கள் இவ்விருவர் களில் புஜைர், என்பவர் பெருமானார்(ஸல்) அவர்களிடம் வந்து இஸ்லாத்தை ஏற்று ஈமான் கொண்டு விட்டார். அதனை அறிந்த கஃபு ஏந்தல் நபியவர்களை இழிச்சொற்கள் கூறி புஜைருக்கு தகவல் அனுப்பி விட்டார். தனக்கு அவ்வாறு எழுதியதை புஜைரு அண்ணல் நபியவர்களுக்கு அறிவிப்பும் செய்து விட்டார்.

இதனை அறிந்த அண்ணலவர்கள் கஃபுவை எவ்விடத்தில் கண்டாலும் அவரை கொன்று தீர்த்துக்கட்டி விட பகிரங்கப்பிரகடனம் செய்து விட்டனர். அப்பிரகடனத்தை செவியுற்ற புஜைர் தனது உடன் பிறந்தார் கஃபுவுக்கு எத்தி வைத்துவிட்டு இவ்வாறு அவருக்கு எழுதினார்.

உம்மீது திரு நபியவர்கள் ஆத்திரம் கொண்டு அவ்வாறு பிரகடனப்படுத்தினாலும் அவர்களிடம் சென்று உமது தவறை எடுத்துக்காட்டி மன்னிப்புக் கோரினால் உறுதியாக உம்மை மன்னித்துவிடும் உன்னத குணம் கொண்டவர்கள் எனவே இஸ்லாத்தை ஏற்பதற்கு முன்புள்ள எந்த தவறையும் அவர்கள் என்றும் பொருட்படுத்த மாட்டனர். என்று,

கடிதத்தைக் கண்ணுற்ற கஃபு தனது கோத்திரத்தார்களிடம் சென்று அபயம் அளிக்க அரும்பாடுபட்டு வேண்டினார் எவரும் அதற்கு முன்வரவில்லை. எனவே அந்த கஃபு தனது உயிரைக்காக்க உற்ற இடம் தேடி திருமதீனா வந்தடைந்தார்.

திரு மதீனா வந்தடைந்த அவர் அண்ணல் நபியவர்களின் மருமகனார் ஹஜ்ரத் அலீ அவர்களின் இல்லத்திற்கு ஏகி ஏக்கமுடன் தனது உயிருக்கு அபயமளிக்க உத்தமர் அலீ அவர்களிடம் மன்றாடினார்.

அதனை ஏற்று அபயம் தந்த அலீ அவர்கள் கஃபுவை அழைத்துக் கொண்டு திரு நபியவர்கள் அமர்ந்திருக்கும் திரு மதீனா பள்ளிக்கு வருகின்றார்கள்.

திரு நபியவர்கள் அமர்ந்திருக்கும் அத்தருணம் அலீ அவர்கள் அண்ணலவர்கள் முன்னில் அமர்ந்து அவர்கள் கரம் மீது தனது கரத்தை வைத்து கூறுகின்றனர்.

தங்களை நிந்தனை செய்த அந்த கஃபு என்னிடம் வந்து தனது உயிருக்கு அபயமளிக்க உத்திரவாதம் கேட்டார். அன்னாருக்கு நான் அபயமளித்து விட்டேன். இதோ அவர் தங்கள் முன்னில் தனது தவறைக் கூறி மன்னிப்புக் கோர வந்துள்ளார் அதனை ஏற்பீர்களா? என்றனர்.

ஆம் என்றனர் அண்ணலவர்கள். ஆம் என்ற மாத்திரத்தில் கஃபு கருணை நபியவர்கள் முன்னில் காட்சி தருகின்றார். அந்த காருண்ய திருவுருவம் கஃபுவைக் கண்ணோக்கி கேட்கின்றது. கஃபுவே எம்மை இவ்வாறெல்லாம் இழிவு படுத்தி எழுதிப் பேசியது உண்மைதானா? என்று. கஃபு குற்றத்தை ஏற்று தலை தாழ்த்தி நிற்கின்றார். இதனைக்கண்ட அன்சாரித் தோழர் ஒருவர், திருநபியவர்களே! என்னை விடுங்கள்!! இறைவனுக்கும் இறைதூதருக்கும் துரோகம் செய்த இக்கொடியோ

னை நான் கொலை செய்து தீர்த்துக் கட்டி விடுகின்றேன். என கூறி ஆர்ப்பரித்து எழுந்து நிற்கின்றார்.*

அதற்கு அண்ணலவர்கள், திருத்தோழரே! வேண்டாம் அவ்வாறு எதுவும் செய்து விடாதீர் உண்மையில் இவர் இவரது தவறை உணர்ந்து மன்னிப்புக் கோரி இணையற்ற இஸ்லாத்தை ஏற்றவராகி விட்டார் என்றனர்.

திருநபியவர்களின் அந்த திருக்கருணையைக் கண்ட கஃபு புவியெல்லாம் பரவித் தவழ்ந்திருக்கும் அண்ணல் நபியவர்களைப் பொன் எனப் போற்றி புகழ்ந்த புகழ் மாலை "பானத் சுஆது" எனும் காவியத் தொகுப்பைப் பாடி பரவச மடையச் செய்தார்.

அப்புகழ் மாலையை செவியுற்றதும் அண்ணலவர்கள் தங்கள் திருமேனியில் போர்த்தியிருந்த போர்வையை பொன்னா டையாகப் போர்த்திவிட்டு அன்னாருக்கு மாபெரும் மன்னிப்பை யும் வழங்கிவிட்டனர்.

## விறகு சுமந்த வேந்தர்

திருநபியவர்களும், திருத்தோழர்களும் ஒரு தருணம் பயணத்தை மேற் கொண்டிருந்தனர். அது சமயம் ஓரிடத்தில் தங்கி உணவுத் தயாரிப்புச் செய்ய நேர்ந்தது.

திருத்தோழர்களிடம் திருநபியவர்கள் கூறினார்கள், நீங்கள் ஆட்டை அறுத்து அதனை சரிபடுத்துங்கள் என்று, அதில் ஒருவர் நான் ஆட்டை அறுத்து முடிக்கின்றேன் என்றார். அடுத்து ஒருவர் நான் அதனை உரித்து சரிசெய்கின் றேன், என்றார். இன்னும் ஒருவர் நான் அதனை சமைத்து முடிக்கின்றேன் என்றார்.

அவ்வமயம் அண்ணல் நபியவர்கள் கூறினார்கள், சமையல் அடுப்புக்கு எரிபொருள் தேவைப்டுகின்றது அதனைக் கொண்டு வந்து சேர்ப்பது எனது பொறுப்பு என்றார்கள்.

அப்போது திருத்தோழர்கள் திரு நபியவர்களைக் கண் ணோக்கி அன்பு நபியவர்களே! நாங்கள் உங்களை வேலை வாங்குவது எங்களுக்குத் தகுமானதல்லவே! என்றனர்.

அவ்வமயம் திருத்தோழர்களை நோக்கி கூறினார்கள், தோழர் பெருமக்களே! நீங்கள் என்னை வேலை செய்யவிடாது தடுப்பீர்கள் என நான் புரிந்துள்ளேன் எனினும் நான் உங்

---

* நூல்: முஹம்மதுர்ரசூலுல்லாஹி(ஸல்)
ஆசிரியர்: முஹம்மதுகாமில்ஹத்தா
பக்கம் : 87




பொருளடக்கம்

களை விட்டுப்பிரிந்து ஏற்றத்தாழ்வு ஏற்படுத்தி நடப்பதை நான் முற்றிலும் வெறுக்கின்றேன், எனக் கூறிவிட்டுச் சொன்னார்கள்,

இறைவன் தனது அடியானை அவரது மற்றுமுள்ள தோழர்கள் மத்தியில் பாகுப்படுத்தி நடப்பதை வெறுக்கின்றான் என்று.*

## தொண்டுள்ளம் படைத்த தொண்டர்

ஒரு சமயம் நஜ்ஜாஸ் நாட்டிலிருந்து ஒரு தூதுக் குழுவினர் அண்ணல் நபியவர்களைச் சந்தித்தனர். அவர்கள் தங்கியிருந்தபோது அவர்களுக்கு அண்ணலர்கள் நற்றொண்டு செய்ய முனைந்துவிட்டனர். அத்தருணம் திருத்தோழர்கள் அண்ணலவர்கள் அவ்வாறு தொண்டாற்றுவதை தடைபடுத்த விரும்பினர்.

திருநபியவர்கள் கூறினார்கள், இத்தூதுக்குழுவினர் எமது திருத்தோழர்கள் மத்தியில் சங்கைக்குரியவர்களாகவும் உதவிக்கு உரித்தானவர்களுமாக இருக்கின்றனர். ஆதலின் அவர்களுக்கு நான் மேலும் உதவியளிக்கவும் சங்கைபடுத்தவும் ஆவல்படுகின்றேன், என்றனர்.

## கொடை வள்ளல்

அண்ணல் நபிகளாரின் அருமை மருமகனார் ஹஜ்ரத் அலீ(ரலி) அவர்கள் அண்ணல் நபிகளாரின் கொடைத்தன்மை மற்றும் அவர்கள் சற்குணங்கள் பற்றி கூறும் போது சொன்னார்கள்,

''கொடையில் சிறந்த கோமகனார் அண்ணலவர்கள் திறந்த உள்ளத்தோடு நிறைந்து வாரி வழங்குபவர்கள்.

வாய்மையில் தூய்மை கொண்டு கூறியவாக்குறுதிக்கு இம்மியளவும் மாறு செய்யாதவர்கள்.

தோழர்களின் துயர்துடைக்க துடிதுடித்து ஓடுபவர்கள் அன்புத்தோழர்களுடன் பண்புடன் நடந்து உற்ற மரியாதையுடன் உயர் உரிமை கொடுப்பவர்கள்.

திடீரென அவர்களைப் பார்த்து விட்டவர்கள் திகைத்து திக்பிரமை கொண்டு நின்று விடுவர். அன்புறவு கொண்டவர்களுடன் இன்பமுடன் நடந்து கொள்வர் என எடுத்துரைத்து விட்டு'' கூறினார்கள்,

---

* நூல்: முஹம்மதுர்ரசூலுல்லாஹி(ஸல்) ஆதாரம்: முஹம்மதுகாமில்ஹத்தா பக்கம் : 89
நூல்: முஹம்மதுப்ரசூலுல்லாஹி(ஸல்) ஆதாரம்: முஹம்மதுகாமில் ஹத்தா பக்கம்: 88.





பொருளடக்கம்

1. “ஒரு தருணம் எழுபதுனாயிரம் வெள்ளிக்காசுகள் கொண்ட பெருந்தொகை ஒன்றைக் கொண்டு வந்து அண்ணல் நபி களிடம் கொடுக்கப்பட்டது. அப்பணத்தை ஒரு விரிப்பில் குவி த்து பங்கீடு செய்யத் தொடங்கினர். கேட்போருக்கு இல்லை என்று சொல்லாது அள்ளிக் கொடுத்து முடித்து விட்டனர்.

   பணக்குவியல் அனைத்தும் கொடுத்து முடிந்து ஒன்று மில்லாத தருணத்தில் ஒருவர் வந்து தனது தேவையை எடுத்துக் கூறி கேட்டார். அது சமயம் அவரைப் பார்த்து அண்ணலவர்கள் இப்போது எம்மிடம் எதுவுமில்லை, எல்லாம் கொடுத்தாகி விட்டது. நான் கொடுப்பதாக கூறி தேவைப்பட்டதை கடனாக வாங்கிக்கொள்க! பணம் வந்ததும் அதனை நான் அடைத்து விடுகின்றேன் என்றனர்.”*

அருகாமையிலிருந்த ஹஜ்ரத் உமர் அவர்கள் கூறினார் கள்:— தாங்களால் முடியாத காரியத்தை செய்து முடிக்க இறைவன் தங்களை நிர்பந்திக்க வில்லையே என்று.

அச்சொல் திரு நபியவர்களுக்கு மனச் சங்கடத்தை தோற்றுவித்துவிட்டது. அதன் அறிகுறி திருவதனத்தில் தென் பட்டது. அதனை அறிந்த உமர் அவர்கள், “கொடுக்கக் கொடுக்க, இறைவன் குறைவு எதுவும் செய்ய மாட்டான் என உறுதி கொண்டு ஒரு திரு உருவம் கொடுத்துக் கொண்டே இருக்கின்றது என, தங்களை மகிழ்வுபடுத்தும் வார்த்தையைக் கூறினார்கள்.” இதனைச் செவியுற்றதும் அண்ணலவர்கள் புன்முறுவல் பூத்து மலர் முகத்தோடு தென்பட்டனர்.

2. ஹுனைன் போர் முடிந்து திரு நபியவர்கள் திரும்பி வந்து கொண்டிருக்கின்றனர். அது சமயம் நாட்டுப் புறத்து அரபியர் கூட்டம் ஒன்று வந்து ஒரு மரத்தின் கீழ் வழி மறித்து அண்ணலாரிடம் உதவி கோரி அவர்களின் மேலாடையை பிடுங்கிக் கொண்டு நிறுத்திவிட்டனர்.

அவர்களைக் கண்ணோக்கி அண்ணலவர்கள் கூறினார் கள், எனது மேலாடையை கொடுத்து விடுங்கள்! உங்கள் உதவிக் கோரிக்கை இந்த முள் மரத்தினுள்ள முட்கள் எவ்வளவு அடர்ந்து நிறைந்துள்ளனவோ அது அளவு இருந்தாலும் அத்தனையும் உங்களுக்கு கொடுத்து விடுவேன்.

---

* நூல்: முஹம்மது ரசூலுல்லாஹ்(ஸல்)
ஆசிரியர்: முஹம்மது காமில் ஹத்தா
பக்கம் : 89





பொருளடக்கம்

அவ்வமயம் நீங்கள் என்னை ஒரு லோபி என்றோ பேடி என்றோ பொய்யனென்றோ நினைக்க எள்ளளவும் உங்கள் உள்ளத்தில் இடம் வராது என்று. "சஃப்வானுப்னு, உமைய்யா" கூறுகின்றார், திரு நபியவர்கள் மீது நான் ஆரம்பத்தில் கடுமையான வெறுப்பும், கோபமும் கொண்டிருந்தேன். அந் நிலையில் ஒரு தருணம் அவர்களிடம் உதவி கோரினேன். கேட்ட உதவியைக் கொடுத்தார்கள். மீண்டும் கேட்டேன். கொடுத்தார்கள் கேட்கக் கேட்க கொடுத்துக்கொண்டே இருந்தனர். எந்த அளவு எனில் அது எந்த மனிதராலும் கொடுக்க முடியாத அளவுக்கு கொடுத்தார்கள் அவ்வமயம் இது மனித சுபாவத்திற்கு அப்பாற்பட்ட குணமாகத் தெரிகின்றது. இக்குணம் தீர்க்கதரிசியர் தவிர்த்து வேறு எவருக்கும் ஏற்படாது என நான் உணர்ந்து முடிவுகட்டி அவர்கள் ஒரு உண்மை தீர்க்கதரிசியர் என ஒப்புக் கொண்டு இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டேன் என்று.

திருநபியவர்கள் சஃப்வானுடைய சுபாவத்தை நன்கு புரிந்து கொண்டனர். அவர் பேராசைபட்டு கேட்பது அவருடைய மனநோய் எனக் கணித்து அந்நோய் தீர்க்க அவருக்கு அள்ளி அள்ளிக் கொடுப்பதைத் தவிர்த்து வேறு வழி எதுவுமில்லை என்று உணர்ந்து, அண்ணலவர்கள் செயஃப்பட்டதால் அவருடைய "குஃபா;" இறைவிரோதக் குணம் மாறி அவர் இஸ்லாத்தை ஏற்க இசைவாக வழிதிறந்தது.*

ஹதீது நூல் புகாரிஷரீஃபில் வருகின்றது.

3. ஒரு சமயம் பஹ்றைன் தேசத்திலிருந்து பெருங்கொண்ட பணக்குவியல் ஒன்று வந்தது அப்பெருங்கொண்ட குவியல் போன்று திரு நபியவர்களிடம் என்றும் வந்ததே இல்லை அவ்வளவு பெருங்கொடையாக அது இருந்தது. அதனை திரு நபியவர்கள் பள்ளியில் ஒரு மூலையில் குவித்து விடக் கூறி அதன்பக்கம் ஏறிட்டுக் கூடப்பார்க்காது தொழுகைக்குச் சென்று விட்டனர். தொழுகை முடிந்ததும் அதன் அருகில் வந்து அமர்ந்து கொண்டு கண்களில் பட்டோர்களுக்கெல்லாம் கை நிறைய வாரிவாரி வழங்கத்தொடங்கினர். இறுதியில் அக்குவியலிலிருந்து ஒரு வெள்ளிக்காசு கூட எஞ்சாத அளவு அத்தனையும் கொடுத்துவிட்டு வெளியேறி விட்டனர்.

---

* நூல் : முஹம்மதுர்ரசூலுல்லாஹ்
ஆசிரியர் : முஹம்மது காமில் ஹத்தா பக்கம் : 91 & 92

4. ஒரு தருணம் ஒரு அம்மையார் தனது கரங்களால் புத்தாடை ஒன்றை நெய்து கொண்டு வந்து திரு நபியவர்களே! இதனை நான் தங்களின் உடலில் அணியச் செய்து எனது கண்களால் தங்களைக் காண கொண்டு வந்துள்ளேன், எனக் கூறி கொடுத்தார். அவ்வமயம் அண்ணலவர்களுக்கு வேறு ஆடை எதுவுமில்லாததால் ஆவலுடன் தேவையுடன் அதனை வாங்கி அணிந்து தோழர்கள் மத்தியில் தோற்றமளித்தனர். அதனைக் கண்ட ஒரு தோழர் திரு நபியவர்களே! இவ்வாடை மிக்க அழகாக உள்ளது இதனை எனக்கு தந்து விடுங்கள் எனக் கேட்டார். சரி என கூறிவிட்டு சிறிது நேரத்தில் அதனை களைந்து மடித்து வினவிய தோழருக்கு விரைவுடன் அனுப்பிவிட்டனர். அதனைக் கண்ட மற்ற தோழர்கள், அப்புத்தாடையைக் கேட்டு வாங்கிய தோழரைக் கண்ணோக்கி என்ன தோழரே! திரு நபியவர்கள் தேவைப்பட்டு வாங்கி ஆவலுடன் அணிந்து கொண்ட இந்நேரத்தில் நீர் உமக்கு வேண்டு மெனக்கேட்டு வாங்கிவிட்டீரே! இது பொருந்துமா? நீர் நன்கு அறிவாய், ஏந்தல் நபியவர்களிடம் எவர் எதனைக் கேட்டாலும் இல்லை எனச் சொல்லும் சுபாவம் அவர்களுக் கில்லையே! அவ்வாறு இருந்தும் அதனை வாங்கி விட்டீரே! என குறுக்கீடு செய்து கேட்கின்றனர். அதற்கு அவர் கூறினார். தோழர்களே! இதனை நான் இப்போது அணிந்து கொள்ள கேட்கவில்லை திரு நபியவர்கள் திரு உடலில் அணிந்த ஒரு புத்தாடை எனது இறுதிப்பயணமாகிய மரணத்தின் பின்னர் அது எனது கபனாடையாக இருக்க வேண்டுமென நெடு நாட்களாக நினைத்து ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன். அது இப்போது எனக்கு நிறைவேறிவிட்டது. என பதில் தந்தார். இந்த சம்பவத்தை எடுத்தியம்பிய திருத்தோழர் "ஸஅது" என்பவர் கூறுகின்றார், "உண்மையில் அந்தபுத்தாடையை கேட்டு வாங்கிய திருத் தோழருக்கு அது கபனாடையாக ஆகிவிட்டதையும் யான் கண்ணால் கண்டேன்" என்று.*

## திருத்தோழர்களின் ஏழ்மை நிலைகண்டு கண்கலங்கிய காவலர்

அண்ணல் நபியவர்களின் அன்பு மகளார் அன்னைஃபாத்திமா அவர்கள் வேலையாட்கள் எவருமில்லை சமையல் முதற்கொண்டு சகல வேலைகளையும் ஏன்! தண்ணீர்

* நூல்: முஹம்மதுர்ரசூலுல்லாஹ்(ஸல்)
ஆசிரியர்: முஹம்மது காமில் ஹத்தா
பக்கம்: 92





பொருளடக்கம்

இரைத்து தோளில் சுமந்து கொண்டு வரும் பணிவரை அத்தனையும் அவர்களே செய்தாக வேண்டும்.

ஒரு சமயம் வேலைப்பழுதாங்காது வேதனைப்பட்டு வேலையாள் வேண்டுமென அன்புத்தந்தை அண்ணல் நபி அவர்களிடம் வந்து வேண்டினர். அதற்கு திரு நபியவர்கள் தங்கள் அருமை மகளாரைப் பார்த்து கூறினார்கள், அன்பு மகளே! நீர் உமக்கு வேலைப் பழுவினால் வேதனைப்பட்டு வேலையாள் வேண்டுமென வினவுகின்றாய். அதே நேரத்தில் இன்று என்னுடன் உயரிய உவப்புடன் பிணைந்த உற்ற தோழர்களாக வாழ்ந்து வரும் அந்த "அஸ்ஹாபுஸ் ஸுஃப்ஃபா கள்" (பள்ளித்தாழ்வாரத் திண்ணையில் வாழும்) அவர்களுக்கு உண்ண உணவற்று உடுத்த துணியற்று வறுமைக்கோட்டில் வாழும் அவர்களின் உயிர் வாழ்வுக்கு ஒன்றும் வழியில்லாது, உற்ற ஏற்பாடுகள் செய்ய இயலாத இத்தருணத்தில், வேலையாள் வேண்டுமென கேட்கின்றாய். இது இப்போது முடியாத காரியம். எனவே! உனது வேலைப்பழுவைக் குறைக்க உன்னத வழி ஒன்று உண்டு அதனை உமக்கு எடுத்துரைக் கின்றேன், எனக் கூறி விட்டுச் சொன்னார்கள்.

அருமை மகளே! நீர் இரவு படுக்கைக்கு செல்லும் முன்னர் "சுப்ஹானல்லாஹ் அல்ஹம்துலில்லாஹ் அல்லாஹு அக்பர்" எனும் 'திக்ரு' இறை நினைவு சொற்களை அதிக மாக ஓதி நித்திரை செய்வீராக! அத்தனை பளுக்களும் கஷ்டங்களும் அப்படியே பறந்தோடிவிடும் என்று,

## மனத்தை மகிழ்விக்கும் மாதூயவர்

ஜைது எனும் யூதர் ஒருவரிடம் திரு நபி(ஸல்) அவர்கள் சிறிது தொகை பணம் கடனாக வாங்கியிருந்தனர்.

கடன் வாங்கப்பட்ட அந்த யூதர் திரு நபியவர்கள் கூறியிருந்த காலக்கட்டத் தவணைக்கு முன்னர் கடனைக் கேட்டு, திரு நபிகள் திருமேனியில் உள்ள ஆடையைப் பிடித்திழுத்து அவமரியாதையான வார்த்தைகள் கூறி, திருநபி களின் கோத்திரத்தாரையும் குறைபடுத்திப் பேசினார்.* இக் கொடுஞ்செயல்களை, வார்த்தைகளை, கண்டு செவியுற்ற ஹஜ்ரத் உமர்(ரலி) அவர்கள் மனப்புழுக்கம் கொண்டு அந்த யூதனை தாக்க முற்பட்டனர்.

---

* நூல்: முஹம்மதுர்ரசூல்லாஹி(ஸல்)
அறிவிப்பு: முஹம்மதுகாமில் ஹத்தா பக்கம்: 92
நூல்: முஹம்மதுர்ரசூலுல்லாஹி(ஸல்)
அறிவிப்பு: முஹம்மது காமில் ஹத்தா பக்கம்: 93

அதனை அண்ணலவர்கள் தடுத்து நிறுத்தி விட்டு புன்னகைபூத்து ஹஜ்ரத்உமரை நோக்கி கூறினார்கள். உமரே! நான் இவரிடம் ஒரு தேவையின் நிமித்தம் கடன் வாங்கினேன் கடன் கொடுத்தவர் அவர் பொருளைக் கேட்கின்றார் அக் கடனை நான் நிறவேற்றும்படி எம்மிடம் நீர் கூற வேண்டும் அதுதான் முறையும் கூட.

அதற்குமாறாக நீர் அவர் மீது சீரிப்பாய்கின்றீர். இது பொருத்தமானதல்ல எனக் கூறிவிட்டு அந்த யூதருக்கு அவரிடம் வாங்கிய பணத்தை முழுக்க கொடுத்து விட்டதுடன் ஹஜ்ரத் உமர் அவர்கள் அந்த யூதர் மீது சினம் கொண்டு தாக்க முயன்றதற்கு பதிலாக, அவரை மனமகிழ்வு படுத்த, ஒரு தொகையை கூடுதலாகவும் கொடுத்து விட்டனர். அண்ணலவர்கள். இவ்வற்புத காட்சியைக் கண்ட அந்த யூதர் உடனே மனம் மாறி புனித இஸ்லாத்தில் புகுந்துவிட்டார்.

## பொருளைப் புறக்கணித்த புனிதர்

அண்ணல் நபியவர்கள் அமர்ந்துள்ளனர். ஒருவர் உதவி கோரி வந்து நின்றார். வந்தவரைப் பார்த்ததுச் சொன்னார்கள். அமருங்கள் வல்ல இறைவன் உமது தேவைக்கு வகை செய்வான் என்று அதனை அடுத்து மற்றொருவர் அவ்வாறே வந்து உதவி கோரினார். சில நிமிடத்தின் பின்னர் அவரைத் தொடர்ந்து இன்னும் ஒருவர் அப்படியே ஆக மூவர்கள் முன்னும் பின்னுமாக கலந்து சேர்ந்தனர்.

அத்தனை நபர்களையும் அமரச் செய்துவிட்டனர். சிறிது நேரத்தில் ஒரு மனிதர் நான்கு தங்கக் காசுகளை அண்ணல் நபியவர்களிடம் வந்து சமர்ப்பித்து "திரு நபியவர்களே, இந்த நான்கு தங்க நாணங்களையும் தர்மமாக செலவிட்டு விடுங்கள்" என கூறிச் சென்றார்.

திரு நபியவர்கள் முதலாவது வந்து உதவி கோரியவரைக் கூப்பிட்டு ஒரு தங்கக் காசை கொடுத்தனர். பின்பு இரண்டாம் நபரை அழைத்து ஒரு தங்கக்காசைக் கொடுத்தனர். அதன் பின்னர் மூன்றாம் நபரை அழைத்து ஒரு தங்க நணையத்தைக் கொடுத்துவிட்டு, அத்தனை நபர்களையும் அனுப்பிவிட்டனர்.

எஞ்சியிருந்த ஒரு தங்க நாணயத்தை எவருக்காவது தேவையுண்டா என திருத்தோழர்களை நோக்கிக் கேட்டனர். எவரும் அதனைப்பெற்று கொள்ள முன் வரவில்லை.





பொருளடக்கம்

பின்னர் இரவு நேரம் வந்ததும் அதனை தங்கள் மேலாடைத்துணியில் சுருட்டி தங்கள் தலைமாட்டின் கீழ் வைத்து தூங்கத் தொடங்கி விட்டனர்.*

நித்திரையில் கண்மூடியகண்மணி நாயகத்திற்கு தூக்கம் தொடர்ந்து வரவில்லை சற்று நேரம் கண் அயரவில்லை.

புறண்டு புறண்டு உழன்று படுத்து சிறிது நேரத்தில் எழுந்து இரவுத் தொழுகையை மேற்கொள்ள ஈடுபட்டனர். அண்ணலவர்களை அடுத்து படுக்கையிலிருந்த அன்னை ஆயிஷா(ரலி) அவர்கள் திருநபியவர்களை நோக்கி,

நாயகமே! இன்று இரவு என்றுமில்லாத ஓர் நிலையை உங்களிடம் காண்கின்றேன். தங்களுக்கு உடல் நலக்குறைவு எதுவும் ஏற்பட்டுவிட்டதா என கேட்கின்றனர். ஒன்றுமில்லை என பதில் பகிர்ந்தனர். வேறு இறைகட்டளை எதுவும் இறங்கியதா என மீண்டும் வினவினர். அதற்கும் அப்படி ஒன்றுமில்லை என பதில் தந்தனர். பின்னர் ஒன்றுமில்லாது இவ்விரவு முழுக்க இவ்வாறு அலட்டிக்கொண்டு புறண்டு படுத்து எழுந்து விட்டீர்களே! என்ன காரணம் என அன்னை ஆயிஷா அவர்கள் கேட்கின்றனர்.

அதற்கு திரு நபியவர்கள் தங்கள் தலைமாட்டின் கீழ் வைத்திருந்த அந்த ஒரு எஞ்சிய தங்க நாணயத்தை எடுத்துக் காட்டி இத்தனையும் இத்தங்க நாணயம் செய்த செயல்தான் என இயம்பிவிட்டு, இந்த தங்க நாணயத்தை தர்மம் செய்யாது சேமித்து எனது தலைமாட்டின் கீழ் வைத்த நிலையில் எனக்கு மரணம் வந்து விட்டால், நான் இறைவனிடம் என்ன பதில் கூறுவேன் என்ற எண்ணமே என்னை இவ்வாறு படுத்தி எடுத்தது என விபரம் கூறினார்கள்.

## பொறுமைப் பருவதம்

அண்ணல் நபியவர்கள் அருளியதாக ஹஜ்ரத் அனஸ்(ரலி) அவர்கள் அறிவிக்கின்றனர்.

இறைவன் திருப்பணியான இச்சன்மார்க்கப் பிரச்சாரத்தின் போது எம்மை அச்சுறுத்தியது போன்று எவரும் அச்சுறுத்தப் பட்டிருக்கமாட்டார்.

எமக்கு தொல்லைகள் கொடுக்கப்பட்டது போன்று எவரும் தொல்லை கொடுக்கப் பட்டிருக்கமாட்டார்.

* நூல்: முஹம்மதுர்ரசூலுல்லாஹ்
ஆதாரம்: முஹம்மது காமில் ஹத்தா பக்கம்: 88

எதிரிகள் கண்களில் படாது, திருத்தோழர் பிலால் அவர்கள் தனது கமுக்கூடில் ஒளித்து மறைத்து கொண்டுவரும் ஒரு சொற்ப உணவைத் தவிர, ஒரு ஜீவன் உணவுண்ணும் அளவுக்கு, எமக்கும் பிலாலுக்கும் உணவு கிடைக்காமல் மாதக்கணக்கில் இரவு பகல் எம்மை விட்டுச் சென்றிருக்கின்றன என்று. உலகப்பற்றற்ற உத்தமர் எப்படியோ, அப்படியே அவர்கள் குடும்பத்தாரும் வாழ்ந்தனர்.*

திருநபியவர்கள் திருத்தூதராக அனுப்பப்பட்டு விரல்விட்டு எண்ணும் சொற்பகாலத்தில் மாபெரும் வெற்றியைக் கண்டனர். பல்லாயிரக்கணக்கானோர் இஸ்லாத்தை ஏற்றனர். பல நூற்றுக் கணக்கான மைல்கள் கொண்ட நிலப்பரப்புடைய பூமிகள் தங்கள் கைவசமாயின.

ஹிஜாஸ் நாட்டில் (ஃபுராத்) யூப்ரடீஸ் நதிக்கரை வரையிலும் எமன் தேசத்தில் உம்மான் நாடுவரையும் உள்ள நாடுகள் அனைத்தும் தங்கள் காலடியில் கவிழ்ந்தன.

அண்ணலவர்கள் அன்று நினைத்தால் பொற்காசுகளும் உலகச் செல்வங்களும் குவியல் குவியலாக வந்து குவிந்து செல்வச் செருக்கில் சுகபோக வாழ்வில் முக்களிப்பு போடலாம். அத்தனையும் அண்ணலவர்கள் அற்பமாக நினைத்தனர். மறுநாள் வேண்டும் என்று எதனையும் சேர்க்காது ஓர் உயர் துறவறத்தையே மேற்கொண்டு இறுதி மூச்சுவரை எடுத்து நடந்து வாழ்ந்து காட்டினர்.

உலகச் செல்வத்தை துச்சமாக நினைத்த அவர்கள் தாங்கள் வாழ்ந்தது போன்று தங்கள் குடும்பத்தாரும் தங்கள் அடிச்சுவட்டில் வாழ வேண்டுமென நினைத்த அவர்கள் தங்கள் பிள்ளைகளுக்கோ மனைவியர்களுக்கோ எதனையும் விட்டுச் செல்லவில்லை. அவ்வாறு எதையும் விட்டுச் செல்ல வில்லை என வெளிப்படையாக அறிவித்தும் விட்டனர்.

திருநபியவர்கள் தங்கள் உலகவாழ்வை முடித்துக் கொண்டு இறையடிசேர்ந்த பின்னர் அவர்களின் கலீஃபா பிரதிநிதியாக ஹஜ்ரத் அபூபக்கர் அவர்கள் தேர்வு செய்யப்பட்ட பின்னர் அண்ணலவர்களின் அருமை மகளார் அன்னை ஃபாத்திமா (ரலி) அவர்கள், கலீஃபா சித்தீக் அவர்களிடம் வந்து தங்கள் அன்புத்தந்தை அண்ணலவர்கள் விட்டுச் சென்ற சொத்துக்களை தமக்கு தர வேண்டுமென கோரினார்கள்.

---

* நூல்: முஹம்மதுர்ரசூலுல்லாஹ்
ஆசிரியர்: முஹம்மது ஹத்தா பக்கம்: 93 & 94

அப்போது கலீஃபா சித்தீக் அவர்கள் அண்ணல் நபியவர்கள் எடுத்துக்கூறி எச்சரிக்கை செய்த சொற்றொடர் ஒன்றை இவ்வாறு எடுத்துக்காட்டினார்கள்.

எனது ஜீவியத்தின் பின்னர் நான் விட்டுச்சென்ற எப்பொருளுக்கும் எனது குடும்பத்தில் எவரையும் அனந்தரவாரிசாக நான் ஆக்கிவிட்டுச் செல்லவில்லை எனவே! நான் விட்டுச் சென்றது எதுவாயினும் அது தர்மத்தில் சேர்ந்ததாகும் என்று, கலீஃபா அவர்கள் அன்னை ஃபாத்திமா அவர்களுக்கு எடுத்துக் கூறிவிட்டுச் சொன்னார்கள்,

அருமைக்குழந்தை ஃபாத்திமாவே! திரு நபியவார்கள் எவரெவர் தனது குடும்பத்தினராக மதித்து செயலாற்றினார் களோ கலீஃபா என்ற எனது பொறுப்பில் அவர்கள் அனைவரையும் நான் எனது குடும்பத்தில் பட்டவர்கள் என மதித்து செயலாற்றுவேன்.

மேலும் திரு நபியவர்கள் யார் யாருக்கு தங்கள் செல்வத்தை வழங்கி செலவு செய்து கொண்டிருந்தனர்களோ அவர்களுக்கும் நான் அவ்வாறே செலவு செய்து கொண்டிருப் பேன் என்று.*

## வினாவுக்குத் தகுந்த விவேகமான பதில்

அண்ணல் நபிகள் நாதரிடம் எத்தகைய வினாக்கள் விடுத்தாலும் வினாவுக்கேற்ற விவேகமான கச்சிதமான பதில் தருவார்கள்.

தற்கவாதத்தின் போது, கேள்வியில் அவர்கள் தோல்வி கொண்டு இயலாது போனது எப்போதும் கிடையாது. எதிரிகளின் கேள்விகளுக்கு தெளிவாக விளங்கும்படி ஏற்ற பதில் தருவார்கள். பதில் தந்த மாத்திரத்தில் எதிரிகள் மறுமொழி கூறாது வாயடைப்பு பெற்று விடுவர்.

ஒரு சமயம் உபையிப்னு கலஃப் ஜம்ஹீ, என்பவன் வெகு நாட்பட்ட மண்ணறையிலிருந்து இத்துப்போன எலும்புத் துண்டம் ஒன்றை கையில் எடுத்து வந்து அதனை நபிகள் நாயகம் முன்னில் தனது கை விரல்களால் நசுக்கினான். அது நொருங்கி தூள்களாயின. அதனை அவன் அண்ணலவர் களிடம் காண்பித்து முஹம்மதே! யானும் எனது மூதாதையர் களும் இறந்து மடிந்து இவ்வாறு துகள்களாக ஆன பின்னர் மீண்டும் உயிர்ப்பித்து எழுப்பப்படுவோம் என கூறுகின்றீரே! இது

* நூல்: முஹம்மதுரசூலுல்லாஹ் பக்கம்: 93





பொருளடக்கம்

சாத்தியப்படுமா? இவ்வாறு எவரும் கூறியதில்லையே! எனக் கேட்டான்.

அதற்கு வல்லமை பெற்ற அல்லாஹ் அவர்களது திரு நாவில் இவ்வாறு திருகுர்ஆனுடைய திருவாக்கியாங்களை ஓதிக்காட்டச் செய்தான்.

(ஒன்றுமில்லாது) முதல் முறையாகப்படைத்து உருவாக்கிய அல்லாஹ் மீண்டும் அதனை உருவாக்கி உயிர் கொடுப்பான். மேலும் அவன் அனைத்துப்படைப்புகளையும் நன்கு அறிந்த வனாவான்.**

இப்பதிலைக் கேட்ட மாத்திரத்தில் அந்த "உபையீப்னு" அப்படியே வாயடைப்புப் பெற்று பதில் கூற முடியாது சென்று விட்டான்.

## திருத்தோழர்கள் சீர்மைக்கு துடிதுடிக்கும் செம்மல்

ஹஜ்ரத் அனஸ்(ரலி) அவர்கள் அறிவிக்கின்றனர். அண்ணல் நபியவர்கள் காலத்தில் "அல்கமா" எனும் தோழர் ஒருவர் நோய் வாய்ப்பட்டு விட்டார். நோய் தீராது நோயின் தாக்குதல் உச்சகட்டத்தை அடைந்து விட்டது. அவர் மரணமூச் செடுக்கும் கட்டத்தில் அருகிலிருந்தவர்கள் "லாஇலாஹ, இல்லல்லாஹு முஹம்மதுர்ரசூலுல்லாஹி" எனும் திருக்கலிமா வைக் கூறச் சொல்லி வலியுறுத்தினார்.

அதனைச் செவியுற்ற அவர் அதனைக் கூறமுயன்றார். திருகலிமா கூற நாவு வரவில்லை. அச்சம்பவத்தை ஏந்தல் நபியவர்களிடம் எத்தி வைக்கப்பட்டது. அவ்வமயம் திரு நபியவர்கள் கேட்கின்றனர்.

அவருக்கு தாய்தந்தையர் இருக்கின்றனரா? என்றதற்கு தந்தை மரணித்துவிட்டார். தாய் இருக்கின்றார் என பதில் கூறப் பட்டது. உடனே திரு நபியவர்கள் ஒரு நபரை அவருடைய தாயிடம் அனுப்பி அவரது புதல்வரின் நடவடிக்கை பழக்கவழக்கங்கள் எப்படி இருந்தது என வினவி வரச் செய்தனர்.*

வினவிய தருணத்தில் தாயார் கூறினார், எனது பிள்ளை இன்னென்னவாறு தொழுவார் இப்படி எல்லாம் நோன்பு நோற்பார். ஏகப்பட்ட தர்மங்களை வழங்கு வார். இன்னபல நற்கருமங்களை எல்லாம் செய்து கொண்டிருந்தார் என்று, பதில் கேட்ட பின்பு அவருக்கும் அவரது புதல்வருக்கும் உள்ள

---

** திருகுர்ஆன்: 36/79

* முஹம்மதுர்ரசூலுல்லாஹ் பக்கம்: 94




பொருளடக்கம்

மனோ பாவம் எப்படி இருந்தது என வினவி வரச் சொன்னார்கள் திரு நபியவர்கள். அதற்கு அவரது தாயார் கூறினார், அவருக்கு திருமணம் முடிக்கப்பட்ட பின்பு அவரது சகல காரியங்களையும் அவரது மனைவியின் சொல்லைக்கேட்டே செய்து கொண்டிருந்தார். எனது சொல்லை எப்போதும் அனுசரித்து நடப்பதே இல்லை. ஆதலால் அவர் மீது நான் அருவருப்புக் கொண்டு கோபம் கொண்டுள்ளேன் என்று.

அவ்வமயம் திரு நபியவர்கள் அவரது நாவு திருகலிமா வை கூறுவதற்கு தடையாக நிற்பது இதுவே காரணமாகும் எனக் கூறிவிட்டு, ஹஜ்ரத்பிலால் அவர்களிடம் அவரது தாயாரை அழைத்துவரச் சொன்னார்கள். தாயார் வந்து விட்டனர். அன்னாரை நோக்கி அண்ண லவர்கள் கேட்கின்றனர். மூதாட்டியார் அவர்களே! உமது முன்னில் பெருங் கொண்ட விறகுக்கட்டைகளை அடுக்கி அதில் நெருப்பை மூட்டி பெரும் நெருப்புக்குன்றமாக அதனை ஆக்கி அதில் உமது புதல்வரைப் போட்டு கொழுத்தி எரித்து விட நீர் சம்மதிப்பீரா என்று,

இதனைக் கேட்டதும் அவர் கூறினார் எனது இதயத் துண்டம் அன்பு மகனை அருமை பெருமையாக பெற்றெடுத்து வளர்த்த திருமகனை நான் அவ்வாறு செய்ய சம்மதிப்பேனா? அறவே சம்மதிக்க மாட்டேன் என்றார்.

அது சமயம் திரு நபியவர்கள் அவரைப்பார்த்து, அம்மையாரே! உமது புதல்வரை இறைவன் மன்னித்து நரக நெருப்பிலிருந்து விடுவித்துக் கருணை செய்ய நீர் மன விருப்பப்பட்டால் அவர் குறையை நீர் மன்னிக்க மன விருப்பம் கொள்வீரா? என எடுத்துரைத்துவிட்டு கூறினார்கள்.

நீர் அவர் மீது கோபங்கொண்டு இருக்கும்வரை இறை வன் மீது ஆணையாக கூறுகின்றேன் அவரது தொழுகையும் அவருக்கு பயன் தராது அவரது நோன்பும் அவருக்கு உதவாது அவர் நிறைந்து செய்த தானதர்மமும் மற்றுமுள்ள நற்செயல்களும் அவருக்கு துணைபுரியாது என்று,

அவ்வமயம் அந்த அவ்வம்மையார் தனது இருகரங் களையும் ஏந்திக் கொண்டு கூறுகின்றார். இறைவனே! உனது திருவடியில் உனது திருத்தூதர் திரு நபியவர்களையும் இங்கு அமர்ந்திருப்போர் அனைவரையும் சாட்சியம் வைத்துச் சொல்கின்றேன். நிச்சயமாக நான் எனது புதல்வர் மீது விருப்பப்பட்டு அவரது குறைகள் அனைத்தையும் மன்னித்து மனப்பொருத்தம் கொண்டு விட்டேன் என்று பிராத்தித்தார்.

அது சமயம் அண்ணலவர்கள் இவ்வம்மையார் தங்கள் முன்னில் ஒருக்கால் நாணப்பட்டு நடிப்புக்காக இவ்வாறு நடந்திருக்கலாம் என கருதி திருத்தோழர் பிலால் அவர்களைக் கண்ணோக்கி பிலாலே நீர் சென்று அந்த மரணப்படுக்கையில் உள்ள திருத்தோழர் அல்கமாவுக்கு நாவில் திருக்கலிமா மொழிவதற்கு இப்போது வருகின்றதா என கவனித்து வாரும் என கூறி அனுப்பி வைத்தனர். அதனை அறிந்து வர ஹஜ்ரத் பிலால் அவர்கள் திருத்தோழர் அல்கமாவின் வீட்டின் பக்கல் ஓடோடிச்சென்று வீட்டு வாசலை அடைகின்றனர்.

அது சமயம் ஹஜ்ரத் அல்கமா அவர்கள் திருக்கலிமா வை உரத்தகுரலில் ஒலித்து ஓதிக்கொண்டிருப்பது தெளிவாக ஹஜ்ரத் பிலால் அவர்கள் செவியில் வீழ்ந்ததை செவியுற்று திரு நபியவர்களிடம் வந்து தெரிவித்தனர்.

இச்சம்பவத்தில் திரு நபியவர்கள் திருத்தோழர் அல்கமா வின் மீட்சிக்கு பேராசைப்பட்டதுடன் தனது உம்மத் கூட்டத்தா ரின் முன்னில் தாய் குலத்தின் தனிச்சிறப்பும் அவர்களுக்குச் செய்ய வேண்டிய கடமையும் பெறுப்பும் எந்த அளவு சார்ந்திருக்கின்றது என்பதையும் எடுத்துக்காட்டிவிட்டனர்.

## ஆற்றல் மிக்க அரசியல் திறனும் மாபெரும் மன்னிப்பும்

திரு நபியவர்கள் தங்கள் திருப்பணியான இஸ்லாமிய நற்போதனையில் இறங்கி ஏறத்தாழ இருபத்திமூன்று ஆண்டு கள் அரும்பாடுபட்டனர். சொல்ல முடியாத துயரங்களுக்கும் துன்பங்களுக்கும் இலக்காகி பற்பல போர் முனைகளையும் சந்தித்து இறுதியில் இறைவன் ஈடு இணையற்ற மாபெரும் வெற்றிகரமான மக்காவின் வெற்றியைத் தந்தான்.

பத்தாயிரம் படைகள் புடைசூழ திரு நபியவர்கள் திரு மக்காவை நோக்கி வந்து கொண்டிருக்கின்றனர் இப்பிரவேசத் தை ரகசியமாக மறைந்து நின்று பார்த்துக் கொண்டிருந்த அபூசுஃப்யான், நேற்றுவரை ஏன் சற்று முன்பு வரை இஸ்லாத் திற்கு எதிராக சகலகாரியங்களிலும் போர் முனைகளிலும் தலைமை தாங்கி திரு மதீனா மீது பலமுறை அடுத்தடுத்து தாக்குதல் செய்த அந்த அபூசுஃப்யான், திரு நபியவர்களை ஒழித்துக்கட்ட ரகசியமாக பற்பல சதித்திட்டங்களை உருவாக்கிய அந்த அபூசுஃப்யான், அவர் நடந்து கொண்ட அடாதடிச் செயலுக்கு பிரதியாக போர் வாளுக்கு இறையாக்கப்பட வேண்டிய அந்த அபூசுஃப்யான், பிடித்துக் கொண்டு வரப்பட்டு அருள்வடிவம் அண்ணல் நபிகள் நாயகத்தின் முன்னில் கொண்டு வந்து நிறுத்தப்படுகின்றார்.


பொருளடக்கம்

கருணையே உருவெடுத்த அந்த காருண்யக்கடல் திரு நபியவர்கள் பார்வை அந்த மாபாவி அபூசுஃப்யான் மீது பட்டதும் அவன் செய்த செயல்கள் அனைத்தையும் அப்படியே ஒதுக்கிவிட்டு இரக்க உள்ளம் கொண்டு சொல்கின்றனர்.

அபூசுஃப்யானே! நீர் செய்த அடாத செயல்கள் அனைத்தையும் நான் தள்ளிவிட்டு உன்னை நான் மன்னித்து விட்டேன் இறைவனும் மன்னித்தருள்வானாக! அவன் மாபெரு ங்கருணையாளனாக இருக்கின்றான் என்று.

கிஞ்சிற்றும் எதிர்பாராத இந்த அருள்அறிவிப்பு அபூசுப்யான் உள்ளத்தில் ஓர் புதுமைப்புயலை தோற்றுவித்துவிட்டது.

அன்று திரு நபியவர்களின் திரு மக்காவின் மீது எடுத்த இந்த படையெடுப்பு, இப்பிரவேசம், எதிரிகளைப்பழிவாங்கும் நோக்குடன் இருக்கும்,* ஏனைய அரசர்கள் போர்வீரர்கள் சேனைத்தளபதிகள் போன்று அகந்தை கொண்டவர்களாகத் தான் இருப்பர் என்று நினைத்த அபூசுஃப்யான் அவரது நினைப்புக்கள் அனைத்திற்கும் முற்றுப்புள்ளி வைத்து திகைப் படைகின்றார். அனைத்திற்கும் மேலாக தனக்கு மன்னிப்பு வழங்கப்பட்டு உரிமை முத்திரை வைக்கப்பட்டது ஓர் சிந்தையைக் கிளரும் விந்தையாக இருந்தது.

இம்மாபெரும் மன்னிப்பு அவர் புனித இஸ்லாத்தை ஏற்க காரணமானதாகி இஸ்லாமியப்போர் வீரர்களான திருத்தோழர் களுடன் சேர்ந்து, பீடு நடைபோட்டுச் செல்லும் திரு நபித்தோழ ராகும் நற்பேற்றையும் பெற்றுவிட்டார்.

திருநபியவர்களும் திருத்தோழர் பெருமக்களும் திரு மக்காவில் பிரவேசிக்கின்றனர். அங்கு அமைந்துள்ள புனித கஃபா ஆலயம் அன்று முன்னூற்றி அறுபது விக்ரஹங்களால் நிரப்பப்பட்டு இருந்தது. அத்தனையும் அகற்றி அதனைத் தூய் மைப்படுத்தி ஏக இறைவணக்கத்திற்கு ஏற்றதாக ஆக்குவதை தங்கள் கடமைகளில் முதற்கடமையாகக் கண்டனர்.

உடனடியாக அத்தனையும் அகற்றி முடித்து தக்பீர் முழக்கத்துடன் அதனுள் நுழைந்து வெளி வந்து அவ்வால யத்தை வலம் சுற்றி முடித்து "மகாமுஇப்றாஹீம்" எனுமிடத்தில் இறைவனுக்காக இரண்டு ரக்அத்துகள் நபிலாக தொழுது முடித்தனர். பின்னர் அரியதோர் சொற்பொழிவை இவ்வாறு நிகழ்த் தினர்.

பொருளடக்கம்

* நூல்: முஹம்மதுர்ரசூல்லாஹ் பக்கம்: 96

ஏகவல்லமை கொண்ட அல்லாஹ் ஒருவனைத் தவிர்த்து வேறு இறைவன் எவருமில்லை. அவனுக்கு ஈடுஇணை ஒருவரும் இல்லை. அவன் தனது அடியாருக்கு நல்லுதவி செய்து அவரை எதிர்த்த அத்தனை கூட்டத்தாரையும் தனிமையில் நின்று தோற்கக்கடிக்கச் செய்தான்.

ஜனங்களே! செவிமடுத்துக்கேளுங்கள் திரு கஃபாவின் நிர்வாகம், ஹாஜிகளுக்கு புனித ஜம்ஜம் நீர்வார்த்தல் இவ் விரண்டும் நீங்கலாக, கொலைக்குக் கொலை பழிக்குப்பழி வாங்கும் அந்த இழிவுக்குணம் அத்தனையும் எனது கால் களின் கீழ் போட்டு புதைத்துவிட்டேன்.

குரைஷியர்களே! உங்களின் அந்த அறியாமைக் காலத்தினுடைய அகம்பாவக்குணம், வம்சப்பெருமை அத்தனை யும் இறைவன் அழித்துவிட்டான். நீங்கள் அனைவரும் ‘‘ஆதிமனிதர் ஒரே ஆதமுடைய மக்களாவீர் அவர்கள் மண்ணால் படைக்கப்பட்டவர்கள்’’. என எடுத்துரைத்துவிட்டு, திருகுர்ஆன் திரு வசனங்களை இவ்வாறு எடுத்தோதினார்கள்.

‘‘மனிதர்களே! நீங்கள் அனைவரும் ஒரு ஆண் ஒரு பெண் இருவர் மூலமாக படைக்கப்பட்டுள்ளீர்கள் நீங்கள் ஒருவருக்கொருவர் புரிந்து கொள்வதற்காக உங்களை பல குடும்பத்தினர்களாக கோத்திரர்களாக அமைத்துள்ளோம். உங்களில் எவர் இறைவனை மிக்க அஞ்சி நடப்பவராக இருக்கின்றாரோ அவரே அவனிடம் நற்சிறப்பு பெற்றவராவார். நிச்சயமாக அல்லாஹ் அத்தனையும் நன்கு அறிந்தவனாகவும் புரிந்தவனாகவும் இருக்கின்றான்’’.*

இப்பேருரையின்போது அந்த குரைஷியர்களின் மாபெரும் தலைவர்களும் அங்கு தென்பட்டனர். இஸ்லாத்தை அடியோடு அழித்து மட்டப்படுத்தத் திட்டம் தீட்டியவர்களும் அங்கு இருந்தனர்.

புனித இஸ்லாத்தை ஏற்ற திருத்தோழர்களை நிர்பந்தமாக நாடு துறக்கச் செய்ய வைத்து அவர்களின் உடமைகள் பொருள்கள் செல்வங்கள் அனைத்தையும் சுபகரிப்பு செய்த பேராசைப்பித்தர்களும் அங்கு கூடியிருந்தனர்.

திரு நபியவர்களை விஷவார்த்தைகளால் வசை மொழி கூறி நடைபாதையில் அசுத்தங்கள் குப்பை கூழங்களைக் கொட்டி அடாத செயல்களை விடாது செய்த உருவங்களும் அங்கு உலாவின.

---

* திருகுர்ஆன் 49:13



பொருளடக்கம்

அல்லும் பகலும் அண்ணல் நபியவர்களை அழித்துக் கட்ட கங்கணம் கட்டிய கயவர்களும் அங்கு தென்பட்டனர். ஏன்! அண்ணல் நபியவர்களின் அருமை சித்தப்பா வைக் கொன்று குவித்து குடலை உறுவி நெஞ்சத்தைப்பிளந்து ஈவு இரக்கமின்றி ஈரலைக்கடித்து உமிழ்ந்த அதிஈனப் பிறவியும் அங்கு நின்று கொண்டிருந்தது.

வணங்கப்படத் தகுந்தோன் அதற்கு உரித்தானவன் அல்லாஹ் ஒருவனே. அவனுக்கு ஈடு இணை எவருமில்லர் என்ற இந்த ஒரு சொல்லைச் சொன்னதற்காக எத்தனையோ உத்தம தோழர்களின் உன்னத உயிரைக் குடித்த வெறியர்களும் அங்கு தோற்றமளித்தனர்.

அத்தனை நபர்களையும் அண்ணலவர்கள் ஏகமாக அறிவளைத்து பார்த்து முடித்துவிட்டு கேட்கின்றனர். நான் இன்று உங்களுடன் எவ்வாறு நடந்து கொள்ள இருக்கின் றேன்? என்று, இச்சொல்லைக் கேட்டதும் எல்லோருடைய நாவுகளிலிருந்தும் ஏகமாக பதில்கள் வருகின்றன. தாங்கள் எங்களின் சிறப்புக்குரிய சகோதரர். இன்னும் சிறப்புமிக்க எங்கள் சகோதரரின் புதல்வருமாவீர் என்று.

இதனைக்கேட்டதும் கருணை நபியவர்களின் திருவாயி லிருந்து வெளிவந்த சொற்களாகின்றது.

"இன்று நான் உங்கள் மீது எவ்வித நடவடிக்கையும் எடுக்க மாட்டேன். நீங்கள் அனைவரும் இன்று ஏகமாக விடுதலை பெற்று விட்டீர்கள். இதனை கேட்ட அனைவரும் தாங்கள் நாட்டை பிடித்து மக்களை ஆட்டிப்படைக்கும் நாடு பிடிக்கும் பித்தரல்லர். தங்களின் இந்த ஏக இறைவணக்க அறிவிப்பு முழுக்கவும் மெய்யானதே. உண்மையில் தாங்கள் இறைவனின் திருத்தூதராவீர்கள். தங்களின் நற்போதனைகள் யாவும் சத்தியபோதனைகளே!" என்று கூறினர்.

திரு நபியவர்கள் விடுத்த இந்த ஈடற்ற அற்புதமன்னிப்பு ஒரு சாதாரணமானது என நாம் எண்ணி முடிவுகட்ட முடியாது. இது ஒரு மாபெரும்வல்லமை கொண்ட அரசியல் திறன் கொண்ட திட்டமாகும் திரு நபியவர்கள் இத்திட்டத்தின் மூலம் மக்காவையும் அதில் வாழும் மக்களை மட்டும் வெற்றி கொள்ளவில்லை. ஏன்! அதற்கும் மேலாக மக்காவில் வாழும் மக்களின் உள்ளங்களையும் வெற்றி கொண்டு விட்டனர், என்பதுதான் அற்புதம்.

ஆதலால் பல்லாயிரக்கணக்கான மக்கள் கூட்டம் கூட்டமாக வந்து புனித இஸ்லாத்தை ஏற்கும் நற்பேறு பெற்று விட்டனர்.

"இறைவனுடைய நல்லுதவியும் மக்காவின் வெற்றியும் வந்தபோது இறைவனின் திரு வழியான தூய இஸ்லாமிய சன்மார்க்கத்தில் நபியே! மக்கள் கூட்டம் கூட்டமாக வந்து நுழைவதை நீர் காண்பீர்."*

உலகத்தாரை படைத்து பரிபாலிக்கும் எல்லாம் வல்ல அல்லாஹுவுக்கே எல்லாப்புகழும். ஆமீன்!!!

**அல்லாஹும்ம ஸல்லி அலாரசூலிக**

**சையிதினா முஹம்மதின வ அலா**

**ஆலிஹி வ ஸஹ்பிஹி வஸல்லிம்**

வல்ல அல்லாஹுவே உனது தூதர் முஹம்மது(ஸல்) அவர்களின் மீதும் அவர்கள் குடும்பத்தார்கள், அவர்கள் திருத்தோழர் மற்றும் அனைவர்கள் மீதும் உனது கருணையும் சாந்தியும் என்றும் உண்டாவதாக. ஆமீன்.



Compiled by:
DANCING FINGERS computer services centre,
5, Manjanakara Street, CUMBUM - 625516.
☎: 04554 - 23650
email: bary@sancharnet.in

பிஸ்மிஹி த ஆலா
(ஷமாயிலு முஹம்மதின் (ஸல்))

# கண்மணி! நபிகள் நாதரை காண்போம் வாரீர் !!

## அண்ணல் நபிகளின் அழகுத்தோற்றம் அருமைக் குணங்கள் !!!



தொகுப்பு

பேராசிரியர் மௌலவி காரிஃ
ஹாஜி. P.A. மீர் முஹம்மது பாக்கவி
கம்பம்.



பொருளடக்கம்

# பொருளடக்கம்

# முகவுரை

"இறைதூதர் நபி முஹம்மது(ஸல்) அவர்கள் மூலமாக உங்களுக்கு அழகிய முன்மாதிரி, உண்டாயிருக்கின்றது."

**திருகுர்ஆன் : 21—33**

எல்லாம் வல்ல அல்லாஹ் தனது இறுதி தூதராக திருநபி முஹம்மது (ஸல்) அவர்களை, அனைத்துலக மக்களுக்கும் ஏகமாக அனுப்பி வைத்து அந்த உத்தம நபிகளின் சத்திய வழிபாடுகள் ஊண், உறக்கம், உடை, நடை முறைகள், புன் முறுவல் முதற்கொண்டு பொன்னானபேச்சாற்றல், அடக்கம், ஒழுக்கம், அமைதி, எளிமை, தாழ்வு மனப்பான்மை, அரசியல் அமைப்பு மனிதஉரிமை, நல்லிணக்கம், சமுதாய நேசபாசம், அணங்குகளின் அரவணைப்பு, அனாதைகளின் அபயமளிப்பு, மனித உரிமை, நல்லிணக்கம் அனைத்தையும் ஒரு முழுமை திரட்டாக அமைத்து உலகமக்களுக்கு முன் மாதிரியாக ஆக்கி உள்ளான்.

அண்ணல் நபியவர்களின் அங்க அழகு முதற்கொண்டு அனைத்துப் பண்புகளையும் ஒருங்கே அமைத்து அரபி, உர்தூ, தமிழ் போன்ற மொழிகளில் அநேக நூற்கள் வெளிவந்துள்ளன. அந்நூற்களில் இந்நூல் வாசகர்களின் இதயங்களில் தயக்கம், தடங்கல் சோர்வு ஏற்படாத வகையில் சரளமாக முத்துக்கோர்த்தாற் போன்று வடிவமைக்கப் பட்டுள்ள தாகும்.

இந்நூலுக்கு ஆதாரமாக விளங்கிய நூற்கள் அனந்தம் அவைகளில்,

**மவாஹிபுல்லதுன்னீ**
**ஸீரதே நபவிய்யி**
**முஹ்ஸினே, இன்சானிய்யத்**
**ஷமாயில் திர்மிதீ.**

போன்றநூற்கள் குறிப்பிடத்தக்கவைகளாகும். வாசகர்கள் இதனைப்படிக்கும்போது அண்ணல் நபியவர்களின் திருஉருவம் சற்குணங்கள் உங்கள் முன்னில் முழுமையாக நடமாடுவது போன்று தென்படும்.

வல்ல ரஹ்மான். இந்நூலின் வாயிலாக உங்களுக்கும் எனக்கும் நல்லருள் புரிந்து அவனது அளப்பெரும் கருணைக்கும், அண்ணல் நபியவர்களின் அருமை ஷபாஅத் திற்கும் உரித்தானவர்களாக ஆக்க நற்கிருபை செய்வானாக ! ஆமீன். **நூலாசிரியர்— P.A. பீர்முஹம்மது பாக்கவி, கம்பம்.**





பொருளடக்கம்

JUSTICE A. ABDUL HADI
(Former Judge, Madras High Court)

Phone: 4402750
Apartment 3B, Third Floor,
Old No.28, I Main Road,
Gandhi Nagar, Adyar,
Chennai - 600 020

# அணிந்துரை

Date: 26.11.2000

என்னுடைய சிறிய வயதில் இந்நூலின் ஆசிரியராகிய கண்ணியத்திற்கும், எனது அன்புக்கும் உரிய ஹஸரத் அவர்களிடம் முதன்முதலாக நான் அரபி கற்க ஆரம்பித்தேன்.

அவர்கள் தங்களின் தற்போதைய தள்ளாத வயதில் உடல் நலம் சரியில்லாத நிலையில் இந்நூலைத் தொகுத்து வெளியிட முன் வந்திருப்பது கண்மணி நபிகள் நாதர் (ஸல்) அவர்களின்மீது அவர்களுக்குள்ள அளவற்ற அன்பையே காட்டுகிறது.

அவர்களைவிட நான் அண்ணல் நபி அவர்களின் அழகுத் தோற்றம், அருமைக் குணங்கள் முதலியன பற்றித் தெரிந்த வனல்லன். அதனால் அவர்கள் இந்நூலுக்கு அணிந்துரை எழுதக் கேட்டுக் கொண்டபோது தயங்கினேன். எனினும் அவர்களின் மீதுள்ள பிரியத்தினால் ஏற்றுக்கொண்டேன்.

நாயகம் (ஸல்) அவர்கள் தோற்றத்திலும், நற்குணங்களிலும் முழுமை பெற்றவர்கள். இறைவனும் தனது திருமறையில் "நிச்சய மாக நீர் மகத்தான நற்குணத்தின் மீது இருக்கின்றீர்" எனக் கூறு கிறான் (68:4). அதனால்தான் அவன் அல்லாஹ்வுடைய தூதரிடத் தில் அழகிய முன்மாதிரி திட்டமாக இருக்கிறது. (33:21) எனவும், அனைத்து உலகத்தினருக்கும் அருளாகவே தவிர (நபியே) உம்மை நாம் அனுப்பவில்லை (21:107) எனவும் தனது மறையில் மேலும் குறிப்பிடுகிறான். இத்தெய்வீக வாசகங்களுக்குப் பொருத்தமாக எவ்வாறு பெருமானார் (ஸல்) அவர்கள் அமைந்திருந்தார்கள் என்பதைப் படிப்போர் கவனத்தைக் கவரும் வகையில் ஆசிரியர் அவர்கள் இந்நூலை எழுதியுள்ளர்கள்.

எல்லாம் வல்ல இறைவன் ஹஸரத் அவர்களுக்கு இவ்வுலகி லும் மறுஉலகிலும் நல்வாழ்வு அளிக்க மனமார வேண்டிக்கொள் கிறேன். எனக்காகவும் ஹஸரத் அவர்களின் மேலான துஆவை வேண்டி நிற்கிறேன்.

இப்படிக்கு,

(A. அப்துல் ஹாதி)





பொருளடக்கம்

**Hajee K. Zia-ud-Din Ahamed M.A., B.L.,**
Joint Managing Director
K.C.P.M.C.Ltd, Thekkady, Kerala.
Ex. President Vaver Pallivasal
Cumbum.

26, Kulakkaran Street,
Cumbum - 625516
Theni Dt.
Ph: 21636

Date: 8.5.2001

# அணிந்துரை

இந்நூலை ஆக்கிய ஆசிரியர் பெருந்தகை, ஹஜ்ரத் அவர்கள். சுமார் மூன்று தலைமுறைகளுக்கு அல்லாஹ்வையும், அவனது திருத்தூதர் அவர்களையும், அவனது திருக்குர்ஆனையும் எங்களுக்கு காண்பித்து தந்தவர்கள். தங்களின் முதிர்ந்த வயதில் முத்து நபியின் அற்புத குணங்களையும் அருள் தோற்றத்தையும் மிகத் தத்ரூபமாக படம்பிடித்துக் காட்டும் புனித முயற்சியில் ஈடுபட்டுள்ளார்கள். அதில் உண்மையாக வெற்றி பெற்றுள்ளார்கள் என்றுதான் கூற வேண்டும். இந்நூலின் ஒவ்வொரு அத்தியாயமும் திருநபி அவர்களை நம் கண்முன் காட்டித் தருவதை வாசகர்கள் மறுக்க முடியாது. "அண்ணல் நபிகளாரின் அற்புதத் தோற்றமும் அவர்களின் வாழ்வு முறைகளும்" நம்மை அதே புனிதப் பாதையில் இட்டுச் செல்லும் என்பது திண்ணம்.

இத்தகைய பெருமுயற்சியில் அவர்கள் திருத்தூதர் பற்றிய அரபி, உருது, பார்ஸி மற்றும் வேறுபல மொழிகளில் உள்ள ஆதாரங்களைத் திரட்டி அற்புதமாகக் கோர்த்து வழங்கியுள்ளார்கள்.

இந்நூல் எல்லா சமூக மக்களும் அண்ணலாரைத் தெளிவாகக் கண்டு உணர்ந்து கொள்ளச் சிறந்த வழிகாட்டியாகும். இதனைத் தொகுத்தாக்கிய ஹஜ்ரத் அவர்கள் நீண்ட ஆயுளும், நிறைவான உடல் நலமும் பெற்று, தீன் சேவையாற்றி சமூகத்திற்குத் தங்களை அர்பணிக்கும் புனிதப் பணியில் நிறைவு பெற்றிட எல்லாம் வல்ல அல்லாஹ்வை இறைஞ்சியவனாக.

அன்புடன்,

K. ஜியாவுத்தீன் அகமது,

கம்பம்.

**M. MOHAMED IBRAHIM (Rtd. Teacher)**
Treasurer ROA, Uthmapalayam TK.
Joint Secretary Vaver Pallivasal.
Cumbum

61A, Sungam St,
Cumbum - 625516,
Theni Dt. Ph: 23742.

Date: 15.06.2001.

# அணிந்துரை

அலகில் அருளும் அளவில் அன்பும்
இலகுமோர் இறையின் இனிய பெயர்போற்றி

"எவர் தம்மை இறைவனிடம் முழுமையாக ஒப்படைத்து, செயல் அளவிலும் நன்னடத்தையை மேற்கொள்பவராய் இருக்கின்றாரோ அவருக்குரிய நற்கூலி இறைவனிடம் அவருக்கு உண்டு. மேலும்அத்தகையவர்களுக்கு எவ்வித அச்சமும் இல்லை. அவர்கள் துயரப்படவும் மாட்டார்கள்".

அல்குர்ஆன் - 2:112

"அல்லாஹ்வையும், மறுமை நாளையும் உறுதியாக நம்புகின்ற உங்களுக் குரிய அழகிய முன்மாதிரி நிச்சயமாக அல்லாஹ்வின் தூதரிடமே இருக்கிறது".

அல்குர்ஆன் சூரா அஹ்ஜாப் - வசனம் : 21

"என்னைப்பற்றிய சிறிய விஷயமாயினும் அறிமுகப்படுத்துங்கள் - இது அண்ணல் நபி (ஸல்) அவர்களின் அறிவிப்பாகும்.

மேற்குறிக்கப்பட்ட அறிவுரைப்படி தம் தள்ளாத வயதிலும் தளராத உள்ளத்தால் அல்லாஹ்விடம் தம்மை ஒப்படைத்து, ஆலம் நபி அவர்களை இவ்வுலகிற்கு அறிமுகம் செய்கின்ற எனது ஞானகுருவும் எனது பல்லறிவுக்கு பாலப் பருவத்தில் பாலூட்டிய என் ஆசானும், கம்பம் ஹஸனாத்துல் ஜாரியாத் அரபி மதரஸா பேராசிரியரும், கம்பம் வாவேர் பள்ளியின் முன்னாள் தலைமை பேஷ் இமாமும், பல்லோர் பயன்பெற பன்னூல் படைத்த பன்னூல் ஆசிரியர் மௌலவி கவிஞர். காரி ஹாஜி P.A. **பீர்முகம்மது பாகவி** அவர்கள் தொகுத்து வெளியிட்ட "**கண்மணி நபிகள் நாதரைக் காண்போம் வாரீர்!** அண்ணல் நபிகளின் அழகுத் தோற்றமும், அருமைக் குணங்களும்!!" என்ற நூலைப் படித்துணரும் வாய்ப்பைப் பெற்றேன்.





பொருளடக்கம்

அண்ணல் நபிகளார் அவர்களின் அங்க அடையாளங்கள், அசைவு, பேச்சு, நடை, உடை, நகைச்சுவை, ஆற்றிய பணிகள், அறிவுறுத்துகின்ற ஆணைகள், அனைத்தையும் இதுவரை எவரும் தொகுத்திராதபடி பல நூல்களின்ஆதாரம்கொண்டு நூல் வெளி யிட்டுள்ளார்கள். நூலைப் படிக்கின்ற நேரத்தில் நேரிலே நபிகளா ரைக் கண்ட ஸகாபாக்கள் (தோழர்கள்) போல நாமும் ஆய் விடுகிறோம்.

தாம் கற்ற கல்விதனை பிறர் பயின்று பயன் பெற்று இறையன்பு பெற்றிடவும், எம்பெருமான் அவர்களை அறிந்திடவும் தன் வாழ்நாளை அற்பணித்து வரும் பெருந்தகை எமது ஆசான் அவர்களுக்கு, நீடித்த ஆயுளையும், நோவில்லா வாழ்வையும், அளிப்பதோடு அவர்கள் குடும்பத்தார் அனைவருக்கும் நற்பாக் கியங்களை அளித்திட எல்லாம் வல்ல அல்லாஹ்விடம் மேலும் நூல்கள் வெளிவர பிரார்த்திக்கிறேன்.

இவ்வனர்

முன்னாள் மாணவர்,

M. முகம்மது இப்ராஹிம்.



பொருளடக்கம்

# நன்றியுரை

எல்லாம் வல்ல அல்லாஹ்வின் நல்லருளால் திருகுர்ஆனுக்கு யான் பணி செய்யும் நந்நோக்கில் சமுதாய மனித நேயத்தை அடிப்படையாகக் கொண்ட **"குர்ஆன் கூறும் குணப்பண்புகள்"** என்ற தலைப்பில் ஒரு நூல் வெளி வந்துள்ளதை வாசகர்கள் நன்கறிவர்.

அடுத்தபடியாக திரு நபி (ஸல்) அவர்களுக்கு பணி செய்யும் நந்நோக்குடன் அண்ணல் நபிகளின் அழகுத் தோற்றமும், அருமைக் குணங்களும் அடங்கியப், **"கண்மணி நபிகள் நாதரைக் காண்போம் வாரீர்..."**

என்ற தலைப்பில் உள்ள இந்நூலின் மூலப்பிரதியை ஆழ்ந்து படித்து அணிந்துரைகள் வழங்கிய எமது உள்ளன்புக் குரியவர்களான,

சென்னை மாநகர உயர்நீதிமன்ற முன்னாள் (ஜஸ்டிஸ்,) நீதிபதி கம்பம் ஜனாப் அல்ஹாஜ் A. **அப்துல் ஹாதி** B.Com., (Hons) அவர்களுக்கும், உத்தமபாளையம் ஹாஜி கருத்தராவுத்தர் கௌதிய்யா கல்லூரியின் முன்னாள் பேராசிரியர் கம்பம் ஜனாப். அல்ஹாஜ் K. **ஜியாவுத்தீன் அஹம்மது** M.A.B.L. அவர்களுக்கும்,

இதனை ஆழ்ந்து படித்து தமிழ்வார்த்தைகளில் பிழை திருத்தம் செய்து தந்த கம்பம் புனித அல்போன்ஸ் பள்ளி முன்னால் ஆசிரியரும் சிறந்த கவிஞரும், எனது மாணவமணியுமாகிய M. **முஹம்மது இப்ராஹீம்** (ஒய்வு ஆசிரியர்) அவர்களுக்கும் எமது உள்ளம் நிறைந்த நன்றியும் துஆவும் உரித்தாகுக.

இந்நூல் வெளியீட்டுக்கு முழுமையாக ஊக்குவித்து ஒத்துழைத்த கம்பம் **"மதரஸத்துல் நிஸ்வான் பைஜூல் பரக்காத்"** தாளாளர் அவர்களுக்கும், அவர்கள் குடும்பத்தார் களுக்கும் எனது உளங்கனிந்த நன்றியும், துஆவும் உரித்தாக வேண்டிக் கொள்கிறேன்.

வஸ்ஸலாம் (வரஹ்).

இவ்வண்,
**P.A. பீர்முகமது பாகவி,**
கம்பம், தேனி மாவட்டம்.





பொருளடக்கம்

# உங்கள் பார்வையின் முதல் நோக்கு

**உத்தமநபி. முஹம்மது (ஸல்) அவர்களைப்பற்றி சித்தம் மகிழ சிந்தனை செய்யுவும் வெண்மதி போன்ற அவர்களின் திரு வதன அழகையும் பங்கமற்ற அங்க அவயங்கள் அமைப்புகள் பற்றியும் தெரிந்துகொள்ள நீங்கள் முற்படும் இத்தருணத்தில்,**

உலகில் தோற்றுவிக்கப்பட்ட ஒப்பற்ற தீர்க்கதரிசியர்கள் முதற்கொண்டு மற்றுமுள்ள உலகத்தலைவர்கள் வரை இம்மை, மறுமை சம்பந்தப்பட்ட அனைத்து அமைப்புகளிலும், சகலதுறை களிலும், சகலகோணங்களிலும் முழுமையான வெற்றி இலக்கை எட்டிப்பிடித்தவர்களில் முதலவர், முதன்மையானவர், ஒப்பற்ற உத்தமர், உயர் நபி, முஹம்மது(ஸல்) அவர்கள்தான் என்பதில், ஏகோபித்த கருத்திற்கு இணக்கமாகி, விட்டவர்கள் பற்றி நீங்கள் கண்ணுறப் போகின்றீர்கள்.

முதலிடம் பிடித்து வெற்றிகொண்டவர்கள் அண்ணல் நபியவர்கள் தான் என்பதற்கு நற்சாட்சியமாக எடுத்துக் காட்டிய பற்பல வரலாற்று ஆசிரியர்கள் உள்ளனர் அவர்களில் உள்ளதை உள்ளபடி எதையும் ஒழிவு மறைவின்றி எடுத்துக்காட்டியவர் களில் முதலிடம் வகுப்பவர் அமெரிக்க நாட்டைச் சார்ந்த வரலாற்று ஆசிரியர் மைக்கேல் ஹார்ட் என்பவர். அடுத்தபடி ஆங்கில எழுத்தாளர் வரலாற்று ஆசிரியர் தாமஸ்கார்லைல் திரு நபிகள் பற்றி எழுதும்போது “திரு நபியவர்கள் உலகத் தீர்க்கதரிசிகளில் மாபெரும் படைத்தளபதியும் மாபெரும் வீரருமா வர்” என எழுதியுள்ளார். வரலாற்றுப் பேராசிரியர் மைக்கேல் ஹார்ட் என்பவர் சமீபகாலத்தில் நூல் ஒன்றை வெளியிட்டிருந் தார், அந்நூலின், தலைப்பு “நூறு” என்பதாகும். அதாவது உலகத்தில் தோன்றிய உத்தமநூறு தலைவர்களில் முதலிடம் வகித்தவர்.

மைக்கேல் ஹார்ட் ஒரு சிறந்த கிருஸ்தவ குடும்பத்தில் பிறந்தவர், சிறந்த விஞ்ஞானி. ஆனால் அவர் உலகத் தலைவர்கள் பற்றிக் குறிப்பிடும் போது ஹஜ்ரத், ஈஸா அலைஹிஸ்ஸலாம் பற்றி குறிப்பிட்டு முன்னிறுத்தவில்லை, சிறந்த ஸைன்டிஸ்ட் நியூட்டனைப்பற்றியும் அவருக்கு முதலிடம் அளிக்கவில்லை. நீதி, நேர்மை, உள்ளம் கொண்ட அந்த சத்தியதிருமகன், அண்ணல்நபி முஹம்மது(ஸல்) அவர்களைப் பற்றி தீர்க்க ஆராய்ந்து குறிப்பிடும் போது அவர்களுக்கே இம்மை மறுமைபட்ட சகல கோணங்களிலும் “உலகத் தலைவர் கள் மத்தியில் முதல் மனிதராவர்” எனக் குறிப்பிட்டுள்ளார் என்பதை வாசகர்களாகிய நீங்கள் அறிந்து கொள்வீர்களாக !

மேலும், நீங்கள் உங்கள் மனக்கண் முன்னில் இவ்வாறு கேள்விகள் நடமாடி நடைபோடலாம். பேராசிரியர் மைக்கேல் ஹார்ட் திருநபியவர்கள் விசயத்தில் எந்தெந்த கோணத்தில் பார்த்து எடைபோட்டு இந்த முடிவுக்கு வந்திருக் கலாம் என்று, வாருங்கள் நடைபோடுவோம்.

1. சன்மார்க்க கண்ணோட்டத்தில் மனிதன் முதற்கொண்டு மற்றுமுள்ள படைக்கப்பட்ட அனைத்தின் வழிப்பாட்டை விட்டும் படைத்தோன் ஒருவனையே வணங்க வேண்டும் எனும் திசைதிருப்பத்தை உண்டாக்கியவர் யார்?

2. அனாச்சாரம், மவ்டீகம், மூடநம்பிக்கையை விட்டும் பகுத்தறி வின் சத்திய வழியின் பக்கம் திருப்பியது யார்?

3. அறிவாற்றலால் தோற்றுவிக்கப்பட்ட விஞ்ஞானத்திற்கு வணக்க வழிபாடு செய்யாது, அறிவாற்றலை தோற்றுவித்த சகல வல்லமை படைத்த அல்லாஹ்வையே வணங்குவதற்கு வகை செய்தவர் யார்?

4. முடியாட்சிக்கு முடிவுகட்டி ஜனநாயக அரசியல் அமைப்பைத் தோற்றுவித்து கிலாபத் ஆட்சி முறையை அமைத்தது யார்?

5. கற்பனை எனும் சிந்தையை விட்டு அறிவின் அடிப்படை யின் பக்கம் திரும்பச் செய்தது யார்?

6. சமுதாய கட்டுப்பாடு வளர்ச்சியில் அநீதி தாண்டவமாடாது நீதியை நிலைப்படுத்தியவர் யார்?

7. விதவா திருமணத்திற்கு முதல் வித்திட்டவர் யார்? அதனை செயல் முறையில் முதன் முதல் நடத்திக் காட்டியவர் யார்?

8. பெண் மகவை மண்குழியில் தள்ளாது கண்ணெனப் போற்றி காப்பாற்றியவர் யார் ?

9. அனாதைக்குழந்தையை கண்டமாத்திரத்தில் அபசகுனமென கருதிய அக்கால கட்டத்தில் அனாதையை அரவணைப்புச் செய்தது யார்?

10. அனாதைக்கு தனது இல்லத்திலேயே புகலிடம் தந்து புனிதமாக்கியவர் யார்?

11. ஆண்களுக்குரிய உரிமை போன்று அணங்குகளுக்கும் உரிமை உண்டென எடுத்துகாட்டி செயல்வடிவில் நடந்து காட்டியவர் யார்?

12. பெண்ணினத்தார் அவர்களின் பிள்ளைகளுக்கு ஓர் சன்மார்க்க கலைக்கூடம். ஆண்கள் பெண்களை பராமரிக்கும் பொறுப் பேற்றவர்கள் என எடுத்துக்காட்டி, நடந்தும் காட்டியவர் யார்?





பொருளடக்கம்

13. மொழிவேற்றுமை, நிறவேற்றுமை, இன வேற்றுமை நாட்டு வேற்றுமை இவைகளை முற்றிலும் ஒழித்துக்கட்டி, கருநிற ஹஜ்ரத் பிலால் அவர்களை திரு கஃபாவின் மாடியில் பாங்கொலி கொடுக்கச் செய்தவர் யார்?

14. பெண்களுக்கு சொத்துரிமை உண்டு என எடுத்துக்காட்டி நடந்து காட்டியவர் யார்?

இது போன்றே குடும்பம் சமுதாயம், நாட்டுப்பற்று, பிறந்த நாட்டின் பெருமையை மனத்தில் இருத்தி மகிழவைத்து வெற்றி கொண்டவர்களில் அண்ணல் நபியவர்களுக்கு மேலான எவரும் அகிலத்தில் இல்லை! என்பது தான் உண்மை.

**I. அடுத்தும் ஓர் கட்டத்திற்கு வாருங்கள் :—**

உலகின் **முதன்மை சரித்திர நாயகர் முஹம்மது நபி(ஸல்) அவர்கள்** !சமீபத்தில் நடந்த இன்டர்நெட் கணிப்பில் திரு நபி முஹம்மது(ஸல்) அவர்களே முதலிடம் பெற்றுள்ளனர்.

அதாவது மைக்ரோ சாப்ட் எனும் நிறுவனம் நடத்திய உலகத்தின் சரித்திரத்தில் மார்க்கம், மதம், தத்துவம் இவற்றில் யார் முதன்மை பெற்றவர் என்ற கணிப்பு இன்டர்நெட்டில் நடத்தப்பட்டது. ஆன்லைன் வாக்களிப்பில் இதுவரை பதிவாகி உள்ள வாக்குகளில் 74 சதவீதத்திற்கு மேற்பட்டவர்கள் நபி முஹம்மது (ஸல்) அவர்களே முதன்மையானவர்கள் என்று வாக்கு அளித்துள்ளனர்.

அடுத்து (நபி, ஈஸா(அலை) என இஸ்லாமியர்களால் அழைக்கப்படும்). கிருஸ்தவமத நிறுவனர் ஜீஸஸ் என அழைக்கப்படும் அவர்களுக்கு, 16 சதவீதமும், அதனைத் தொடர்ந்து அன்னை தெரஸா 3 சதவீதமும், ஜோஸப்ஸ்மித், 2 சதவீதமும், புத்தர், மோஸஸ்(மூஸா) தலா 1 சதவீதமும் பெற்றுள்ளனர்.

இன்டர்நெட் மற்றும் மின்னனு சாதனங்களை கிறிஸ்து வர்கள் யூதர்கள் அதிகமாக பயன் படுத்துவதும் மைக்ரோசாப்ட் முழுக்க முழுக்க அவர்களுடையது என்பதும் யாவரும் அறிந்ததே.

எந்தக்காலத்திலும் எந்த மீடியாவிலும் எந்த சமயத்திலும் இம்மை மறுமையின் தலைவர், இறைவனால் உலகிற்கோர் அருள் கொடையாக அனுப்பப்பட்டவர்கள், அழகிய முன் மாதிரியானவர்கள், இரக்கமும், கருணையும் உடையவர்கள் எனப்பல கோணங்களில் அல்லாஹ்வினால் புகழப்பட்ட அல்லாஹ்வினாலும் அவனது வானவர்களாலும் அனுதின மும் ஸலவாத்து(வாழ்த்து) சொல்லப்பட்டுக் கொண்டிருக்கும்




பொருளடக்கம்

பெருமானார் முஹம்மது (ஸல்) அவர்களுக்கு என்றும் முதல் ஸ்தானம் தான்.

**தகவல்,**

**இன்ஜினியர் இக்பால்,**

**மணிச்சுடர் ஹிஜ்ரி 14,**

**துல்கஅதா 22,**

**29.2.2000 — செவ்வாய் வெளியீடு.**



பொருளடக்கம்